உ

ஸ்ரீ மஹா கணபதி துணை.
திருச் செந்திலாண்டவன் துணை.
வேலுமயிலுந்துணை.

UCCENTUR TALA PURANA VACAN

# ச்செந்தூர் தல புராண வசனம்

திருச்செந்தூர் முருகக்கடவுள் உத்திரவின்படி
**ஸ்ரீ வென்றிமாலைக் கவிராயர்**
பர்டி தலபுராணப் பாடலுக்கு மொழிபெயர்ப்பு.

LIMALAIK KAVIRAYAR






by


தொகுத்தவர் :
**திருப்புகழ் சு. திருவாரியர்,**
திருப்புகழ் மணி மந்திரம்,
ஸ்ரீ முருகானந்த சங்கீத திருப்புகழ் ஸபா,
திருச்செந்தூர்.


ARIYAR (S)


பிரசுரகர்த்தர் :
**டி. பாணி கம்பெனியார்,**
கடாசல செட்டி தெரு, திருவல்லிக்கேணி,
ம த ரா ஸ்.

1950

[ரூ. 1—8—0






# நூல் அட்டவணை.

உ

திருச் செந்திலாண்டவன் துணை.



# முகவுரை.

ஸ்ரீ ஜெயந்தீபுரம், திருச்சீரலைவாய் எனப் பல, நாமங்கள் பெற்றிருக்கும் திருச்செந்தின் மாநகரத்தில் அருள்வடிவமாக எழுந்தருளியிருக்கும், ஸ்ரீ முருகக்கடவுளின் பல, அரிய திருவிளையாடல்களைக் குறிக்கும் இந்நூலாகிய திருச்செந்தூர் தல புராணத்தை வசன நடையாக, அவனருள் துணைக் கொண்டு எழுதியுள்ளேன். இந்நூலை சர்வான்ம கோடிகளிடத்தும், உயிர்க் குயிராய், ஒளிக்கொளியாய், உணர்வுக்குணர்வாய் நின்று, பிரகாசித்து அடியவரிச்சையில் எவை எவை யுற்றிடு அவை தருவித்தருள் பெருமானாகிய திருச்செந்திலாதிபனுடைய திருவடிக்கே சமர்ப்பிக்கிறேன். வேத சாரமாகிய இத்தலபுராணப் பாடலுக்கு, எழுதியுள்ள, இவ்வசன நடையில், சொல்குற்றம், பொருள் குற்றம், முதலியன இருப்பின், மன்னித்து, எனை ஸ்ரீ முருகக் கடவுளுடைய அருள்பிரசாத அநுக்ரஹத்துக்கு, பாத்திரனாகும்படி ஆசீர்வதிக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

இந்நூலை தினந்தோறும், பாராயணம் செய்து வருபவர்கள் சகல சௌபாக்யங்களையும் பெறுவர் என்பது திண்ணம். இது முருகன் சுகமுனிவருக்கு இட்டகட்டளை.

ஆகவே, அன்பர்கள் யாவரும் இந்நூலைத் தினந் தினம், பாராயணம் செய்து சகல செல்வ மிக்கப் பெறுவாழ்வு பெற்றுய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன். சுபம்.

திருப்புகழ்




உ

தலபுராணம் பாடிய

# ஸ்ரீ வென்றிமாலைக் கவிராயர் சரித்திரம்.

---

இந்நூலாசிரியராகிய வென்றிமாலைக் கவிராயர் இன்றைக்கு சுமார் 300 முன்னூறு வருஷங்களுக்கு முன்னர், இத்திருச்செந்திலம்பதியில் "செந்தில் இரண்டாயிரம்" என்று கூறப்பட்டுள்ள திரிசுதந்திரர் குலத்திலே அவதரித்தார். வயதுவந்ததும், திருச்செந்திலாண்டவன் திருக்கோயிலில், திரிசுதந்திரர்களுக்கு உரிய, பல, கைங்கரியங்களில் ஒன்ருன திருமடப்பள்ளிக் கைங்கரியத்திலமர்ந்து ஸ்ரீ முருகனுக்கு, இன்னமுது தயார் செய்து வந்தார். ஒருநாள், திருவமுது தயார் செய்ய தாமதமாகவே, தலத்தா ரெனப்படும் கோவில் நிருவாக திரிசுதந்திரர்கள், இவரை, நையப் புடைத்துத் தண்டிக்கவே, அதைப் பொறுக்க முடியாமல், மனமுடைந்து கோயில் முன்னிருக்கும் சமுத்திரத்தில் விழுந்து உயிர் துறக்க எண்ணி சமுத்திரத்தில் வீழ்ந்து விட்டார்.

பவசாகரத்தினின்று கரையேற்றும் கருணைவள்ளலாகிய முருகன், திருவண்ணுமலையில் கோபுரத்துச்சியிலிருந்து வீழ்ந்த ஸ்ரீ அருணகிரி நாதரைக், காத்துத் திருப்புகழ் பாடும்படி அருள் செய்தவாறு, கந்தவேள் ஓடி வந்து சமுத்திரத்தில் வீழ்ந்த, வென்றி மாலையைக் கைதூக்கிக், கரை சேர்த்து அருள் நோக்குடன் "அன்பனே நீ நமது திருச்செந்திலம் பதியின், தல புராணத்தை இனிய தமிழில் பாடு." என உத்தரவு செய்யவும், வென்றி மாலைக் கவிராயர், திருச்செந்தி லாண்டவனை, முகக் கண்ணுல் தரிசித்து அடியற்ற மரம்போல் அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கி எழுந்து, கண்ணீர் சொரியக் கை கூப்பித் தொழுது, சர்வலோக நாயகரே, தமியேனுக்குத் தமிழில் பாடும் திறமை, கொஞ்சமும் இல்லையே, நாயினுங் கடையேனுகிய

என்னை, சமுத்திரத்தினின்றும், கைகொடுத்துக் கரையேற்றி, வேதங்களும் ஆகமங்களும், சகலதேவர்களும் காணமுடியாத, காக்ஷியை தமியேனுக்கு அளித்த கருணைவள்ளலே, தமியேன் எப்படி, இப்பெரிய, திருச்செந்தூர் தலபுராணத்தைத் தமிழில் பாடுவேன் என, பிரார்த்திக்க, அதற்கு, கலியுகவரதரான ஸ்ரீமுருகக் கடவுள் 'அன்பனே, நீ, திருநெல்வேலிக்கு சமீபமா யுள்ள செவ்வல் என்னும் கிராமத்திலிருக்கிற கிருஷ்ண சாஸ்த் திரியிடம் செல். அவர், உனக்கு, இத்திருச்செந்தூர் தலபுராணத் தைத் தமிழில் பாடும்படிச் சொல்லித்தருவார்' என ஆக்ஞை செய்து மறைந்தருளினர்.

ஆண்டவன் மறைந்ததும் வென்றிமாலைக் கவிராயர், ஆண்ட வனைக் காணுதவராகி, ஐயனே, அடியேன் செய்த தவப்பேறுதா னென்னே. எனக் காதலாகி, கசிந்து, கண்ணீர் மல்கி, ஆண்ட வனுடைய அனந்த நாமங்களையும், பலமுறை ஓதி, விழுந்து நமஸ்க்கரித்து, எழுந்து வணங்கி, பெருமானுடைய ஆக்ஞையை, சிரமேற் கொண்டு, செவ்வலைநோக்கி, விரைந்து நடந்தார்.

அன்றிரவே, செவ்வலிலுள்ள, கிருஷ்ண சாஸ்த்திரி கனவி லே, கந்தக்கடவுள் தோன்றி, 'சாஸ்த்திரியே, என்னுடைய இரண் டாயிரத்தாரில் ஒருவனுகிய வென்றிமாலைத்திரிசுதந்திரனை, திருச் செந்தூர் தலபுராணத்தைத் தமிழில் பாடுவதற்கு, உன்னிடம் அனுப்பியுள்ளோம். வடமொழியிலிருக்கிற திருச்செந்தூர்த் தல புராணத்தை, நீ அவனுக்கு இனிய செந்தமிழில் மொழிபெயர்த் துச்சொல். அந்தக்ஷணமே அவன் பாடுவான்' எனக்கூறி மறைந் தருளினர்.

கிருஷ்ண சாஸ்த்திரியும் கனவிலிருந்து விழித் தெழுந்து முருகக்கடவுள் தனக்கு, உத்தரவு செய்தமையை, நினைந்து, மெய் சிலிர்த்து ஆனந்தக் கண்ணீர் சொரிய, திருச்செந்தூர் திக்கு நோக்கி, பல தடவை நமஸ்க்கரித்து எழுந்து, விபூதி தரித்து, சூரிய உதயம் வரை, ஆண்டவனுடைய, பல நாமங்களையும் உச்சரித்துக் கொண்டிருந்தார்.

சூர்யோதயமானதும், நீராடிக் காலைக்கடனை விரைவில் முடித்துக் கொண்டு, வென்றிமாலையின் வரவை, எதிர்நோக்கி ஆவலுடன் நின்று கொண்டிருக்க, வென்றிமாலையும் செவ்வல் சேர்ந்து கிருஷ்ண சாஸ்த்திரி வீட்டை விசாரித்து, வந்து கொண்டிருக்கையில், கிருஷ்ண சாஸ்த்திரி, குறிப்பால், வென்றிமாலையைத் தெரிந்து, எதிர்கொண்டு அழைத்துவந்து, வணங்கி, "சர்வலோகநாயகன், திருச்செந்திலாண்டவனல் தடுத்து, ஆட்கொள்ளப் பட்டு, அருள்வழி சுரந்து திருச்செந்தூர்த் தலபுராணம் தமிழில் பாடு, என அனுக்ரஹித்து, பாடும் வகைக்கு தமியேனிடம் அனுப் பப்பட்ட, அண்ணலே, வருக, வருக, எனத்தோத்திரம் செய்து ஆசனம் கொடுத்து அமரும்படி வேண்ட, வென்றி மாலையும் கிருஷ்ண சாஸ்த்திரியாரை வணங்கி, சுவாமீ, வடமொழியிலுள்ள திருச்செந்தூர்த் தலபுராணத்தை இனிய செந்தமிழில், பாடுவதற்கு, தேவசேனபதியின் ஆக்ஞைப்படி தங்களிடம் வந்துள்ளேன். தமிழில்பாடும் வகை சொல்லியருளவேண்டும் எனப் பிரார்த்தித்து, நின்ற வென்றிமாலையைத்தம்முன் அமரச் செய்து, ஸ்ரீசண்முகக் கடவுளுடைய திருவடிகளை மனத்திலிருத்தி, வடமொழியிலுள்ள திருச்செந்தூர்த் தலபுராணத்தைத் தமிழில் சொல்லவும் திருச்செந்திலாண்டவன் திருவருளால், வென்றிமாலைக்குக் கடல்மடை திறந்த வெள்ளம் போல் இனிய செந்தமிழில் பாடும் திறமை உண்டாகி திருச்செந்தூர்த் தலபுராணத்தை, பாடி முடித்து கிருஷ்ண சாஸ்திரியை வணங்கி நின்றூர்.

இத் திறமையைக் கண்டு கிருஷ்ண சாஸ்த்திரி பெரு வியப் படைந்து முருகக் கடவுளுடைய திருவருளைத் தியானித்து வென்றிமாலைக் கவிராயரை ஆசீர்வதித்து அருள்வழி பாடிய தலபுராணத்தை திருச்செந்திலாண்டவன் சந்நிதியில் அரங்கேற்றும் படிப் பணித்து, திருச்செந்திலம்பதிக்கு அனுப்பிவைத்தார்.

வென்றிமாலைக் கவிராயரும் செந்திலம்பதி வந்து, எல்லையை வலம்வந்து, சண்முக விலாசம் சேர்ந்து, அங்கு கூடியிருந்த தலத்தார், மற்றும் செஞ்சொல் புலவர்களையும் வணங்கி, தனக்கு முருகன் ஆக்ஞை செய்ததையும், அதன்படி, தாம் செவ்வல்

சென்று, தலபுராணத்தைத் தமிழில் பாடி வந்துள்ள விபரத்தையும் எடுத்துச் சொல்லி, இத்தல புராணத்தை இங்கு அரங்கேற்ற அவா கொண்டேன். இருந்து கேட்டருள வேண்டுமெனப் பிரார்த்தித்து தலபுராண ஏட்டை அவிழ்க்கவும், அங்கு கூடியிருந்தவர்கள் வென்றிமாலையை நோக்கி, மடப்பள்ளிக்காரனுவது தல புராணம் பாடுவதாவது, என்னே விந்தை, எனப் பரிகாசம்செய்து வென்றிமாலையை நையப் புடைத்துவிட்டார்கள். வென்றிமாலையும் மனமுடைந்து தலபுராணத்தை தமிழில் பாடி எழுதியுள்ள திரு ஏடுகளை சமுத்திரத்தில் வீசி எறிந்துவிட்டு, தானும் விழப் போகவே, ஆண்டவன் திரும்பவும் தடுத்தாட்கொண்டு, வென்றி மாலையே, இது நம்முடைய திருவிளையாட்டு, வருந்தாதே. இதனுல் உலகெல்லாம் நன்மையடையும். என அருளி மறைந்தார். இவ்வதிசய காக்ஷியை வென்றிமாலைக் கவிராயர் கண்டு களித்து அவனருளை வியந்து, கோயிலுட்சென்று ஆண்டவனை தரிசித்து வழிபட்டு, ஆங்கோர்பால் இருந்து, தவத்தைச் செய்துகொண்டு இருந்தார்,

சமுத்திரத்தில் வென்றிமாலைக் கவிராயரால் எறியப்பட்ட ஏடுகள், சமுத்திர அலைகளினுல், யாழ்ப்பாணத்துக் கரையில் ஒதுக்கப்பட்டு, அதுசமயம் சமுத்திரக்கரைக்கு வந்த ஒருவரால் கண்டு, எடுத்துப் பார்த்து, அதில், இனிய செந்தமிழில் பாடியுள்ள திருச்செந்தூர்த் தலபுராணம் இருப்பதைத் தெரிந்து, பேரானந்தமடைந்து, தன் வீட்டிற்கு கொண்டுபோய் பூஜையில் வைத்து தினந்தோறும் பூசித்துவந்தார்.

அந்நாளில், யாழ்ப்பாணத்தில், எல்லா தெருக்களிலும், சக்கர சுவாசம் என்கிற விஷக்காற்று பரவி, மக்களை மாய்த்து வந்தது. இந்தத் தலபுராண ஏடு பூஜையில் வைத்து பூசித்துவரும் தெருவில் மட்டிலும், விஷக்காற்று பரவாமலும், மக்கள் யாதொரு குறையுமின்றிச் சந்தோஷத்துடன் வாழ்ந்துவருகிற அதிசயத்தை மற்ற தெருவில் உள்ளவர்கள் விசாரித்து, இந்த தலபுராண ஏடு இந்தத் தெருவிலிருப்பதால் இங்கு விஷக்காற்று பரவாமலும், மக்கள் சந்தோஷத்துடனிருக்கும் விஷயம் தெரிந்து, அந்த ஏட்டு பிரதியை

லுள்ள பாடல்களை, யாழ்ப்பாணத்தார் அனைவரும் ஒவ்வொரு பிரதி எழுதி, தத்தம் வீட்டில் பூசையில் வைத்து பூசித்து வர, விஷக்காற்று சூரியனைக்கண்ட பனிபோல யாழ்ப்பாண நகரை விட்டு நீங்கியது. மக்களும் குதூகல மடைந்தார்கள். திருச்செந்திலாண்டவனது திருவருளை நினைந்து நினைந்து மகிழ்ந்தனர்.

திருச்செந்தூரில் கந்த சஷ்டி திருவிழா வரவும், யாழ்ப்பாண நகரவாசிகள் வழக்கம்போல் திருச்செந்திலாண்டவனைத் தரிசிக்க, திருச்செந்தூர் வந்து, ஆண்டவனை தரிசித்தபின்னர் அங்கிருந்த பெரியோர்களிடம், யாழ்ப்பாணத்தில் விஷக்காற்று பரவி கொடுந் துன்பம் விளைவித்து வந்ததையும், முருகக்கடவுள் திருவருளால் திருச்செந்தூர் தலபுராண ஏட்டுப் பிரதிகள் யாழ்ப்பாணத்துச் சமுத்திரக் கரையில் ஒதுங்கினதையும், அதைக் கண்டு எடுத்து பூசையில் வைத்து பூசித்து வந்தவர் இருக்கும் தெருவில் விஷக் காற்று தலை காட்டாது மக்கள் மகிழ்ச்சியோடிருந்ததையும் அது கண்டு யாழ்ப்பாண நகர்வாசிகள் அந்தத் தெருவிலுள்ள அதிசயத் தை தெரிந்துகொள்ள முற்படுகையில், திருச்செந்தூர் தலபுராண ஏட்டின் மகிமையால்தான் என்பது தெரிந்து, ஒவ்வொரு நகரவாசி யும், ஒவ்வொரு பிரதி எழுதி பூசையில் வைத்து பூசித்துவர, விஷக்காற்றே இருந்த விடம் தெரியாமல் ஓடிவிட்டதாகவும், மக்கள் எல்லோரும் சௌக்யமா யிருப்பதாகவும், சவிஸ்த்தார மாகச் சொல்லி, திருச்செந்தூர் தலபுராணப் பிரதிகளையும் காட்டினர்.

இதைக்கேட்ட, திருச்செந்தூர்வாசிகள் வியந்து, தலபுராணத் தின் மகிமையைத் தெரிந்து அந்த யாழ்ப்பாணத்தாருடன் வென்றி மாலைக் கவிராயர் தவம் செய்துகொண்டிருந்த இடம் சென்று கவிராயரைக் கண்டு வணங்கி, சுவாமீ, நாங்கள் தங்களது பெரு ஙமைகளை அறியாமல் செய்த குற்றங்களுக்கு எங்களை மன்னித்து அருளவேண்டுமென வணங்கிப் பிரார்த்தித்து வென்றிமாலைக் கவிராயரை, திருச்செந்திலாண்டவன் சந்நிதிக்கு, உபசாரத்துடன் அழைத்து வந்து தரிசனம் செய்துவைத்து, பட்டுப் பரிவட்டம் கட்டி, யானைமீதேற்றி, பற்பல வாத்யங்களும், வேதகோஷங்க

ளும், தமிழ் மறைகளும் முழங்க, நான்கு வீதிகளையும் வலம்வந்து சண்முக விலாசத்தில் எழுந்தருளச்செய்து வணங்கி, சுவாமீ, திருச்செந்தூர்த் தலபுராணத்தை, தேவரீர் வாயால் அரங்கேற்றியருள வேண்டுமெனப் பிரார்த்திக்க, வென்றிமாலைக் கவிராயரும் முருகக் கடவுளுடைய திருவிளையாடலைத் தெரிந்து, உளம் மகிழ்ந்து அடியவர்கள் வேண்டுகோள்படி திருச்செந்தூர் தலபுராணத்தை இனிய தமிழில் பாடி அரங்கேற்றினர். அங்கு கூடியிருந்தவர்கள் எல்லோரும் கேட்டு மகிழ்ந்து, முருகனைப் பணிந்து தோத்திரம் செய்தார்கள்.

வென்றிமாலைக் கவிராயரும், திருச்செந்தில் கந்தமாதனத்தில் சிலகாலம் தவம் செய்து கந்தப்பெருமானுடைய ஜோதியில் கலந்தருளினர்.

**குறிப்பு:**—யாழ்ப்பாணத்தில் கந்த சஷ்டி ஆறு தினங்களிலும் இத்திருச்செந்தூர்த் தலபுராணத்தை விசேஷமாகப் பாராயணம் செய்து மக்கள் மகிழ்வெய்துவதை இன்றும் காணலாம்.

சுபம். சுபம். சுபம்.






உ

திருச்செந்திலாதிபன் துணை

# திருச்செந்தூர்த்தல புராணம்

---

## காப்பு

ஊற்றெடுத்து வண்டோலிடு, மும்மதத்
தாற்ரெ ழுக்கி னருவியஞ் சாரல்வா
யேற்று கைக்கு, மிறைவர்க்கு, முந்திய
மாற்றிலாக்களி, யானையை, வாழ்த்துவாம்.

கடவுள் வாழ்த்து

---

## சிவபெருமான்

வேறு

இருப்பதப், பிரணவத், தியல்பென், ருலமே
சருப்பதச் செய்கைய, தாக்கித், தங்கவான்
பருப்பதச் சிலைக்கரப், பரமன் ருமரைத்
திருப்பதத் துணைமலர், சென்னி, சேர்த்துவாம்.

---

## பார்வதி

வேறு

ஊடலினுடைந்த சங்க மொளிர்சடைப்பிறை வெண்கீற்றின்
மாடுறப் பொருத்தும் போழ்து, மகிழ் நருட்குறித்து நோக்க
வேடுறு தளவப் போதி னிளநிலா முறுவல் பூத்துப்
பீடுறுமதியிற்செய்த பெண்ணடி வணக்கம் செய்வாம்.

## விநாயகக் கடவுள்

எழுத்துஞ் சொல்லும் பொருளு மிணக்குற
வழுத்துஞ் சீர்ச்செயந் திப்பதி மான்மியம்
விழுத்த குந்தமி ழாற்சொல வேதமே
பழுத்த குஞ்சரன், பாதங்கள் போற்றுவாம்.

---

## வயிரவர்

கிஞ்சு கந்தரு வாய்க்கலைக் கிள்ளையா
னஞ்சு கம்மிலொன் றற்றிடக் கிள்ளியே
மிஞ்சு கந்தொறு, மிக்குறுங்கார்கிறக்
கஞ்சு கன்பொற் கழலிணை போற்றுவாம்.

---

## வீரபத்திரர்

ஆளுடைத்தனியாதியை நீத்தொரு
வேள்வி முற்ற விரும்பிய தக்கனார்
நீள்சிரத்தை நிலத்திடை வீட்டிய
வாள்படைத்த மதலையைப் போற்றுவாம்.

---

## சுப்பிரமணியக் கடவுள்

வேறு

வண்டடை, கிடந்தின், னிசைமுரன், றெழுதேன் வாய்மடுத்
துண்டுகா லுழக்க
விண்டுடைந் தலரும், கடம்பணி, தடந்தோள் வெற் பெலாம்,
பொற்புலாஞ் சுடர்வேற்
கெண்டையந் தடங்கட், குறக்கொடிகளபக்கிளரொளி
முலைவனப் பெழுதக்
கண்டு கண்டுள்ளங் களிப்பருச் செந்தூர்க் கந்தனை வந்தனை
புரிவாம்.

## வேலாயுதம்

அரமடங்கலுந், தழைசெல, மூலமே லாயுத்
தரமடங்கலும், பொருவுசூர், மாமுத றடிந்தே
நரமடங் கலுந், துதிப்பருங் குமரனட் கமலக்
கரமடங்கலும், கலஞ்செய்வே லென்கவிக் கருதது.

---

## ஐயனர்

வேறு

அரிய பூரணை புட்கலையாமிரு
தெரிவை மார்முலைச் செங்களபத் தொளி
விரவு சுந்தர மேருவொப் பாம்புயக்
குரிசி றண்டைக், குரைகழல், போற்றுவாம்.

---

## வீரவாகுமூர்த்தி

வேறு

வடுத்தமா விருபினவாகச் சோதி வேல்
விடுத்தவா னவனடி விடாது போற்றியே
யடுத்தவா னவர்சிறை யகற்றச் செம்மணி
கொடுத்தவாள் வீரவாகுவை, வழுத்துவாம்.

---

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

வேறு

அறுகா லுழுக்கச் சிறுமுகைத்தே னறுபாயுஞ்சோணாட்டி
லுறுகாழியில்வந்தவரித்தெனுள்ளத் திருந்து சமணரெனுங்
குறுகார் தமைக்கட்டழித்துமையாள் கோமான்சரணந்தனைப்போற்
றுஞ் சிறுகான் முளையினிருசரணச் செந்தாமரை வந்தனைபுரிவாம்

## திருநாவுக்கரசு நாயனுர்

கலகமிடும் பொய்ச் சமணர் குழாங்கட்டிக் கடலினிடைப்புகுத்த
வுலகம் பரவவிடுத்தகல்லே யுயரும் புணையாக் கரையேறி
யிலவவிதழோர் பங்கமைத்த வெம்மான், கமலத்தாள் பழிச்சுஞ்
சொலவின், புணையாப் பவக் கடலுங் கடந்தான் சரணத்துனே
துதிப்பாம்.

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

அரவக் கடலி னிடைப்பாம்பி னமளி படுத்ததுழாய்முகிலும்
விரைகொப்புளிகுஞ் செழுங்கமல வீட்டுக்கிறையு மினுங்காணு
விருபொற்சரணஞ் சிவப்பூர விரவிற் பரவைக்கிருந் தூது
பரவப் பணித்த கவிராசன் பாதமெமது தலைக் கொள்வாம்.

---

## மாணிக்கவாசக சுவாமிகள்

வேறு

கொள்ளைவண்டிருந்து, விருந்துணச் செழுந்தேன் கொப்புளித்
தலர்ந்த பூங்கொன்றை
துள்ளு தெண்டிரை நீர் முடித்தசெஞ்சடிலச் சோதி
செங்கரம்பிடித்தெழுதத்
தெள்ளு செந் தமிழிற் கோவை நானூறுஞ் செப்பிய நற்கவிராசப்
பிள்ளைசெஞ்சரணக், கிரணவாரிசப்பிரசநாண் மலரிணை துதிப்பாம்.

---

## அருணகிரிநாத ஸ்வாமிகள்

சீருறு குமரவேட்குத் திருப்புகழ் வகுப்பந்தாதி
நேருறு மயில்வேல் விருத்தம் கிரையனுபூதி ஞானம்
தேருறு பூதிசொன்ன தேன்மொழி வள்ளால் பூவில்
ஆருளர் எந்தாய், நின்பொன்னணி மலரடிகள் போற்றி.

## ஸரஸ்வதி

ஒருதனித் திகிரிக், கதிர் நிறங்கவின வொளிர் செய்
பொன்னுடை மருங்கிலங்கக்
குருமணி மௌலியிலகி வில்லிமைப்பக் குறுநகை முறுவன்முத்
தரும்ப
மருமலர்க், கழுநீர் புத்தகம் வரத மணி வடமலர்க் கரம் வயங்கத்
திரு வருணிறைந் தென்னுளங் குடி புகுந்த செல்வி,பொற்
சேவடி பணிவாம்.

கடவுள் வாழ்த்து முற்றிற்று
ஆகவிருத்தம் 15.

---




# 1-வது அத்யாயம்.

## நைமிசாரணியத்தில் சூதமுனி சென்றது

---

தேவதைகள், பிரத்யக்ஷமாக விளங்கும்- நைமிசாரண்யத்தில், (பிரம்மனால் விடபட்ட சக்கரத்தின் முனை எந்த இடத்தில் தெரித்து விழுகின்றதோ அந்த இடம் தவத்திற்கு உரித்தானது எனப்பிரமன் உரைத்தபடி, சக்ராயுதம் பொடிந்து விழுந்த காரணத்தால் நைமிசம் எனப் பெயர் பெற்றது) தவம், தர்மம் இவைகள் குன்றாது சதா, ஈஸ்வரத்தியான பராளான, கௌதமர், வசிஷ்ட்டர், மங்கணர், அகத்தியர், சத்யர், வேத்வாதியர், ஆபத்தம்பர், மாண்டவ்யர், வாமதேவர், விரூபாக்ஷர், விஸ்வாமித்திரர், பிருகு, ஜர்ஜரர், சரபங்கர், காத்யாயனர், கர்கர், கவஷர், தாம்ரர் ஆணி மாண்டவ்யர், வசு மனு மௌனபோஜர், பராசரர், பன்னுசனர், மதங்கர், தௌம்யர், கணுதிபர், பரத்வாஜர், ஆங்கீரசர், சிலாதர், ரிஸ்யசிருங்கர், ஜாபாலி, அத்திரி, ஜமதக்னி, சனேஸ்வரர், காசிபர், ஆஸ்வலாயனர், போதாயனர், சாண்டில்யர், முதலிய மஹரிஷிகள் இவர்களது சிஷ்யர்கள். இந்த சிஷ்யர்களின் மாணுக்கர்கள் அருந்ததிக் கொப்பான தங்களது தர்ம பத்தினிகள் ஆகவனீயம் தக்ஷணுக்னி காருகபத்தியம் முதலிய முத்தீகள் விருந்தினர்கள். தங்கள் வழி தோன்றிய பெரியோர்கள் நான்கு வேதங்களையும் முற்று முணர்ந்த அந்தணர்கள் முதலிய எல்லோர்களும் பரமானந்தத்தில் வீற்றிருக்கும் சமயம் சகல புராணங்களையும் உபதேசிப்பவராயும் மஹாயோகியாயும் மரவுரிமான்தோல் முதலிய ஆடைகள் தரித்தவராயும் ஜடாதாரியாயும் விபூதி ருத்ராக்ஷம் விளங்கும் சிவஸ்வரூபியாயும் உலகம்யாவையும் அறிவு ரூபமாகவே பார்ப்பவராயும், திரோதமலமாறும் மனத்தினராயும் சதா ஆனந்தக்கண்ணீர்

மல்கும், கண்களை உடயவராயும் வியாச, சிஷ்யரெனப்படும் சூத முனிவரர் உச்சி கூப்பியகயினராய் அங்கு, வரவும் அங்கிருந்த மஹரிஷிகளும் மற்றும் யாவர்களும் எழுந்து நின்று, கைகூப்பி வணங்கி அஞ்சலி செய்து, முகமன் கூறி தர்ப்பாசனத்தில் அமரச் செய்து, அர்க்யம், பாத்யம் ஆசமனீயம் கொடுத்து, மஹாவிஷ்ணு வடிவமாக வந்த சூத முனிவரை நோக்கி ஐய, தங்கள் வரவால் நாங்கள் உய்ந்தோம், பெருமகிழ்ச்சி யடைந்தோம், எனக் கூறி வணங்கி நின்றனர்.

வணங்கி நின்ற மஹரிஷிகளையும் மற்றும் யாவர்களையும், சூத முனிவர், உள்ளக் களிப்புடன் நோக்கி, உங்களுக்கு வேண்டுவது யாது என, வினவ - சுவாமி, முன்னம் தாங்கள் எங்களுக்கு கந்த புராணத்தில் ஸ்ரீ முருகக் கடவுள், தாரகன், சிங்க முகன் சூர பதுமன் முதலிய அசுரர்களை அடக்கி சூரனைச் சேவலும், மயிலுமாகச் செய்து, அந்த மயில் மீதமர்ந்து, சேவலை, ஞானக் கொடியாக்கி கேழ்க்க, முத்தியளிக்கும், திருச் செந்திலம்பதியில் வந்து அமர்ந்து இந்த்ராதி பிரம்ஹ விஷ்ணு முதலிய தேவர்களுக்கு அனுக்ரஹம் செய்த விபரம் சொல்லக் கேட்டு பரமானந்தம் அடைந்தோம்.

அப்படிப்பெருமை வாய்ந்த செந்திலம் பதியும் சிந்துதீரமும், அந்தந்தப் பெயர்பெற்ற காரணத்தையும் கந்த மாதனம் வந்தவிபரமும், 24. தீர்த்தங்களின் மகிமைகளையும் இரண்டாயிரத்தாரெப்படும், திரிசுதந்திரர் வரலாற்றையும், மற்றும் பெருமைகளையும் சவிஸ்த்தாரமாக, எடுத்துரைக்க வேண்டுமெனப் பிரார்த்திக்க, ஆணவமலம், மாயாமலம், காம்யமலம், எனப்படும் மும்மலத்தையும் கெல்லி எறிந்த சூதமுனிவர், மனமகிழ்ந்து எழுந்து, திருச்செந்திலம்பதி திக்குநோக்கி கைகூப்பி வணங்கி, ஆனந்தக்கண்ணீர் ததும்பக்கருணைகூர் முகங்களாறும், கரங்கள்பன்னிரெண்டும் கொண்டமுருகக் கடவுளை மனதில் தியானித்து மஹரிஷிகளே முன்னம், வியா சமுனிவர் சுகமுனிவருக்கு உரைத்த இந்த புண்ய சரித்திரத்தை, நாம், உங்களுக்கு உரைப்போம். மனம் வேறு படா

மல் குரு.சிஷ்யபாவ மாய்க் கேழ்ப்பீர்களாக என உரைத்தார் சூதர்.

முதல் அத்யாயம் முற்றிற்று.

---

## 2-வது அத்யாயம்.

வியாசர், சுகருக்கு உபதேசித்தது. கேளீர், நைமசாரண்ய வாசிகளே! மரகத மணிபோன்ற ஒப்பற்ற திரு மேனியில் விபூதி ருத்ராக்ஷத்தால், பிரகாசிப்பவரும் பொன்னிறம் போன்ற ஜடா மண்டல தாரியும், நல்வினை தீவினை யெனப்படும் இருவினைகளை அகற்றியவரும். ருக் யஜுர், சாமம் அதர்வணம் என, நான்கு வேதங்களாக வகுத்து, அதன் சாரங்களை புண்ய புராணங்களாகச் செய்து உபதேசிப்பவரும், உமாபதியின் திவ்யசரணாரவிந்தத்தின் அனுக்ரஹத்தினல் உலகம், யாவையும், மனத்துள் காண்பவரு மான, வேதவியாசர், நல்வழி காட்டும் புண்ய கங்கைக் கரையில், வந்து அமர்ந்தார். அந்தச்சமயத்தில் நான்கு வேதங்களையும், கற்றுணர்ந்த, சுக முனிவர், அங்கு வந்து வேத வியாசரை, கை கூப்பி நமஸ்கரித்து, அஞ்சலி செய்து சுவாமி தாங்கள் முன்னொரு நாள் எனக்கு பொதிகை மலையில் உற்பத்தியாகி தென் சமுத்திரத் தில் சங்கம மாகும் தாம்பிரபரணி நதிக்குத் தென்பால், சமுத் திரக்கரையில், உள்ளதும், கந்த புஷ்கரணி, முதலாகிய திவ்ய தீர்த்தங்களையுடையதும், முருகன் பிரத்யக்ஷமாக, விளங்கக்கூடி யது மானசெயந்தீபுர மஹாத்மியத்தை, சங்க்ரம மாக உபதேசித் தீர்கள். அப்படிப்பெருமை வாய்ந்த மூர்த்தி, தலம், தீர்த்தம், பொருந்திய, செயந்தீ புர வைபவத்தைக் கருணைகூர்ந்து தமியே னுக்குச், சவிஸ்த்தாரமாகச்சொல்லி யருளவேண்டுமெனப் பிரார்த் திக்கவும், ஐயம், திரிபு, அறியாமை, எனும் முக்குற்றங்களையும், விலக்கிய சுகமுனிவனை வேத வியாசர், சந்தோஷக்குறிப்பால் உற்று நோக்கி, சுகமுனியே, நீ பிரார்த்தித்தது மிகவும் நல்லது.

கூர்மையானதும் ஒளிபொருந்தியதுமான, வேலாயுதத்தைத் தரித்தவரும், அடியார்களுடைய அபீஷ்டத்தைப் பூர்த்தி செய்பவராயுமுள்ள சண்முகக் கடவுள் நிலைபெற்றியங்கும், செயந்தீபுரவைபத்தைச் சொல்வோம். சோம்பலை நீக்கி ஒன்று பட்டமனத்துடன் கேழ்ப்பாயாக.

சுக முனியே!

ஞான வீட்டுக்கோர், திரவுகோல், கடாவுடைநடுவன்
மான சோத்திரக் கத வெட்டி யோகத்தின் பதிப்பா
ரான, நெஞ்சகத் திருஞ்சுடர், விளக்கதாமமரா
சேனை காவலற், குரியதாஞ், செயந்தி நன்னகரம்.

திருச் செந்தூரானது, ஞான வீட்டுக்குத்திறவு கோலாகவும், யமனுடைய பட்டினமாகிய மானசோத்திர நகரை, அடைக்கும் கதவாகவும், இயம நியம, ஆசன, பிராணாயாம், பிர்த்யாகார, த்யான, தாரண, சமாதி, எனப்படும் அட்டாங்கயோகத்தில் தலை சிறந்தவர்களின் இருதயத்தில் பிரகாசிக்கக் கூடிய விளக்காகவும், தேவசேனாபதியாகிய, ஸ்ரீ முருகக் கடவுளுக்கு, உரித்தானதாகவும், விளங்குகிறது.

உடைந்த தெண்டிரை, முகாரம்ப, தீர்த்தத்தோர் பொழுது
படிந்து மும்முறை குமர நாயகன் பதம் பணிவார
மிடைந்த தேவருமுனிவர ரியாவரும் விரைவி
னடைந் தன்னார் பதம்பரவ வீற்றிருந்தருள் புரிவார்.

எந்த மனிதர்கள், நியமத்துடனும், மனஒருமையுடனும், சன்னதிக்கு நேரில்லுள்ள தெள்ளிய அலைகள் வீசுகின்ற வதனாரம்ப தீர்த்தத்தில் ஒருமுறை ஸ்நானம் செய்து ஸ்ரீ முருகக் கடவுளை, மும்முறை தரிசனம் செய்கிறார்களோ, அவர்கள் அந்த சமயத்திலேயே, சகல பாபங்களினின்றும் விடுபடுவதுடன், *தேவர்களும் முனிவரர்களும், மற்றும் யாவரும் விரைந்துவந்து தம்மைப் பணிந்து துதித்து அருள்புரியும் பெறுமையைப் பெறுகிறார்கள்.

---

*ஆராய்ந்து ணைகுங்வா தேவேந்திரசங்கமே. என ஸ்ரீ மத் அருணகிரிநாத ஸ்வாமிகள் தேவேந்திர சங்க வகுப்பில் கூறியதும் காண்க

எவர்கள், மூன்று தினங்கள் வதனாரம்ப தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஒளிபொருந்தியவேலாயுதத்தைத் திருக்கரத்திலேயுடைய ஸ்ரீ முருகப் பெருமானுக்கு நிறைந்த அன்புடன் சோடசோபசார முறைப்படி பூஜை செய்விக்கின்றார்களோ அவர்கள் சிறந்த புண்ய வான்களாகி மும்மதங்களை யுடைய ஐராவதத்தின் மீது அமரும் இந்திரக் கடவுளால் வணங்கும் தன்மையைப் பெறுகிறார்கள்.

கங்கையே முதலாகிய நதிகளின் கதியுந்
திங்களஞ்சடை யரன் கயிலாயத்தின் சிறப்பும்
பொங்கு மந்திர நிலைதருங்கதிகளும் போர்வே
லங்கையானெழுத் தாறிலொன் றேத்திட வமையும்
மறைகொழிக்குஞ் செயந்தி புரத்தெல்லை நீங்காதிருந்து
வாழுமாந்தர்.
குறைவிறவச் செயலான ரவர்புரியுந் தருமமொன்று கோடியாமா
லறுமுகனைச் சேவை செயுங் கண்ணுடையார் கண்ணுடையா
ரன்னோன் சீர்த்தி

முறையுரைக்கு நன்றவே நன்றவென் றேசுருதி மொழியுமாதோ.
ஒரு தரம், சரவணபவா வெனும் மஹா சடாக்ஷரத்தில், ஒரு அக்ஷர மாவது, ஆசாரத்துடனும், மன ஒருமையுடனும், உச்சரிப்பவர், ஆயிரங்கோடி அஸ்வமேத யாகம் செய்த பலனையும், சாஸ்த்திர முறைப்படி தர்மங்கள் சேய்வதினல் உண்டான பலனையும் + என்றும் கெடாத தவத்தினல் உண்டாகும் பலனையும் வேதாகம, சாஸ்த்திரங்கள், தோத்திரம் செய்கின்ற கடவுளின் அனுக்ரஹத் தினல் உண்டாகும் பலனையும் கங்கை முதலான புண்ய நதிக ளில் ஸ்நானம் பண்ணுகிற பலனையும், இளம் சந்திரனைச் சடையில் தரித்து சர்வான்மாக்களும் உய்யும்படி சிவபெருமான் வீற்றி ருக்கும் மஹா கைலாசத்தைத் தரிசித்த பலனையும் பஞ்சாக்ஷர முதலிய சகல மந்திரங்களையும் ஜெபித்த பலனையும், பெறுகிறார் கள்.

வேதங்களால் புகழப்பட்ட திருச்செந்தூரிலேயே சதா வசித் துக் கொண்டிருப்பவர்கள் செய்யும் தர்மம் சிறிதாயினும் அது

ஒன்று நூறுயிரங் கோடியெனப் பெருகும். ஸ்ரீ ஷண்முகக் கடவு ளைத் தரிசனம் செய்பவர் கண்களே ஞானக்கண்கள். அவருடைய திருப்புகழைச் சொல்லும் நாவே நல் நாவு எனச் சுருதிகள் முறை யிடுகின்றன.

வேதாவுமவ் வேதாவினை வியனுபியி னமைத்த
தாதார் பசுந் துளவத்தனுந் தவத்தோர்களுஞ் சுரரும்
காதார் விழி யுமை யாடரு கந்தன் சிந்து புரத்தோ
ரோதார் நமை யென்றே வியந் துரைப்பாரிவையுணர் நீ.

உலகம்யாவையும் தோற்றுவித்தும் என்றும் நீங்கா இளங்கும ரியெனப்படும் பார்வதியின் திருக்குமரரான ஸ்ரீ முருகக் கடவுள் வீற்றிருக்கும் செந்திலம்பதியிலே நிலையாக வாழ்வோர்கள் பிரம்ம விஷ்ணு இந்த்ராதி தேவர்களின் பதவிகளை ஒரு பொருளாக மதிக்கமாட்டார்கள் என பிரம்ம விஷ்ணு இந்திராதி தேவர்களே சொல்லக்கேட்டு உனக்குச் சொல்கிறேன் இதை நீ உணர்வாயாக. எவராயிருந்தாலும் அவர் பிறப்பு முதல் ஆயுள்பரியந்தம் எவ்வளவு பெரிய தர்மத்தைச் செய்தாலும், மகத்தானயாகாதி காரியங்களைச் செய்தாலும் அவர்கள் ஒரு நாளாவது செந்திலம்பதியில் வந்து வசிக்கவில்லையானால் அவர்கள் மேலேசொல்லிய தர்மங்களின் பலனை பூரணமாக அனுபவிக்கமுடியாமல் போவதுடன் மாக்களின் தன்மையையும்பெறுகிறார்கள் என்பதை நீ நன்குணர்வாய்.

திருச்செந்தூரே தேவ நலகம். அங்கு நிலையாக வசிக்கக் கூடிய வர்களே தேவர்கள். அவர்களுடன் பேசும் வார்த்தைகளே, வேதத் தின் மந்திரம். அவர்களுடன் உறைதலே பெருவாழ்வு என்பதையும் நீ தெரிந்துகொள்.

இச் செயந்திபுர மஹிமையை முன்னர் வைகுண்டபதியான ஸ்ரீ மந் நாராயணர், சனத் குமாரருக்கு, உபதேசிக்க, சனத் குமா ரர், அப்பெருமையை எனக்கு உபதேசித்தபடியே உனக்கு நான்

---

*விஸ்வாமித்திர மஹரிஷிக்கு கோபத்தினல் தவம் கெட்ட தன்மையினல் இங்கு கெடாத தவம் எனக்குறித்திருப்பதும் காண்க.

உபதேசிக்கிறேன். நான்மறைகளின் கரை கடந்த சுகமுனியே! காமம், க்ரோதம், லோபம், மோகம், மதம், மாத்சர்யம், என்னும் அறுவகைக் குற்றம் களைந்து பேரின்பம் அடையவேண்டினல், மூன்று தினங்களுக்கு சந்நதி முன்னுள்ள வதனுரம்ப தீர்த்தத்தில் உள்ளன்புடன், ஸ்ரீ முருகனைத் தியானித்து ஸ்நானம் செய்து, கறையேறி ஸ்ரீ கந்தக்கடவுளைத் தரிசிக்கக்கடவாய் எனப் பணித்தருளினர்.

சுகமுனியே!

உண் பொருட்டே, சொல்லிய இந்த உண்மைச் சரித்திரத்தை நினைத்தவர்களும் ஏட்டினில் எழுதி தினம் படிப்பவர்களும் தங்கள் தங்கள் மனத் தாமரையில், ஸ்ரீ முருகக் கடவுள் வந்து நிலயாக வாழ்வதைக் காண்பார்கள் என வேதம் நான்கென வகுத்த வேதவ்யாசர் சுகருக்கு, கூறியதை, சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்குச் சொல்லியருளினர்.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## மூன்ருவது அத்தியாயம்.

### ஜயேந்த்ரபுர வைபவம், உறைத்தது.

---

நைமிசாரண்யவாசிகளே

அகம்காரம், மமகாரம் எனும் பகையை நீக்கி வேதாகமங்களுக் காதியான, ஓங்காரத்துள் ஒளிக்குள்ளிருக்கும், குமரேசன் திருச்செந்தூர் வந்த சரித்திரத்தை பரசாதனத்துக்கு உண்மை வழியென நினைத்து ஐம்புலன்களும் ஒன்று பட்ட மன தினராகக் கேளுங்கள்.

திருச்செந்தூர், எல்லா ஊர்களிலும் சிறந்தது. அங்குள்ள, தீர்த்தங்கள் உலகெங்குமுள்ள, தீர்த்தங்களிலும் மேன்மையானது. முதியோரெனப்படும் திரிசுதந்திரர்கள் வாழும், அச்செயந்தீபுரத்தில், தனியாக இருந்து ஒருதடவை சடாக்ஷர மந்திரம் ஜபித்தால் அளவிலாத மந்திரங்கள் ஜபித்ததினால் உண்டாகும் பலனைத்தரும் சகல ஜீவாத்மாக்களுக்கும் இகத்தில் சகல சௌபாக்கியங்களையும் பரத்தில் சிவஸ்வரூப ஸ்கந்த சாயுஜ்யத்தையும் அளிக்கும்.

காசி கங்கையில் ஸ்நானம் செய்து, சந்தோஷத்துடன் ஜபம் செய்வதற்கு உரித்தான கொல்லாபுரி யெனப்படும் இடந்தங்கி கரன்யாசம் அங்கன்யாசம், முதலியனவோடு குற்றமில்லாத மந்திரங்களை ஜபித்து தாங்கள் தவராது செய்யும் யாகாக்னியில் உணவு தயார்செய்து தேவர்களுக்கு விருந்தளித்து மலைக்குகையையே, இருப்பிடமாகவுள்ள, தத்தாத்ரேய மஹரிஷியை சற்குருவாகக் கொண்டநிகரில்லாத தவசிரேஷ்டர்களும் கந்தளேந்திர கோரக்கர் கொங்கணேந்திரர் மூவாசைவிலக்கிய பெருமையுடைய நாகார்ச்சுனர் மச்சேந்திரர், பீமநாதர், அருணகிரிநாதர், புஜங்க குரு நாயகர், பெருமையுடைய ஆதிநாதர், நவநாத சித்தர், தேவர்கள், ஒழுக்கத்தில் சிறந்த திரிசுதந்திர முனிசிரேஷ்ட்டர்கள் முதலானோர்களும் சமுத்திரங்களால் சூழப்பட்ட எட்டு திக்குகளிலும் வாழ்ந்து வேதங்கள் நான்கையும் அவற்றில் விதித்த இனிய வைதீக மார்க்கத்தையும் மனத்தில் கொண்டு குற்றமற்றவர்களாய் நன்னெறியுடன் கூற்றுவனை யமனைத் தண்டித்து அருள் செய்த சிவ பெருமானைத் தினம் தினம் பணிந்து * அணிமா மகிமா லகிமா கரிமா ப்ராப்தி ப்ராகாம்யம் ஈசத்வம் வசித்வம் எனப்படும் அட்டமாசித்தியைத் தெரிந்து அஷ்டாங்யோக நிஷ்ட்டையில் அமரும் சொல்லுதற்கரிய சனகர் சனந்தனர் சனாதனர் சனத்குமாரர் சனத் சுஜாதர் முதலாகிய ஒப்பற்ற முனிசிரேஷ்ட்டர்களும் இச் திருச்செந்தூரிலேயே எப்பொழுதும் வாழ்வார்கள்.

ஞான விரோதமாகிய காமக்ரோதாதி பகைவர்கள் ஆறும் ஒன்றாகச்சேர்ந்து செயந்தீபுரத்தில் நிலையாகவாழ்பவர்களுடைய

மனதைக் கெடுக்கஎண்ணி அவர்களிடம் செல்லின் சூரியனைக் கண்ட இருள் போல் உருவழியும்.

* ஜெயந்திபுரம் (திருச்செந்தூர்) என, ஒருமையுடன் மனதில் நினைந்தவர்கள், ஆகாம்யம் சஞ்சிதம், ப்ராரத்வம் எனப்படும் மூவினைகளினின்றும் விடுபட்டு, இகத்தில் மேலாம் சௌபாக்யத்தைப்பெற்று, பிறப்பு, இறப்பு எனும் முடிவில்லா நோய் நீங்கப் பெறுகிறார்கள். (செய்யுள். 9. 10. 11) கங்காநதியிலும். திரிவேணி சங்கமத்திலும் ஸ்நானம் செய்து தானதருமங்களைச் செய்யும் புண்யமானது உள்ளமுருக, ஒருதரம், திருச்செந்தூர் என உரைக்கும் புண்ணியத்திற் பதினறில் ஒரு பங்குக்கு நிகரற்றது.

வெள்ளைத்தலைகளையுடைய அலைகளானது கரையில் மோதுகின்ற புண்ணியக்ஷேத்திரமான, திருச்செந்தூரில் வாழ நினைத்தவர்கள் ஆயிரம் வாஜபேயம் எனும் யாகத்தைச் செய்தபலனையும், பெறுகிறார்கள்.

இந்த திருச்செந்தூரில் வாழ்ந்து நல்மனத்தினராய் தினையளவு தருமத்தைச் செய்தாலும் அத்தருமம், வளர்பிறைச் சந்திரனையொத்து விளங்கும். தாம் செய்த பாபங்கள் அனைத்தும் தேய்பிறை சந்திரனைப்போல் மறையும்.

சங்கலீகரணமுதல் ஒன்பதுவிதபாபங்களும் திருச்செந்தூரில் வந்து ஸ்ரீ முருகக் கடவுளுடைய திருவடியைத் தரிசித்தமாத்திரத்திலேயே, அழிந்து விடுகின்றன.

மந்திரங்களை ஜபித்தல் ஹோமம் தானம் யாகம் உண்மையுரைத்தல் ஒழுக்க முடைமை யோகம் இவைகளைச் செய்தலினல். பெறும்

* அணிமா-மிகச்சிறுத்தல், மகிமா-மிகப்பெருத்தல், லகிமா-மிக நுட்பமாதல், கரிமா-மிகத்திட்பமாதல், ஈசத்வம்-சகலமும் ஆளும் வன்மையாதல், வசித்வம்-எல்லாம் தன்வயமுடமை ப்ராப்தி-வேண்டியவற்றையடைதல், ப்ராகாம்யம்-எல்லா இடங்களிலும் தடையின்றி செல்லுதல். * கந்தர் அந்தாதியில், சேதனந்தந்துறை எனும் அருணகிரிசுவாமிகள் வாக்கையும் காண்க. (13வது பக்கம்)

புண்ணியங்கள், திருச்செந்தூரில் செய்பதில் உண்டாகும், புண்ணியத்தில் கோடியில் ஒருபங்குக்கு ஈடாகாது என வேதங்கள் முறையிடுகின்றது.

விலக்கிய பதார்த்தங்களைப் புசித்தல், நினைக்கொணு குருதுரோகம் செய்தல், இத்யாதி பாடங்கள், திருச்செந்தூரில் செித்த மாத்திரத்திலேயே அழிந்து விடுகின்றன.

அமாவாசையிலும், பௌர்ணமியிலும், விதிமுறைப்படி, வதனுரம்பதீர்த்தத்தில் ஸ்நானம், செய்து சடாக்ஷரத்தை, மனதில் தியானித்து, வெற்றிவேலாயுதத்தைத் திருக்கரத்தில் தரித்த ஸ்ரீமுருகக்கடவுளை தரிசித்தவர்கள், பார்வதி தேவியை இடபாகத்தில் கொண்ட சிவபெருமான் வீற்றிருக்கும் மஹா கைலாசத்தை அடைவார்கள்,

எந்த ஜீவர்களாயினும், விசேஷ தீர்த்தங்களையுடைய திருச்செந்தூரில், உயிர் நீத்தால், மயங்குகின்ற பாபமாகிய கொடுந்தீமை விட்டகன்று, வீரவாளைத் தரித்த ஸ்ரீ வீரவாகு தேவரின் துணைவர்களுடன், இன்பமாக வீற்றிருந்து கந்த சாயுஜ்யத்தில் கலப்பார்கள்.

செய்யுள் 19.

செல்லு, மார்க்கங்க், டவறுறச் செயந்திநன், னகரத்
தெல்லை, சென்றுளா, வியாவருங், குமரவே ளிருந்தாண்
மல்ல, லஞ்சிறப், பெய்துவ, ரெய்துவர், வாய்மைச்
சொல்வி, தெள்றனன், சுகனுக்கு, வியாதனுந், தொல்லோன்

செல்லும் வழிகள், தவறி விட்டாலும், அகஸ்மாத்தாக, தெய்வ வசத்தாற், திருச்செந்தூர்ச் சேர்ந்த எவரும் குமாரசுவாமியுடைய, உபய பாதங்களையும் மிகச்சிறப்புடன் சேருவர்சேருவர் இது சத்தியம். என சுகமுனிவனுக்கு முன்னேன் எனப்படும் வியாசமுனிவர் எடுத்துரைத்தார் எனப்புகன்முர் சூதமுனிவர்.

ஸ்ரீ காசி, காஞ்சிவரம், சிதம்பரம், காளாஹதி, திருவாரூர், திருவண்ணமலை, திருச்செந்தூர், திருவானைக்கா, துவாரகா எனப்படும் ஒன்பது க்ஷேத்திரத்தினுள் பூர்வ பாகமாகிய கிழக்கே வதனாரம்பம் முதலிய 24 தீர்த்தங்களையுடைய சமுத்திரத்திலும் தெற்கில் கந்த புட்கரணி தீர்த்தத்திலும் மேற்கே தாம்பிரபருணி நதியிலிருந்து வரும் ஜலத்தினல் நிறையப்பெற்ற குளங்களினலும் பாதாள கங்கையைப்போன்ற நீர் ஊற்றுக்களையுடைய கிணறுகளினலும் வடக்கே தாம்பிரபருணி நதியினலும் சூழப்பட்டு * ஐந்து குரோசம் எனும் அளவினையுடைய திருச்செந்தூர்த்தலமானது, தலம் தீர்த்தம் மூர்த்தி எனும் மூவகையினும் சிறப்புடைத்தது. இந்தக்ஷேத்திரத்தை நினைக்த மாத்திரத்தில் நினைத்தவர்கள் அடையும் பலன்கள் அனந்தம் என்றும் உணர்க.

இச்செந்திமாநகரிலிருந்து மேலே சொல்லிய ஒன்பதுக்ஷேத்திரங்களை நினைத்தவர்கள் நினைத்தமாத்திரத்திரலேயே அந்தந்த க்ஷேத்திரங்களையும் மூர்த்திகளையும் தரிசித்த புண்ய பலனையும் அந்தந்த புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்த பலனையும் பெறுகிறார்கள்.

செய்யுள் 23.

அன்புதித்திடச்செயந்தி நன் னகர்வயி னடைந்து
தென்புலத்தினேர்க் கருத்தியோ ரூட்டிய சிராத்த
முன்புணர்த்திய கயைச்சிராத்தது முக்கியத்தி
னின்பு டைச்சத மடங்கென வேதநின்றிசைக்கும்

உள்ளன்புடன் பக்தி சிரத்தையுடன் திருச்செந்தூரையடைந்து, தென்புலத் தோரெனப்படும் பிதுர்க்களுக்குச், சிரார்த்தம் செய்வித்தவர்கள், கயா, க்ஷேத்திரத்தில் செய்யும் சிரார்த்த பலனைக் காட்டிலும் நூறுமடங்கு அதிகமான பலனைப்பெறுகிறார்கள் என்று வேதங்கள் முழங்குகின்றன

அம்படிச் சிரார்த்தம் செய்ய சக்தியில்லாதவர்கள், ஸ்ரீ சண்முகர் சன்னதிக்கு முன்உள்ள கந்தபுஷ்கரணி என்னும் தீர்த்தத்தில், ஸ்நானம் செய்து பரிசுத்த மனத்தினராய் ஸ்ரீ முருகன் சந்நதி

* ஒரு குரோசம் என்பது கூப்பிடு சத்தம் கேட்கும் அளவுள்ள தூரம்.

முன்னிருந்து அரிசி மாவினல் சிரார்த்தம் செய்க, அல்லது எள்ளும் அரிசியும் நீரும் கலந்து, தர்ப்பணரூபமாகச் செய்க, அல்லது, பசுக்களுக்குப் புல் கொடுத்து இத்யாதி செய்கைகளினல் ஏற்கனவே நரகத்தை யடைந்திருக்கிற பிதுர்க்கள், பிரம்ஹ லோகத்தை அடைவார்கள்.

ஏற்கனவே பிரம்ஹலோகத்திலிருக்கும் பிதுர்க்கள் முக்தி பெற்று நித்ய ஜீவனக விளங்குவர், எனவேதம் அறைகின்றது.

நைமிசாரண்ய வாசிகளே. மேலே சொல்லிய நரகம், பிதுர் உலகம் இவற்றில் இருக்கும், பிதுர்க்கள், சதா என்ன, எண்ணிக் கொண்டிருக்கிருர்கள் என்பதையும் சொல்கிறேன்.

ஒரு நாளாவது திருச்செந்தூர் சென்று, கந்த புஷ்கரணி வதனரம்பம், தீர்த்தங்களில், ஸ்நானம்செய்து, எள், அரிசி, கலந்த நீரினல், பிதுர்க்களுக்கு, சிரார்த்தம் தர்ப்பணம் முதலியன செய்யாமலும் ஸ்ரீ முருகக்கடவுளைத் தரிசனம் செய்யாமலும் இருந்ததினலல்லவா நாம் இந்த நரகத்திலும், பிதுர் உலகத்திலும் கிடந்து உழலுகிருேம். இனி நம்முடைய சந்ததியார்கள் மௌனமாக ஒரு முறையாவது மேலே சொல்லிய, கந்தபுஷ்கரணீ வதனரம்பதீர்த்தங்களில், ஸ்நானம் செய்து எள் அரிசி கலந்த நீரினல் தர்ப்பணம்செய்து ஸ்ரீ முருகக்கடவுளைத் தரிசித்தால், அந்த க்ஷணமே நாம் இந்த நரகம், பிதுர்உலகம் இவைகளை விட்டு கறையேறி, பிரம்மாதி, தேவர்களால் வணங்கும் பெருமையைப் பெற்று, ஜீவன் முக்தர்களாக விளங்குவோமே என்று சதா எண்ணிக்கொண்டும், இம்மாதிரி நம் சந்ததியார்கள் செய்யவேண்டு மெனப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிருர்கள்.

நைமி சாரண்யவாசிகளே.

அப்படி நரகம் பிதுர்உலகம், இவைகளில் கிடந்து உழலும் பிதுர்க்கள், அதி ஆச்சர்யமான முறையில், அந்தந்த நரகங்களை விட்டு கறையேறுகிற சம்பவத்தையும் சொல்கிறேன்.

யமதர்மராஜா தன்னுடைய நித்யவேலைகளை கவனிக்க வேண்டி நரகம் பிதுர்உலகம், இவைகளுக்கு வருகிருர். வந்த உடன்

மேலே சொல்லிய நரகம் பிதுர் உலகம் இவைகளில் இருப்பவர்களைப் பார்த்துக் கண்கள் சிவக்க மீசைகள் துடிக்கக் கோபக்கனலுடன் கை தட்டிச் சிரித்து ஏ நரக பிதுர் உலகவாசிகளே நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள். உங்களுக்குக் கொஞ்சமும், பகுத்தறிவு இல்லையா. யாக யஞ்ஞ, தான தருமம், சத்தியம் உரைப்பது போன்ற சத்காரியங்கள் செய்ய முடியாவிடினும், ஒருமுறை ஒருவேளை திருச்செந்தூர் சென்று மௌனத்துடன் கந்தபுஷ்கரணி வதஞரம்பதீர்த்தங்களில் ஸ்நானம் செய்து தேவர்களைக் குடியேற்றிய ஞானநாயகனும் குமரக் கடவுளைத் தரிசித்தால், மஹா கைலாச வாசம் கிட்டுமே எனவினவ, அச்சமயமே (ஸர்வஞத் ஜெயந்தி) கேழ்க்க முக்தியெனப்படும் திருச்செந்தூர் என யமன் சொல்லி நரக, பிதுர்உலகவாசிகள், கேட்டமாத்திரத்திலேயே அந்தந்த நரகங்களை விட்டு அவரவர்கள் கறையேறி தேவர்கள் வணங்க, நித்ய ஜீவன் முக்தியைப் பெறுகிறார்கள் என்பதையும் உணருங்கள்.

முக்தி க்ஷேத்திரங்கள் எல்லாவற்றுக்கும் ஜீவகலையைக் கொடுப்பது, திருச்செந்தூரமர்ந்த செவ்வேள் ஸ்ரீ குகன் என்று உணர்க. என வியாசர் சுகமுனிவனுக்குச் சொல்லியருளினா.

முனிசிரேஷ்டர்களே இச் செயந்தியம்பதியில், தம்மிடம் வந்து ஸ்நானம், செய்வோர்களுக்குச் சகல சௌபாக்கியத்தையும் கொடுக்கும், வதஞரம்பம் முதல் 24 தீர்த்தங்களும் முருகப் பெருமானுக்குரித்தான காயத்ரீ மஹாமந்திரத்தின் அக்ஷரங்களின் ஒவ்வொரு எழுத்துக்கள் ஆகும் என்பதையும் உணர்க. முனிவர்களே.

அப்படி காயத்ரீயானது, 24 தீர்த்தங்களாக அமைந்திருக்கிறதென கூறினேன் அல்லவா. அந்த 24 தீர்த்தங்களின், பெயர்களையும், அதன் மஹிமைகளையும் உங்களுக்குச் சொல்கிறேன்.

அந்த 24 தீர்த்தங்களில் 23 தீர்த்தங்கள் சுவாமி சன்னதி முன்னிருக்கும் சமுத்திரத்திலும் ஒன்று கோயிலின் தென்பால், மணல் மேட்டிலும் இருக்கின்றன.

# சமுத்திரத்தில் இருக்கும் தீர்த்தங்கள்.

---

## 1. வதனரம்ப தீர்த்தம்

இது மூலஸ்த்தானத்துக்கு, முன்னல் உள்ளது. சகல ஜீவர் களுக்கும், சகல தேவர்களுக்கும் முத்தொழில், முக்கடவுளுக்கும் மூலகாரணமாகவுள்ள கந்தவேள் அருளெல்லாம் ஒன்ருகி விளங்கு வது. இதில் ஸ்நானம் செய்தவர்களுக்கு சகல சௌபாக் யங்களையும் கொடுக்கக் கூடியது.

வதனரம்ப தீர்த்தத்துக்கு வடக்கேயுள்ள தீர்த்தங்கள்.

## 2. தெய்வானை தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தவர்கள், கௌரி கங்கை யமுனை, காவிரி, கௌசிகை முதலிய நதிகளில் விதிமுறைப்படி, ஸ்நானம் செய்த பலனைப் பெறுகிருர்கள். பரஞானத்தையும் பெறுகிருர் கள்

## 3. லெக்ஷ்மி தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால், குமரி, தோகை, வந்தனை தூத பாவை, வேதநதி, சுருதிநதி, துங்கபத்ரை, விபாசை, யூவை எனும் புண்யதீர்த்தங்களில், ஸ்நானம் செய்கிற பலனைக் கொடுக்கக் கூடியது. இக சௌக்யத்தையும் கொடுக்கக்கூடியுது.

## 4. சித்தர் தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் வாலுவாகினி விவாதை வைகை தேவகி, கண்ணவேணி, கோதை, கண்டகை, எனும் புண்ய தீர்த்தங்களில், விதிமுறைப்படி ஸ்நானம் செய்த பலனைக் கொடுப்பதுடன், அட்டமாசித்தியையும், கொடுக்கக் கூடியது.

## 5. அஷ்ட்டதிக்குப் பாலகர் தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால், உவதி, பம்பை, தாமதி, சரயு' கம்பை, துர்க்கை, சோபனை, எனும், புண்யதீர்த்தங்களில் ஙிர்

மலமனதுடன் ஸ்நானம் செய்யும் புண்ய பலனைக் கொடுப்பதுடன், சகலதிக்குகளிலுமுள்ளவர்கள் வந்து வணங்கும் பெருமையையும் கொடுக்கும்.

6. காயத்ரீ தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால், நர்மதை, தேசானை, நிருவிந்தை தாபி, முதலிய புண்யதீர்த்தங்களில், ஒரு மனத்தினராய் ஸ்நானம் செய்யும் பலனைக்கொடுப்பதுடன் பிரதிதினமும், 21600 காயத்ரீ ஜபம், செய்த பலனையும் கொடுக்கக்கூடியது.

7. சாவித்ரீ தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால், முகரி, கோதாவரி பெண்ணை வேத்ரவதி என்கிற புண்யதீர்த்தங்களில் தூய மனத்தினராய் ஸ்நானம் பண்ணுகிற பலனைக் கொடுப்பதுடன் யமனை வெல்லும் சக்தியையும் கொடுக்ககூடியது.

8. சரஸ்வதி தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் விதிசை ,வைதரணி, மந்தாகினி, சிலாசலி, வேகவதி விரேபதி பலாகை முதலிய நதிகளில் நெறியுடன் ஸ்நானம் பண்ணும் பலனையும் சகல வித்தைகள் அருளும் பலனையும் கொடுக்கக்கூடியது.

9. ஐராவத தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் சந்திரபாகை, பன்னுசை, உலோகிதை, சிந்து, வாகுதை, என்கிற புண்ய தீர்த்தங்களில் நன்மனத்தினராய் ஸ்நானம் பண்ணுகிற பலனையும் இந்த்ரலோக வாஸத்தையும் கொடுக்கக்கூடியது.

10. பைரவ தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் சரஜோதி, சோணை, தாம்ப்ரவருணி, கம்பை, முதலியபுண்யதீர்த்தங்களில் பக்தியுடன் ஸ்நானம் செய்த பலனைக் கொடுப்பதுடன் பூத பிசாச முதலிய துர்த்தேவதைகளின் சங்கடங்களையும், நீக்கக் கூடியது.

வதனாரம்ப தீர்த்தத்துக்குத் தெற்கே உள்ள தீர்த்தங்கள்,

11. வள்ளி நாயகி தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் ஒளிபொருந்திய வேலாயுதத்தைத் திருக்கரத்திலே யுடைய ஸ்ரீ ஷண்முகக் கடவுளுடைய பன்னிரு புயங்களில், உலாவிப் படர்கின்ற மான்பெற்ற குறக்கொடியாகிய வள்ளீ நாயகியினது தீர்த்தமானது உமாதேவியாரின் கண்களின் பெயரமைந்த விசாலாக்ஷி, காமாக்ஷி, மீனாக்ஷி, எனப் பிரசித்தி பெற்று விளங்கும் க்ஷேத்ரமாகிய காசி, காஞ்சி, மதுரை எனப் படும் மூன்று க்ஷேத்திரங்களிலும் சென்று வழிபட்டவர்களுக்கு உரிமையான இகத்தில் சௌபாக்யத்தையும் பரத்தில் ஞான வீட்டையும் கொடுக்கும்.

12. துர்க்கா தீர்த்தம்

இதில் சாந்த மனத்தினராய் ஸ்நானம் செய்தால் முன் ஜன் மாக்களில் செய்த பாவ புண்ய வசத்தால் இம்மையில் பெறுகின்ற துன்பங்களை நீக்கி மறுமையில் கிடைத்தற் கரிய பேரின்ப வீட்டையும் ஆனந்த வாழ்வையும் கொடுக்கும்.

13. ஞான தீர்த்தம்

இதில் மகிழ்ச்சியுடன் ஸ்நானம் செய்து ஸ்ரீ முருகக் கடவுளைத் தோத்திரம் செய்பவர்களுக்கும் தோத்திரம் செய்ய நினைப்பவர்களுக்கும் அவரவர்கள் எண்ணிய நற்பயனைக் கொடுப்பதுடன் சகல கலா ஞானத்தையும் அருளும்.

14. சத்ய தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் துன்பங்கள் யாவற்றையும், நீக்கி நீக்கமுடியாத பழய ஊழ்வினையையும் நீக்கி வேதசாஸ்த்திர ஞானத்தையும் அருளி ஞான நாயகனும் முருகக் கடவுளின் திருவடித்தாமரையின்பேரின்பச்செல்வத்தையும் அருளும்.

15. தர்ம தீர்த்தம்

இதில் அன்புடையராய் ஸ்நானம் செய்தால் ஆணவம் மாயை

லுள்ள புண்ய நதிகளில் ஸ்நானம் செய்த அரும் பெரும் பலனையும் அருளுவதுடன் சதா தர்ம சிந்தையையும் கொடுக்கும்.

16. ரிஷி தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் நல்வினை தீவினை யெனப்படும் இருவினைத் தொடரைத் தேய்த்து ஒழிப்பதற்கு அரம்போல விளங்கி, ஆறுமாமுக குருபரர்க்கு முன் நின்று உண்மை நூல்களை ஓதுதலாகிய, பெரும் பேற்றையும் அருளும்.

17. தேவர் தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் காம, குரோதாதி ஆறுபகைகளையும் நீக்கி சந்திரனை ஜடா பாரத்தில் அணிந்த வேத நாயகன் ஸ்ரீ சோமசுந்தரக் கடவுளின் சரணாரவிந்தத்தில் மனதைச் செலுத்தும் வகை யருளுவதுடன் தேவர்கள் வந்து வணங்கும் சிறப்பையும் அருளுகிறது.

18. பாபவினாச தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் தவத்தினையுடைய குற்றமற்ற முனிவர்களின் கோபத்தினால் சொல்லிய சாபங்களை நீக்கி புண்ய ஜன்மமாகச் செய்தருளும்.

19. மணல் மேட்டிலுள்ள, கந்த புஷ்கரணி (நாழிக்கிணறு) தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் தீவினைகள் யாவும் நீங்கப்பெற்று சஞ்சிதத்தையும் சுட்டொழித்து சிவபெருமானுடைய திருவடித் தாமரைகளை அருளும். தவிர, இந்த கந்தபுஷ்கரணி தீர்த்தமானது ஸ்ரீ முருகன் சூரபதுமனை சேவலும் மயிலுமாகச் செய்து தேவர்களுக்கும் தன்னுடனிருக்கும் திரிசுதந்திர முனிவர்களுக்கும் அனுக்ரஹம் செய்யும் சமயம் திரிசுதந்திர முனிவர்கள் ஸ்ரீ முருகக் கடவுளைப் பணிந்து சுவாமீ சகல பாபங்களையும் நிவிர்த்திக்கக் கூடிய கங்கா நதியை இங்கே வரவழைத்து அருள வேண்டுமெனப் பிரார்த்திக்கவும் வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய் என வழங்கும் முறைப்படி சர்வலோக நாயகன்

புன்னகை செய்து முனிவர்களே, நீங்கள் கோரியபடியே அனுக்ரஹிப்போம் என அருளி திருக்கரத்திலே விளங்குகின்ற ஒளி பொருந்திய வேலாயுதத்தைத் திருக்கண் நோக்க குமரேசனின் திருக்குறிப்பை அறிந்து சன்னதி முன்னுள்ள மணல் மேட்டில் பாதாளம்வரை பாய்ந்து சென்று கங்கையைக் கொண்டு வந்து சேர்த்து ஸ்ரீ முருகன் திருக்கரத்தில் அமர்ந்தது. ஆகையால் இதற்கு வேல் தீர்த்தம் என்றும் நாமம் வழங்குதல் காண்க. இதில் ஒரு மண்டலம் கோபத்தை நீக்கி உண்மை மனத்தினராய் ஸ்நானம் செய்பவர்கள் மேலே சொல்லிய பலன்களைப் பெறுவதுடன் தன்னிடம் வந்த கேடுகள் அனைத்தும் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கப்பெற்று குமரக் கடவுளின் விஸ்வரூப தரிசனத்தையும் காணும் பாக்யத்தைப் பெறுவார்கள் எனவேதம் முறையிடுகின்றது.

## 20. சேது தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால் ஸ்ரீ குமரக்கடவுளின் திருவடியின் திருவருளை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் காட்டியருளும். ரத்னாகரம் மகோததி சங்கமமாக விளங்கும், தனுஷ்கோடியில் செய்யும் ஸ்நான பலன்கள் அனைத்தையும் அருளும்.

## 21. நாகங்கா தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தவர்களுக்கு முக்தியடைதற்கு சஞ்சீவி மூலிகையாகவும், தரிசனம்செய்து துதிப்பவரைப் பிறவியாகிய ஆபத்தினின்றும் காப்பதற்கு தேவாமிருதமாகவும், அருளுவதுடன் விஸ்வேஸர், மாதவர், டுண்டிவிநாயகர், தண்டபாணிக்கடவுள், வயிரவர், காசி, குகப்பெருமான், கங்கை, பவானி, மணிகர்ணிகை எனப்படும் பத்து க்ஷேத்திரங்களின் நித்ய யாத்திரைக்குறிய பலனையும் அருளும்.

## 22. சந்தமாதன தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்தால், ஸ்ரீ முருகனும் பரம் பொருளின் பாத தாமரையை இந்திரஜாலவித்தைபோல, உடனேயே அருளும்.

23. மாதுர் தீர்த்தம்

இதில் ஸ்நானம் செய்து, தம்குலத்தோர்களுக்கு நற்கதியுண்டாகும்படி எள்ளும், தண்ணீரும் இறைத்தவர்களுக்கு, எல்லா நன்மைகளேயும் தந்தருளும்.

24. பிதுர் தீர்த்தம்

இதில் ஒருதரம் ஸ்நானம்செய்து, உள்ளங்கையில் நீரோடு எள்ளை இறைத்தவர்கள் இம்மையிலும், மறுமையிலும், மேன்மையுடன் விளங்கி முருகக் கடவுளுடைய கிருபையையும் பெறுவர். இவர்களைச் சந்ததியாகவுடைய பிதுர்க்கள் பிதுர்லோகத்தினின்றும் விடுபட்டு மஹா கைலாசத்தையடைந்து சந்தோஷித்து நித்ய ஜீவனுக விளங்குவார்கள்.

மேற் சொல்லிய இருபத்திஞன்கு தீர்த்தங்களையும் தினசரி பாராயணம் செய்தாலும், இதில் ஸ்நானம் செய்தாலும், இத்தீர்த்தங்களின் பெயர்களையும் பெருமைகளையும் எட்டுப் பிரதிகளில் எழுதி அர்ச்சித்து பூஜித்து வந்தாலும், இம்மாதிரி பிறரை பூஜிக்கச் சொன்னுலும், அவர்களுக்கு உண்மைப்பயனை உண்டாகும் என்று வியாசபகவான் சுகமுனிவருக்குக் கூறியருளினுர் என்று சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்குக் கூறியருளினுர்

ஸ்ரீ ஜெயந்திபுரவைபவ முறைத்த அத்யாயம் முற்றிற்று.

---

## 4-வது அத்யாயம்.

### திரு அவதார வைபவம்.

நைமிசாரண்ய வாசிகளே.

குளிர்ந்த துளவமாலையை அணிந்த நெடுமால் எனப்படும் ஸ்ரீ மாஹா விஷ்ணுவும் மலர்ந்த தாமரையை ஆசனமாகக்கொண்ட

பிரமதேவனும் வச்சிராயுதத்தைத் தரிக்கும் இந்திரனும் சகல தேவர்களும், முனிவரர்களும் சூரபதுமன் முதலிய அசுரர்கள ல் செய்யப்படும் கொடுமையினல் அவரவர் செய்யும் தவங்களையும் வேதங்களையும் அரசுரிமைகளையும் இழந்தவர்களாகி தாங்க முடியாத துன்பமுற்றவர்களாய் ஒளி பொருந்திய புன்முறுவலை யுடைய ஸ்ரீ பார்வதிதேவியைப் பாகத்தில் கொண்ட ஸ்ரீ பரமேஸ் வரன் வீற்றிருக்கும் வெள்ளியங்கிரி யெனப்படும் கைலாசத்தை யடைந்து சிவசந்நிதானத்தில் நமஸ்கரித்து எழுந்து நின்று சிவ பெருமானே, ஞானநாயகரே, எனப்பலதோத்திரம் செய்து தாங்கள் படும் கஷ்டங்களைத் தீர்க்கும்படி பிரார்த்தித்தனர்.

அப்படிப் பிராத்தித்த தேவர்களுக்கு அனுக்ரஹம் செய்யும் பொருட்டு தேவர்களைப் பார்த்து தேவர்களே உங்கள் துன்பங்களை விரைவில் ஒழிப்போம் என ஆஞ்ஞைசெய்து உமாதேவியார் திருக் கோயிலிற் சென்று அத்தேவியாரைக் கலந்து நெடுங்காலம் இருந் தருளினர்.

நெற்றிக் கண்ணையுடைய பரமேஸ்வரன் இவ்விதமாக சத்தி யோடு கலந்து அமர்ந்தருளிய முறைமையைத் தேவர்கள் எல்லோ ரும் உணர்ந்து சுவாமீ தாங்களும் உமையும் முடிவிலாகாலமாக கலந் திருப்பதினல் பூ தேவி தாங்கமுடியாதவளாகி தளருவாள். எழைகளாகிய நாங்களும் துன்பத்துடன் மனக்கவலை யடைகி ன்றேம். ஆதலினல் இக் கலவியைச் சீக்கிரம் நீக்கி யருளவேண் டும் எனப் பிரார்த்திக்க இறைவன் உள்ளங் கனிந்து புன்முறு வலுடன் தேவர்களைத் தம்முன் வரவழைத்து அருட் கண்ணேக்கி தேவர்களே உங்கள் பிரார்த்தனையின்படி நாம் கலவியை நீக்கி னேம். நம்மிடமிருந்து உற்பத்தியான முதன்மையுடைய சுக்ல மாகிய பொறியை பார்வதிதேவியிடம் வைத்திலோம். அதனை வைத்தற்கு தக்க இடத்தைச் சொல்லுங்கள் என ஆஞ்ஞை செய்ய வும் தேவர்கள் இறைவனை வழிபட்டு சுவாமீ தேவரீருக்கு அட்டமா மூர்த்தங்கள் உள்ளன. அதில் பூ மகளும் ஒன்றும். அதனல் பூதேவி யிடம் கொடுத்து எம்மைக் காத்தருளவேண்டும் என வேண்டி நின்றனர். அருள் கு வாகிய சிவபெருமானும் சந்தோஷத்துடன்

தன்னிடமிருந்து தோன்றிய அக்னிப் பொறிகளை பூமிதேவியிடம் சேர்ப்பிக்கவும், பூமிதேவி அப்பொறிகளை தாங்கமுடியாதவளாகி பலம் குன்றி வெப்பத்தை யடைந்து வருத்த முற்றதைக்கண்ட தேவர்கள், அக்னிதேவனை நோக்கி சுடர்ப்பிழம்பைச் சுமக்கும்படி வேண்ட அக்னிதேவனும் அப்பொறிகளைச் சுமந்து வெப்பம் தாங்கமுடியாத வனாகி வியர்த்து விதிர் விதிர்த்து சுடுமூச் செறிந்து உடல் நடுங்கி ஐய கோவெனக் கதறி வாயுபகவானது சகாயத்தையும் பெற்று புனித மயமான கங்காநதியில் அப்பொறிகளைவிடவும், அந்தக் கங்காநதியும் அப்பொறிகளைத் தாங்க முடியாதவளாகி தன்னுடைய அளவிலா பலத்தினால் இமயமலைக்குப் பக்கத்தில் உள்ளதும் செந்தாமரைகளினால் அழகு பெறப் பட்டதுமான சரவணப் பொய்கையில் சேர்க்கவும் அப்பொறிகள் * அட்டமாமூர்த்தி வடிவத்தோடு தோன்றியும் எல்லா உலகங்களிலும் காணும்படி பிரமப்பொருளாக விளங்கியும் சொல்லுதற்குரிய அற்புதங்களுடன் மலைபோலெழுந்த அந்த வீர்யத்தினின்றும் நூறுயிரம்கோடி சூரியர்போல பிரகாசித்து ஸ்ரீ சண்முகக் கடவுள் திரு அவதாரம் செய்தார்

திரு அவதாரம் செய்த ஸ்ரீ சண்முக முகூர்த்தமானது சிவபெருமான் பூமி அக்னி வாயு கங்கை சரவணப் பொய்கை என ஆறிடங்களில் பொருந்தினமையால் சரவணபவன் என்றும் சண்முகன் என்றும் கந்தன் என்றும் நாமங்களால் பிரகாசித்தது. தேவர்கள் தங்கள் தங்கள் ஐஸ்வரியங்களையும் வாழ்வையும் பெற்றோமென அகமகிழ்ந்து பிரார்த்தித்துத் தவம்செய்யும் கிருத்திகாதேவிகளை நோக்கி கிருத்திகாதேவிகளே நீங்கள் பயப்படாமல் இந்த ஸகத்த முகூர்த்தமான குழந்தைக்குப் பாலூட்டுங்கள், என ஆஞ்ஞை செய்தார்கள்.

கிருத்திகாதேவிகளும் தேவர்களின் ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு கந்தன் பால் சென்று வணங்கித் துதித்துக் கையி

---

* அட்டமாமூர்த்தங்களாவன (1) ஆத்மா (இயமானன்) (2) சூரியன் (3) சந்திரன் (4) நிலம் (பிருதிவி) (5) நீர் (அப்பு) (6) தீ (அக்னி (7) கால் (வாயு) வெளி ஆகாசம்.

லெடுத்து புளகாங்கிதம் அடைந்து அளவிலாச் சந்தோஷத்துடன் மார்போடணைத்து பால் ஊட்டினர்.

கந்தனுக்குப் பால் ஊட்டப்பெற்ற பேற்றினல், கிருத்திகா தேவிகள் அரும் பெரும் பாக்யத்தையும் பெற்றனர். கிருத்திகா தேவிகளால் பால் ஊட்டப் பெற்றமையால் கந்தனுக்கு கார்த்தி கேயன் என நாமத்தையும் சூட்டினர்.

அந்த வேளையில் கார்த்திகைப் பெண்கள் அறுவரும் கொடுத்த முலைப்பாலை, கந்தக்கடவுள் தாம்கொண்ட அறுமுகங்களாலும் பானம்பண்ணி பதினறு வயது படைத்த குமாரமூர்த்தமாக விளங்கி வேத சாஸ்த்திர அறுபத்தி நான்கு கலைஞான ஸ்வரூபி யாக காக்ஷியளித்தார்.

உமாதேவியாரின் திருப்பாதச் சிலம்பின் ஒன்பது மணியி லிருந்து உண்டாகிய ஒன்பது சக்திகளிடத்தில் வீரபாகு முதலிய நவ வீரர்களும், இலக்ஷம் வீரர்களும் தோன்றி இவர்கள் எல் லோரும் கந்தன் பால் வந்து பரிவாரங்களாகச் சூழ்ந்து நிற்க கந்தப் பெருமான் மஹாவிஷ்ணுவின் வேண்டுகோள்படி அவரது திருக்கண்ணினின்றும் தோன்றிய வல்லியம்மையாரை மணம் செய்து வெற்றியுடன் வெய்ய வலிமையையுடைய தாரகன் முதலிய சூரர்களில் வலிமையை கூரிய வேற்படையினல் வென்று பிரம்ம விஷ்ணு இந்த்ராதி தேவர்கள் துதிக்க மஹாவிஷ்ணுவின் மற்ருெரு கண்ணின்று தோன்றி இந்திரன் பால் வளர்ந்துவந்த தெய்வானை அம்மையாரையும் இந்திரனது வேண்டுகோளுக் கிணங்கி திருக்கல்யாணம் செய்து பின்னர் முருகக் கடவுளானவர் மேற் சொல்லிய தேவர்களைப்பார்த்து அவர்கள் பால் திருவருள் கூர்ந்து தேவர்களே சமுத்திரத்திஞல் சூழப்பட்ட அளவற்ற திரு வினையுடைய இந்தப் பரதகண்டத்திலே கடற்கரையினலும், மலையினலும், நதியினலும், பூஞ்சோலைகளினலும், செந்தாமரை யில்வீற்றிருக்கும் லெக்ஷிமிதேவியின் அருள் நோக்கினலும் பிரகாசிக் கின்ற அழகு பொருந்திய ஓர் இடத்தைச் சொல்லுங்கள். இவ்

விதச் சிறப்புகள் பெற்றிருக்கும் இடத்திலே நிலைஇய பண்பாய மர்ந்து நம்மை வந்து வழிபடுகின்ற தேவர்களுக்கும் முனிவர் கூட்டங்களுக்கும் நிலவுலகத்தில் வாழுகின்ற சகலமனிதர் களுக்கும் அவரவர்கள் வேண்டுகிற சகலசெல்வத்தையும் இனிமை யாகக் கொடுத்து அருள் மழையைப் பொழிந்துகொண்டு நாம் வீற்றிருப்போம் என திருவாய் மலர்ந்தருள அது கேட்டு தேவர்கள் யாவர்களும் புளகாங்கிதம் அடைந்து.

செய்யுள் 17.

தெரிந்த வானவ ரியாவரு மம்முறை தெளிந்து
விரிந்த போதத்தாலடியரேம் விரும்பினே மேனுட்
புரிந்த மாதவப் புணர்ப்பினு லீதுநீ புகன்று
யருந்த வந்தரு செயந்தி நன்னகர நின்னருள்-போல

செய்யுள் 18.

புணரி வான்றிரைத் தரங்கமும் பொற்றையும் பொருப்பின்
மணிவ ரன்றிய சாகர சங்கம வளத்தி
னணிவி ளங்கிய பொருநையும் திருமக ளன்பின்
குணமு முள்ளது செயந்திநன் னகரங்கூ றுதுமால்.

அம்முறை தீர்க்க ஆலோசனை செய்து தெளிந்து இன்ன தென நிச்சயித்து முருகக் கடவுளை வணங்கி சுவாமீ எங்கள் முன்னோர்கள் செய்த தவத்தின் பயனாகத் தாங்கள் இவ்வாறு திருவாய் மலர்ந்தருளினீர்கள். அரிய தவப்பயன்களை எளிதில் தரு கின்ற செயந்தீ (திருச்செந்தூர்) எனும் நல் நகரமானது சமுத் திரத்தின் அலைகளானது வந்து வணங்கப்பெறும் கரையினை யுடையதாயும், மலையினுலும், சோலைகளினுலும், சிறப்புடன் விளங்குவதாயும் முத்துக்களையும், பவழங்களையும், வலம்புரிச் சங்குகளையும், யுடையதான சமுத்திரத்திலே சங்கமமாகின்ற தாமிரபருணி நதியையுடையதாயும் லெக்ஷிமிதேவியின் அருள் நோக்கி நிறைந்ததாயும் தங்கள் திருவருள் போலவும் உள்ள

எனதேவர்கள் பிரார்த்தித்துக் கூறினார்கள் என வியாசர் சுகருக்குக் கூறியருளினதை சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்கு கூறியருளினர்.

முற்றிற்று.

---

## 5-வது அத்யாயம்

### ஸ்ரீ ஜெயந்தீபுர அத்யாயம்

நைமிசாரண்ய வாசிகளே.

தேவர்கள் ஸ்ரீ முருகக் கடவுளைப் பணிந்து எங்கள் ஆண்டவனாகிய முருகப் பெருமானே அடியேம் கூறிய செந்தில்மாநகரத்து விளங்குகின்ற கந்தமாதன மலையின் அழகையும் தாம்பிரவருணி நதியின் சிறப்பையும் இந்த சிறந்த செயந்தீபுரமெனப்படும் திருச்செந்தூரின் வளப்பத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம் கேட்டருள்வீராக எனப்பிரார்த்தித்துக் கூறுகிறார்கள்.

இயல் இசை நாடகம் எனப்படும் முத்தமிழுக்கு இருப்பிடமாகவும் சந்தணமரங்களையுடைய தாகவுமுள்ள கந்தமாதன மலையானது செங்காந்தள் மலர்களையும், சந்தணங்களையும் தடாகத்தின் அல்லிகளையும் வல்லிக்கொடிகளையும் பொருந்தி சிறந்த பல ரத்தினக் குவியல்களையும் தன்னுள்ளே அடங்கி விளங்குவதால் குராமலர்களையும் நல்லவாசனையைத் தரும் கடப்ப மலர்களையும் கயவல்லீ எனப்படும் தேவநாயகியாரையும், வல்லீ யெனப்படும் வள்ளிநாயகி யாரையும், பல ஒளிவீசுகின்ற சிறந்த ரத்திநாபரணங்களையும் தன்னிடத்தே கொண்ட முருகக் கடவுளே தங்களை நிகர்த்தது. மேலும் அக்கந்த மாதன மலையானது குராமலர்களையும் கொன்றை மலர்களையும் அழகுவாய்ந்த மூன்று இதழ்கள் பொருந்திய வில்வங்களையும் கூர்மையான பற்களையுடைய பாம்புகளையும், சந்திரனையும், கருந்தினைகளையும், தன்னிடத்தே அடக்கி விண் உலகத்தாராலும் மண் உலகத்தாராலும் புகழப்படும் தன்மை அடைந்தும் உலகத்தையும் உயிர்களையும் தாங்குதலினு

லும் ஆழியாகிய சமுத்திரத்தால் சூழப்பட்டும் யாவராலும் தனது எல்லையை அளவிட முடியாதபடி மேலே உயர்ந்து நின்று பல வளங்களுடன் ஐயானனம் எனப்படும் சிங்கங்களாற் சிறந்து பசுமையாகிய கொடிகளையும் பொருந்தியிருத்தலினாலும் யானைகளையும், கிளிகளையும் சிகரமேற் கொண்டும், வேலாயுதத்தைத் தரித்த குமாரசுவாமியைத் தன்மாட்டு உடைய தாயும் மேகத்தை தன்னிடத்தில் கொண்டும் தேவர்களாலும் வணங்கப்படுகின்ற தன்மையினால் குராமலர்களையும் கொன்றை மலர்களையும் வில்வங்களையும் கங்கா நதியையும் அரவத்தையும் தாங்கி விண்ணுலகத்தாராலும் மண்ணுலகத்தாராலும் புகழப்படும் தன்மையை அடைந்து உலகத்தையும் உயிர்களையும் தாங்கி ரக்ஷிப்பதினாலே எப்பொருளினும் கலந்த சிவபெருமானைப்போலவும் ஆழியான் எனப்படும் சக்கரத்தைத் தரித்த மஹாவிஷ்ணுவாலும் இனிது வணங்கப்படுகின்ற தன்மையையும் யாவராலும் தன்னுடைய எல்லையை நிர்ணயிக்க முடியாத பெருமையுடன் ஐந்து முகங்களாற் சிறந்து பைங்கொடியாகிய பார்வதிதேவியைப் பொருந்தியும் அறுகம் புல்லையும் வன்னிமலரையும் சிரமேற்கொண்டும் வேலாயுதத்தைத்தைத் தரித்த குமரக்கடவுளைத் தன்னிடத்தே கொண்டும் தேவர்களால் சதாவணங்கப்பெறும் பேற்றினையும்யுடைய சந்திரசேகரக் கடவுள் போலவும் விளங்குகிறது.

மேலும் கந்த மாதன மலையானது தன்மகிமை தெரிந்து வந்து சேருகின்ற தேவர்கள் கூட்டங்களையும் முனிவரர் கூட்டங்களையும் பூந்துணர்த்தரு எனப்படும் பூங்கொத்துக்களையுடைய மரங்களையும் சுந்தர அரம்பையெனும், வாழைமரங்களையும், வேழமாகிய யானைக் கூட்டங்களையும் சசி எனப்படும் சந்திரனையும் பொருவில் மேன்கை எனப்படும் ஒப்பிலாத மேலான காந்தியையும் தன்மாட்டு விளங்குவதால் தேவர் கூட்டங்களையும் கற்பகத் தருவையும் சுந்தர அரம்பையெனும் தேவப் பெண்களையும் ஐராவதத்தையும் சசியெனப்படும் இந்திராணியையும் மேன்கை எனும் தேவப் பெண்ணையும் உடையவனான பொன்னாட்டரசன் தேவேந்திரனின் பெரிய சபையைப்போன்றும் விளங்குகிறது.

மேலும் கந்தமாதன மலையானது

சந்தணத்தையும் கஸ்த்தூரியையும் பலவகைப்பட்ட பாம்புகளையும் யானையினது வெண்மையான தந்தத்தையும் பல இரத்தினங்களையும் அருமையான மருந்துகளையும் தன்வசம்யுடைத்ததாக இருப்பதால் செட்டிகளாகிய வணிக மரபினரையொத்து மிருக்கிறது.

மேலும் இக்கந்தமாதன பர்வதமானது தன்னிடம் மேகங்கள் மழைகளைப் பொழிந்து கொண்டேயிருப்பதாலும் தருக்கள் பூக்களை சொரிந்து கொண்டிருப்பதாலும், தான் அசைவிலாது நின்று கொண்டிருப்பதாலும், ஆனந்தக் கண்ணீர் சொரிந்து கைகளில் பூக்களை ஏந்தி யாரையும் நெகிழ்விக்கும் சுக்லங்களை மனதில் அடக்கி ஒரே நிலையானஞான நிலையில் நின்று மனத்தை மற்றென்றிடம் பரவ விடாது பேரன்புடன் சுப்ரமண்யக் கடவுளைப் பூசித்தலால் வாழ்கின்ற பெருந்தவமுடைய தொண்டர்களை நிகர்த்து மிருக்கிறது. யானையின் முழககமாம் தூங்கலோசை ஒருவரோடொருவர் பேசும் செப்பலோசை, மேகத்தின் ஓசையாம் துள்ளலோசை, காய், கனி, தண்பூ, தேமா, புளிமா, கூவிளம், கருவிளம், முதலியன கொண்டிருப்பதினால் செந்தமிழ்ப் போன்றும் விளங்குகிறது இக் கந்தமாதனம்.

இக் கந்தமாதன மலையானது நான்கு அருவிகளையும் எண்கை எனப்படும் கரடிகளையும், வெள்ளைக் கலைமான்களையும், தன்னிடத்தே பொருக்தி யிருத்தலால் பிரம்மாவை ஒத்திருக்கிறது.

எங்களை ஆட்கொண்ட அண்ணலே எங்களுக்குத் தெரிந்தவரை கந்தமாதனத்தின் தன்மையைச் சொன்னோம். இனி பொருனை எனப்படும் தாம்பிரவருணி நதியின் சிறப்பை தேவரீரது திருவடிகளைத் தியானித்துத் தெரிந்தவரை சொல்லுகின்றோம் என தேவர்கள் உரைத்தனர்

சுவாமீ

எல்லா ஜீவாத்மாக்களும் வந்து படிய ஆசைப்படுகின்ற தாம்பிரவருணி நதியானது மிகத்தூய்மையாலும் வாசனை பொருந்திய

கஸ்த்தூரிமத மானங்கொண்டு விளங்குவதாலும் முக்கனி அவலோடு சமுத்திரமாகிய கடலையும் கலந்து அகத்திய மலையிலே சஞ்சரிக்கின்ற யானைக்கூட்டங்களால் விடப்பட்ட தந்தங்களைச் சுமந்து ஓடுதலாலும் ஸ்ரீ ஜெயந்தீ புரத்தில் நான்கு வேதபதியாய் விளங்குகிற ஸ்ரீ விநாயகக் கடவுளைப்போல் விளங்குகிறது

பிறைவடிவமான வெள்ளைச் சங்கு சந்திரன்போலவும் கொக்கிறகு நுரையில் ஏற்படும் மின்னல் போலவும் பல வாய்க்கால்கள் ஜடைகள்போலவும் சிறந்த தாமரைகள் கபாலம் போலவும் விளங்குகின்றமையால் தாருகாவனத்தில் பிரம்ம கபாலத்தோடுசென்ற பிக்ஷாடன மூர்த்தியைப் போன்றும் விளங்குகிறது.

மேலும் பாம்பை தன்னிடத்தே வைத்திருத்தலினாலும் பிரவாகத்தில் வரியதோல் எனப்படும் யானையையும் கொண்டுவருதலாலும் அம்பர எனப்படும் கடலினிடத்து பொருந்தலாலும் இரு பக்கங்களில் நான்கு வேதங்களையும் நவிலப்பயின்றவர்கள் படிதலாலும், தேவர்களும் வந்து வணங்குவதாலும், மறை நாயகனும் சிவபெருமானை நிகர்த்தது இப்பொருனை நதி.

செங்கடம்பை எடுத்தும் குறிஞ்சி நிலத்தில் பிரவாகமெடுத்து ஓடியும் சங்கமுந்தியும் சீரலைவாய்க்கரை சார்ந்தும் எங்கு மாசுர மொழித்தலாலும் முருகக்கடவுளே தங்களை நிகர்த்தது இப் பொருனை நதி.

வாசனை பொருந்திய சிவப்புப் புஷ்ப்பங்களினால் மேனி சிவந்தும் மலைக்குகைகளில் நுழைந்தும் தேவர்கள் வாழ்த்த சமுத்திரத்தில் நடப்பது போன்று கலப்பதினால் சிவந்த புஷ்ப்பங்களைச் சுமந்து மேனி சிவந்து கிரௌஞ்சமலையை ஊடுருவி வந்து சமுத்திரத்திற் பாய்ந்து சூரன் நகராம் மஹேந்திரத்திற்கு சென்று வெற்றிவாகை சூடிய வீரவாகு தேவரை ஒத்திருக்கிறது இப் பொருனை நதி.

மலையில் பிறந்தும் சிவபெருமானது மேனியில் தங்கியும் பூமி தேவிக்கு மேலாகியும் சராசர வஸ்த்துக்கள் அனைத்தும் பிழைப்




தினைப்புனத்தில் யானையைக்கண்டு பயந்து வள்ளியம்மன் சுப்ரமண்யரைக் கட்டிக்கொள்ளுதல்

பதற்கு இன்னமுதமாயும் விளங்குவதாலே மலை மகளாய் பிறந்து சிவத்தின் இடப்பாகம்பெற்று அருள் கண்ணோக்கினால் அமுதப் பிரவாகமாய் உய்விக்கும் ஸ்ரீ பார்வதி தேவியைப்போன்றது இப் பொருனை.

சங்குகளை எந்தியும் சுழித்துக் கொண்டும் மாதர்கள் ஸ்நானம் செய்கையில் அவரணிந்த பொன்களைத் தழுவியும் பிரவாகத்தில் மருத மரத்தையும் ஒடித்து தன்வழியில் அகப்பட்ட எல்லாவற்றை யும் கைக்கொள்ளலால் சங்கம் எந்தியும் சக்கரம் கொண்டும் மாத ரைத் தழுவிப் பொன்னோடு புணர்ந்தும் மருதத்தை ஒடித்து அகில மெலாம் உண்டு தேவர்களுக்கு அமுதம் கொடுத்த ஸ்ரீ மஹா விஷ் ணுவைப் போன்றது இப்பொருனைநதி.

பல விருக்ஷங்களும் வெண்மையான சங்குகளும் கண்கள் போலுள்ள பல மீன்கள் கூட்டங்களும் விளங்க தேவர்கள் யாவரும் தன்னிடம் ஸ்நானம் செய்து எழுவதாலும் கற்பகத் தருவையும், வெள்ளையானையையும், பல கண்களையும் அடைந்து தேவர்களால் வணங்கப்படும் தேவேந்திரனை ஒத்தது இப்பொருனை நதி.

வேகத்தில் மிகுந்தும், மிருதுவாகியும், இனியருசியாயும் பல நிறங்களோடும் கலந்து ஓசைபெற்று விரைவையுடையதாய் குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை எனும் ஐவகை நிலங் களிலும் சென்று இரத்தினங்களையும் புதியமலர்களையும் அவற்றின் உற்பத்தி தானங்களையுங் காட்டிவிளங்குவதால் ஆசுகவி மதுரகவி சித்ரகவி விஸ்தாரகவி எனும் நால்வகைப்பாடலும் அதன் ஓசையும் ஐந்து திணைகளும் உடையதாய் காசு, நாள், மலர் பிறப்பு எனும் உதாரண வாய்ப்பாடுகளை உடைய கும்பமுனி யெனப்படும் அகத் தியமாமுனிவரின் தமிழை ஒத்தது இப் பொருனைநதி.

ஒங்கெல் எனும் மலையில்வாழ்கின்ற யானையைத்தன்னிடம் கொண்டும் கால் எனப்படும் பல வாய்க்கால்களிலே தென்றல் காற்று, அசோகம், மா, நீலம், தாமரைஎனும் ஐந்துவகை புஷ்பங் களையும் தாங்கிவருவதினால் இருள் யானையில் தென்றல் காற்றுடன்

முல்லை அசோகம் முழுநீலம் சூத அல்லிவல்ரோடு ஐந்து பாணங் களுடன் விளங்குகின்ற மன்மதனையும் ஒத்தது இந்நதி.

கடனாநதியும் மணிமுத்தாநதியும் சித்ராநதியும் பச்சையும் பச் சையாறு எனப்படும் நதியும் தன்னிடத்தே வந்து சேர்ந்தபின் தானும் சமுத்திரத்தில் சங்கமமாகிற காக்ஷியானது தோழிப் பெண் களுடன் கூடிய பெண்ணானவள் தோழிகள் கூட்டத்துடன் சமுத்திர ஸ்நானம் செய்யப் போவதுபோல் விளங்குகிறது இப் பொருனை நதி. எனத் தேவர்கள் தங்களுக்கு தெரிந்தவரையும் தெரிவித்து பின்னும் சொல்கின்றார்கள்.

சுவாமீ.

எங்களுக்குத் தெரிந்தவரை தாம்பிரபருணி நதியின் பெரு மையைத் தெரிவித்தோம். இனி இச் செயந்தீமா நகரத்தின் பெரு மைகளைத் தெரிந்தவரை சொல்லுகின்றோம். தேவரீர் கேட்டருள வேண்டுமெனப் பிரார்த்தித்து நின்ற தேவர்களைப் பார்த்து சர்வ லோகநாயகன் அகமகிழ்ந்து தேவர்களே செயந்திபுரத்தின் மகிமை யைச் சொல்லுங்கள் என ஆஞ்ஞை செய்யவும் தேவர்கள் அள விலா சந்தோஷமடைந்து வணங்கி செயந்திபுர மஹிமையைச் சொல்ல ஆரம்பித்தார்கள்.

சுவாமீ.

பெருமை தங்கிய, உருத்திராக்ஷ மாலைகளை அணிந்த மெய் யடியார்களுக்கும் பாட்டுக்களைத் தவராமல் இசைத்துப்பாடும் வித் வான்களுக்கும் யாசிப்பவர்களுக்கும் கற்பக விருக்ஷம் போன்று தினம் தினம் பாலன்னம் கொடுத்தும் சொர்ணதானம் செய்தும் மகிழக்கூடியவர்களும் தேவாரம் திருவாசகம் திருப்புகழ் முதலிய தமிழ் மறைகளை முறையோடு ஓதி உணர்ந்து அதற்குரிய அர்த்தங் களை நா வன்மையுடன் சொல்பவர்களும் இச்செயந்தீ புரத்தி லேயே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

இந்நகரத்துப் பெண்மணிகள் உப்பரிகையின் மேலிருந்து பந்து விளையாட அப்பந்து வானளாவி கரும்பெனும் புனர்பூச

நக்ஷத்திரத்தையும் ஊடுருவிச் சென்று கறபகச் சோலையிலுள்ள மரங்களில் விழுவதால் அம்மரங்களிலுள்ள தேன் கூடுகளிலிருந்து தேனனது மழை போலச் சொரிகின்றது.

இச்செயந்தீபுரத்தில் நிலையாகவாழக்கூடியவர்கள் அநுதாத்தம்உதாத்தம் ஸ்வருதம் ப்ரசயம் என்றுசொல்லுகின்ற தானம்தவராமல் உச்சரிக்கும் வேத ஒலிகளும் வலம்புரி சங்குகளின் ஒலிகளும் யானைகள் மதசலபெருக்கினுல் செய்கின்ற ஒலிகளும் முழங்கிக் கொண்டிருக்கும்.

பலாமரங்கள் மேகமும் நக்ஷத்திரமும் பொருந்தியிருக்கின்ற ஆகாயம் வரைவளர்ந்து காய்க்கும். குளங்களிலுள்ள தாம்பிரவருனியின் தண்ணீரானது சூர்ய வெப்பத்தைத் தணிக்கும். சந்தணமரத்தின் கிளைகள் மேலோங்கி வளர்ந்து சூரியனைச்செல்லவிடாது தடுக்கும் நஞ்சைகளில் உண்டாகும் நெற்பயிர்கள் வாயுமண்டலத்தையும் கடந்து மேலே வளருகின்ற தன்மையுடையதா யிருக்கிறது. கரும்புச் சோலையிலுள்ள கரும்புகளில் சதாரசம்வடிந்து கொண்டேயிருக்கும். இரவில் சங்குகள் கூட்டமாக நெல்வயல்களில் சஞ்சரிக்கும் மரக்கூட்டங்களின் கிளைகள் ஆகாயத்தில் அருந்ததி நக்ஷதிரம் வரை வளர்ந்தோங்கி நிற்கும் கன்றை நினைந்து பால் சொரியும் மேகக் கூட்டத்தை நிகர்த்த எருமை மாடுகளின் கொம்பில் சங்குகள் ஊர்ந்து முத்துக்களைச் சொரிய அதுகண்டு குவளைப் பூக்கள் இது சந்திரன்கதிர் என மலரும் வளப்பமுடையது.

வண்டல் விளையாடும் மாதர்களின் கூந்தலை மேகம் என நினைத்து அழகியதோகையையுடைய மயில் கூட்டங்கள் சிறகை விரித்தாடும் வளப்பத்தையுடையது.

செய்யுள் 42

வீதியின் மறையோரோதும் வேள்விக்கா ரிசைநூல் கேட்டுப்
போது கொய் கிளையும் பாடற்பூவையு மிழற்றுந் தீஞ்சொற்கே
தமின் முனிவர் தேவர் கேட்டவி நமக்குண்டா மென்றே
திலாப் பொதும்ப ரெல்லா மிமைப்பிலா திருப்பர்மாதோ.

செய்யுள் 43

அம்புருவங்கோடாம லயுல்விழியிமை யாடாமமற்றம்
புருமூவேழான தானத்திற் கானமூட்டிக் கம்புருக்
களம்விம் மாமறகனியஞர் பாடுந்தோறும் தும்புரு
முதலோர் கேட்டுச் சுடர்முடி துளக்கு வாரால்.

வீதிகளில் வேதியர்கள் யாக காலத்தில் சொல்லக்கூடிய ஸ்வரம், பொருந்திய வேதமந்திர ஓசைகளைக்கேட்டு மனனம் செய்து கொண்ட கிளியும் நாகணவாய் பக்ஷியும் இனிமையான அவ்வேத மொழிகளை ஒலிக்கக்கேட்ட தேவலோகத்தவர்களும், முனிவரர் களும், யாகம் நடைபெறுகிறதென்று எண்ணி யாகத்தில் தமக்குரிய அவிர்பாகத்தை பெறநினைந்து செலந்தீபுரம் வந்து அங்குள்ள சோலைகளில் தங்கி யாகத்துக்கு நம்மை எப்பொழுது அழைப் பார்கள் என இமைப்பிலாது காத்துக்கொண்டிருக்கிறார்கள்.

மதுர மொழிகளையுடைய இந்நகரப் பெண்மணிகள் தம்புரு வாத்யத்தைச் சுருதிசெய்து * இருபத்தொரு ஸ்தானங்களில் கீதங்களை அமைத்து தங்களின் அழகிய புருவம் கோணாமலும் விழிகள் அசையாமலும், கழுத்து விம்மாமலும், பாடும்பொழு தெல்லாம் தும்புரு முதலிய தேவலோகத்து வித்வான்கள் எல் லோரும் கேட்டும் பிரமித்தும் புகழ்ந்து தலையசைப்பர்

தெளிந்த நான்குவேத ஞானத்தையுடைய அந்தணராம் திரு சுதந்திர முனிவர்கள் யாவரும் ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட் பித்தல் ஈதல் ஏற்றல் ஆகிய ஆறுதர்மங்களுடன் வைதீக மார்க் கத்தை உடையவராய் பெரிய யாகங்கள் செய்வதினால் மேன்மை யடைந்து மூன்றுகால நியதிகளையும் தவராமல் அநுஷ்டித்து இருவினைப் பயனை நீக்கிய முருகப் பெருமானின் திருவடித்தா மரைகளில் சித்தமனதைச் செலுத்தும் பெருமை வாய்ந்தவர்கள். இச்செயந்தீபுர வாழ்வையே வாழ்வாகக் கொண்டிருப்பர்.

---

* இருபத்தொரு ஸ்த்தானங்களாவன—மந்தரஸ்தானம் 7 தாரஸ்த்தானம் 7 உச்சஸ்த்தானம் 7 ஆக 21

செய்யுள் 49.

ஏர்க்காலின் றலைபிடிப்பா ரிணைக்காலி லெழுந்தகய லினமார்த் தாண்டன்
றேர்க்காலின் வெடிதாவிச் செருக்காற்றிங் களினமுதச் சேறுடாடிப்
போர்க்காலிற் போய்வானப் புதுக்காலிற் குடைந்தாடிப் பொழியு மேக
நீர்க்காலின் மீண்டிறங்கி நெடுங்காலின் றலையுலவி நிகழுமாதோ.

நஞ்சை நிலச்சேற்றில் வசிக்கக்கூடிய மீன்கள் உழுவர் ஏர் பிடித்து உழும் சமயம் அன்னவர் காலில் மிதிபட்டுத் துள்ளிஎழுந்து சூரிய மண்டலம் சென்று வெப்பம் தாங்காது சந்திரனது அமிர்தத்தில் விழுந்து வலிமைபெற்று மேகமண்டலத்தில் உலாவி ஆகாச கங்கையில் முழ்கி அம்மேகம் பொழியும் மழையினூடே வந்து திரும்ப நஞ்சையில் சேரும் சிறப்புடைத்தது இச்செயர்தீரகரம்.

தெருக்களிலெல்லாம்பழய நான்குவேத முழக்கத்தொனியும் பற்பல சுருதிதொனியும் கல்யாண மேளவாத்யத்தொனியும் மனு நெறி படிக்கும்தொனியும் மதயானை சத்தமிடும் தொனியும் மயிலனைய மாதர்கள் நடமாடும் தொனியும், பிரதிப் பிரயோசனம் கருதாது கொடுக்கும் (மேகம்போல் கொடை கொடுக்கும்) தொனியும், கடல் தொனியும், அடங்கும்படி சதா ஒலித்துக் கொண்டிருக்கும சிறப்புடையது இச்செயர்தீபுரம்.

முரசு அடித்து அழைத்து கொடைகொடுக்கும் சப்தமும் போர்வீரர் வெற்றியில் ஒலிக்கும் முரசுத்தொனியும், அந்தணர் யாகங்களில் ஒலிக்கும் வேதத் தொனியும், இரவும் பகலும் மன்மத ஒலியாகிய கடல் முரசுடன் மாறுகொண்டு ஒலிக்கும் தன்மை யுடையது இச்செந்திலம்பதி திருமகள் திருமாலுடன் வருவது போல பல்லக்குகளில்வரும் தம்பதிகளும் இலை, தளிர், மலர் முதலியவைகளை இறைவனை அர்ச்சிப்பதற்காக சூரிய உதயத்துக் கும்முன் கொய்வார்களும் பல கலைகளை முற்றும் தெரிந்த நல் ஆசிரியர்களிடத்து பணிவிடைகளை முறையாகச்செய்து நான்கு

வேதங்களைக் கற்றறிந்தவர்களும் வீற்றிருக்கும் வீதிகள் பல உள்ளன இச்செயந்திமா நகரம்.

இத்தகைய வளங்களோடு கூடியது இச்செயந்திமாநகரம் எனத்தேவர்கள் கூற ஒளி பொருந்திய வேலாயுதத்தைக் கரத்தில் தரித்து மயிலை வாகனமாகக்கொண்ட ஆறுமுகக்கடவுள் கேட்டு மனமகிழ்ந்து வீரர்தலைவனும் வீராவாகுவை நோக்கி வீரவாகுவே உன்தம்பிமார்களுடன் உன் சைன்யங்களையும் அழைத்துக் கொண்டு வா எனக்கட்டளையிட அவ்வுததரவைச்சிர மேற்கொண்டு இருகை கூப்பிவணங்கி முடிபட நமஸ்கரித்து எழுந்து நின்று ஆண்டவனே அவ்வாறு ஆகுக என ஒரு நொடியில் வீர சைன்யங்களையும் பூதகணங்களையும் அழைத்து வந்தனன். பூதப் படைகள் சந்தோஷ மிகுதியால் கூத்தாடின. ஆதிசேஷனும் இப் பாரத்தைத் தாங்கமுடியாது முடி அசைத்து நெளித்தனன். அதுகாலை குமாரக்கடவுள் வாயுதேவனை நோக்கி வாயு நீ மனோவேகம் எனும் தேரைக்கொண்டுவா என ஆஞ்ஞை செய்ய அவ்வுத்தரவை சிறமேற்கொண்டு முடிபடவணங்கி எழுந்து சென்று ஒரு நொடிப் பொழுதில் மனோவேகம் எனும் தேரைக் கொண்டுவந்து நிறுத்தி வணங்கி ஒருபால் நிற்கவும் சர்வலோக நாயகனும் வேற்படைக்கடவுள் தானிருந்த சிம்மாசனம்விட்டு வள்ளி தேவயானையுடன் விரைந்து எழுந்து தேவர்களால் கொண்டு வைக்கப்பட்ட சூரியன் ஒளி போன்று பிரகாசிக்கும் தனது பொற்பாதுகையை அணிந்து பெருமையுடன் விளங்கும் கோபுரவாயிலை அடைந்து முன்னிற்கும் தேரில் ஆரோகணித்த தும் மன்மதன் அடப்பம் தாங்கவும் வருணன் வெற்றிலை படிக்கம் எந்தவும் யமன் வாட்படை தாங்கி நிற்கவும் இந்திரன் வெண் சாமரம் வீசவும் சூரியனும் சந்திரனும் குடைபிடிக்கவும் தும்புருவும் நாரதரும் வீணைவாசிக்கவும் எழுநாவுள்ள அக்னிதேவனும் தீவர்த்தி பிடிக்கவும், நிருதி ஆலவட்டத்தையும், குபேரன் விசிறியையும், வீசி நிற்கவும் தேவர்கள் யாவர்களும் புதிய மலர்களைத் தூவவும்; அன்னவாகனத்தையுடைய பிரமனும் அன்னமேல் கொண்டும் ஆதிசேஷசயனனாகிய மஹாவிஷ்ணுவும் கருடன்மேல்கொண்டும் பக்கத்தில் வரவும் தேவர்களும், முனிவர்களும், கிரிசுகந்திரா

களும், ஆரவாரிக்கவும், வேதங்களும் மனிதர்களும் தோத்திரம் செய்யவும், துடி உடுக்கை முதலிய வாத்யங்கள் கோஷிக்கவும், பறவைகள் பாடுவனபோன்று சத்தங்கள் செய்யவும், மேகங்கள் சந்தோஷத்தினுல் இடிமுழகத்தைச் செய்யவும், செழுமறை பெருமான் வந்தான் தேவாதிதேவன் வந்தான் வேற்படை குமரன் வந்தான் ஆறுமுக அண்ணல் வந்தான் கடப்பமலர் அணிந்த கந்தக் கடவுள் வந்தான், புலவர் பெருமான் வந்தான், என்று சின்னங்கள் முழங்கவும் இது கண்டு சந்தோஷித்து வாயுதேவனை நோக்கி வாயுவே நீ மேலே சொல்லப்பட்ட மிகச் சிறப்புவாய்ந்த திருச்செந்திமா நகரத்துக்குத் தேரை நடத்துக என ஆஞ்ஞாபிக்கவும் ஆஞ்ஞைப்படி திருத்தேரை செயந்திபுரத்துக்கு கொண்டு வந்து நிறுத்தி வாயுதேவன் வணங்கவும் முருகக்கடவுள் தேவர்கள் கூட்டத்தில் நிற்கும் தேவதச்சன் என்னும் தேவ சிற்பியை நோக்கி சிற்பியே நீ இங்கு ஒரு திருக்கோயில் அமைக்கவும், என ஆஞ்ஞாபிக்கவும் அவ்வாஞ்ஞையை சிறமேற்கொண்டு க்ஷணநேரத்தில் சமுத்திரத்தின் அலைகள் வந்து படியும்படி பெரிய மதில்களை எழுப்பி அதனுள் அழகிய திருக்கோயிலை அமைத்து ஆண்டவன் திருவடி பணிந்து நிற்க சர்வலோக நாயகன் சந்தோஷித்து வள்ளி தேவசேனை சகிதமாக தேரை விட்டிறங்கி திருக்கோயிலிற் சென்று அங்கு அமைக்கப்பட்டிருக்கும் நவரத்தின நவபீடத்தில் அமர்ந்து தன்னுடன் வந்த பிரமனையும் விஷ்ணுவையும் பார்த்து நீங்கள் நம் கோயிலிற் உங்களுக் குற்றஇடத்தில் அமர்ந்திருங்கள் எனவிடை கொடுத்தும் தேவர்களைப் பார்த்து நீங்களும் இக் கோயிலில் ஆங்கு ஆங்கு வீற்றிருங்கள் என ஆஞ்ஞை செய்தும்,

செய்யுள் 72.

வீற்றிருந் தருளினேடும் வேதற்கும் விளங்குஞ் சோதி
யாற்றலந் திகிரி யாற்கு மமரர்க்கும் விடை முன்னிந்து
தேற்று நான் மறைவல்லோரார் திரிசுதந்திரத்தர் வாழ்த்திப்
போற்றவேற் கரத்துப் புத்தேள் புவனிகாத் தளிக்குநாளில்

தன்னுடன் வந்த திரிசுதந்திர முனீஸ்வரர்கள் பூஜித்து தோத்

எனவியாசர் சுகருக்கு உபதேசித்ததை சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்கு உபதேசித்தருளினர்.

ஐந்தாவது செயந்தீபுர அத்யாயம் முற்றிற்று.

---

## ஆறுவது அத்தியாயம்.

### வள்ளியம்மை திரு அவதார வைபவம்.

உலகமுழுவதும் அசையாமலிருக்கும் பொருட்டு நிகரில்லாத ஆணிபோல உயர்ந்து நீண்ட மேருமலையில் கோபத்தையும், பகையையும், அறவே நீக்கிய ஏமன் என்னும் ஓர் முனிவன் சங்கு சக்கரத்தையும் துழாய் மாலையையும் அணிந்த ஸ்ரீ மஹாவிஷ்ணுவைக் குறித்து கடும் தவம் செய்யும் காலை இதை தேவர்கோன் தெரிந்து இத்தவத்தால் தனக்குத் துன்பம் விளையுமோ வென அஞ்சி தவத்தைக் கெடுக்க சூழ்ச்சி செய்து அதற்காக இனிய கீதங்களை பிறர் மயங்கப்பாடும் தேவலோகத்து நடனமாதர்களையும் கந்தருவர்களையும் அழைத்து நடனமாதர்களே கந்தருவர்களே மேருமலையில் ஏமன் எனும் முனிவன் மஹாவிஷ்ணுவை நோக்கி கடும் தவம் செய்து கொண்டிருக்கிறுன், அவன் தவம் முற்றுப் பெற்றால் தேவர்களாகிய நம்முடைய நிலை சீர்குலையும். ஆகையால் நீங்கள் விரைவில் மேருமலையில் தவம் செய்கின்ற ஏம முனிவனிடம் சென்று அவனது நிலையான மனத்தை உங்கள் ஆடல் பாடல்களால் நெகிழச்செய்து மயங்கவைத்து தவத்தைக் குலைத்து விடவேண்டும் என இந்திரன் ஆஞ்ஞை செய்ய, நாட்டியப் பெண்களும் கந்தருவரும் நல்லது எனச் சம்மதித்து அவ்விடம் விட்டு நீங்கி மேருமலையில் தவம் செய்கின்ற ஏம முனிவன் முன் சென்றனர். முனிவர் மெய்மறந்த தவத்திலிருப்பதைக் கண்டு அவர் முன் கந்தருவர் தம் கைகளில் வீணைகள் ஏந்தி தேனினும் இனிய கீதங்களைப் பாடவும் அழகான நுண்ணிய இடைகளையுடைய

மணிகள் இனிது ஒலிக்கப் பலதாளங்களில் நாட்டியம் ஆடவும் இத்தொனிகள் குற்றமிலா எம முனிவரின் செவிகளில் சேர்ந்து மனதை நெகிழச் செய்து கண்களை விழிக்கச் செய்து தவத்தை இழக்கச் செய்தது. யோகத்தை விட்ட எம முனிவன் தன்னை மயக்கும் பொருட்டு தன் முன் வந்து நிற்கின்ற தேன்போலப் பாடிய கந்தருவர்களையும் மயிலை நிகர்த்த நடன மாதர்களையும் நோக்கி நீங்கள் எல்லோரும் எனக்கு மோகத்தையுண்டு பண்ணி தவத்தைக் குலைக்கும் எண்ணத்துடன் நான் தவம்செயும் இடம் வந்து என் தவத்தைக் கெடுத்து அவமதி செய்தமையால் நீங்கள் மலையில் வேடுவர்களாகவும் வேடுவப் பெண்களாகவும் பிறக்கக்கடவது என சாபம் கொடுத்தார்.

அந்த சாபத்தைக் கேட்டதும் கந்தருவரும், நாட்டியப் பெண் களும், மனம் வருந்தி, மயக்கத்தையடைந்து அம்முனிவரின் அடி களில், வீழ்ந்து வணங்கி, சுவாமீ நாங்கள் செய்த குற்றத்தை மன்னித்து, எங்களுக்கு இக், கொடிய சாபத்தை நீக்கி' அருள வேண்டுமெனப் பிரார்த்திக்கவும், அது கேட்ட முனிவர் "நீர் கிழிய எய்த வடுப்போலாகுமே, சீர் ஒழுகு சான்றோர் சினம்" எனும் மொழிப்படி, கோபம் தணிந்து, சாக்ஷாத்காரமாகிய சிவ பெருமானுடைய திருவடிகளைத் தியானித்து, தியான பலத்தால், பின்னல் நடக்கவேண்டிய வைபவங்களைத் தெரிந்து அவர்களை நோக்கி, தேவமாதர்களே, கந்தருவர்களே கொன்றை மாலையை யும், ஆத்திமலர் மாலையையும் அணியும் மூலமின்றி முளைத்து கைலாசத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமான் தந்த வேத நாய கனும் குமாரச் கடவுள் தம் திருக்கரத்தில் ஒளி பொருந்திய வேலாயுதத்தைத் தரித்து சூரன் முதலிய கொடிய அசுரர்களை ஒழித்து தேவர்களுக்கும், யாவர்களுக்கும் அனுக்ரஹம் செய்து வள்ளி தேவசேனை சகிதமாக செயந்திபுர நன் நகரத்தில் இனிது வீற்றிருக்கும் சமயம் வேடர்கள் குலம் உயரவும் மலைச்சாரல் தினைப்புனங்கள் முதலியன தங்கள் தங்கள் நிலை உயர்ந்து புகழ் பெறவும் வேண்டிய காலம்வரை வள்ளிநாயகியாரது மனதில் தாம் இச்சா சக்தியெனவும் முதல் மனைவி யெனவும் தெய்வானை தனக்கு நிகர்த்தவள் இல்லை யெனவும் எண்ணம் தோன்றின.

அதை அறிந்த முருகக் கடவுள் வள்ளியம்மையைமையை நோக்கி வள்ளி நாயகியே நீ இப்படி நினைந்த பாபம் தீர உமாதேவிக்குச் சேடியாக விரும்பி அதற்காக மான்வடிவத்துடன் தவம் செய்கின்ற காஞ்சனை எனும் மான் வயிற்றில் பிறந்து வேடுவர்கள் குலத்தில் வளர்ந்து வருக. அது சமயம் நாம் அங்கு வந்து உனை கல்யாணம் செய்து கொண்டு வருவோம் எனக் கூறிய மொழிப்படி வள்ளியம்மை உங்கள் குலம் வந்து வளர்வள். அப்பொழுது மூலைத்தானை எல்லோர்க்கும் முன்னே தோன்றிய சிவபெருமானது திருக் குமாரராகிய ஸ்ரீ முருகக் கடவுள் வந்து மணம் புரிவர். அந் தக்ஷணமே உங்கள் சாபம் நீங்கும் என முனிவன் மொழிந்து முன் போல் தவத்துக்கு ஏகினன். தேவேந்திரனது கட்டளையால் வந்த கந்தர்வரும், நடனமாதரும் முனிவன் சாபத்தினுல் வேட ரும், வேடுவப் பெண்களும் ஆயினர்.

குமாரசுவாமியினது இச்சா சக்தியும், மஹாவிஷ்ணுவின் வலக்கண்ணில் தோன்றியவளுமான வள்ளி நாயகியார் மலைச் சாரலில் தெய்வக் காஞ்சனையாம் மான் வயிற்றில் கந்தனது திரு வருளால் சேர்ந்தனள். உலக நாயகியை தன் கர்ப்பத்திலே உற்ற காஞ்சனையெனும் மானும் கர்ப்பச் சின்னமாகிய உடல் பருத்து வெளுத்து பாரம் தாங்கமாட்டாது வருந்தி மெலிந்து பிரசவிப் பதற்கு அம்மலைச்சாரலில் அருகேயுள்ள சிற்றூர் சமீபம் வந்தது. அம்மானின் வரவை அறிந்த வேடுவர்கள் அதனைப் பார்த்து விரை வாக எழுந்து நாம் இம்மானுக்கு இனிய துணையாகச் செல்வோம் என மொழிந்து மானின் சமீபம் வந்து அதனைச் சூழ்ந்தனர்.

தெய்வமான் வடிவமாயிருக்கும் காஞ்சனைக்கு அந்த வேடுவர் கள் தன்னைச் சூழ்ந்திருக்க, பிரசவ வேதனைகள் உண்டாகி மிகவும் கஷ்டப்பட்டு சர்வலோக நாயகியாம் வள்ளியம்மை யெனும் பொற்கொடியைப் பெற்றது. பெற்றதும் குழந்தை தன் வடிவ மில்லாமல் தன் இனத்துக்கு மாறான தெய்வப் பெண்ணுக இருப் பதைப் பார்த்து அச்சமயத்திலேயே சர்வலோக நாயகியாம் வள்ளி நாயகியைத் தன் வயிற்றில் தாங்கிய புண்ய விசேஷத்தால் தான்

தின் வாம பாகத்திலுறையும், ஸ்ரீ பார்வதி தேவிக்குச்சேடியாகும் அரும் பெரும் பலனைப் பெற்றும் அவ்விடம் விட்டு ஸ்ரீ புரம் வந்து பார்வதி தேவியை அடைந்தாள்.

மான் வயிற்றில் பிறந்த குழந்தை கோடி சூர்யப் பிரகாசமாக விளங்குவதைக் கண்ட வேடர்களும், வேடுவப் பெண்மணிகளும் கண்டு அளவிலாச் சந்தோஷமடைந்து அக்குழந்தையை எடுத்து அம்மலைக்கு அரசனான நம்பிராஜனிடம் கொடுத்து குழந்தையின் ஜனன விசேஷங்களையும் சொன்னார்கள். தனது பிரஜைகளால் கண்டெடுத்துக் கொண்டு வந்து தரப்பட்ட குழந்தையை நம்பி ராஜன் தனது இருகரங்களாலும் பெற்று கண்குளிரப் பார்த்து அக்குழந்தை தெய்வ ஒளி வீசுகின்ற தன்மையை அறிந்து, உள்ளங் களிர்ந்து நமது குல தெய்வமாகிய ஸ்ரீ முருகக் கடவுள் நமக்குற்ற பெண் மகவுக் குறையை நீக்குவான் வேண்டி இன்னருள் செய்தா னெனக் கூத்தாடி, பரவசப்பட்டு தன் மனைவியாம் நங்கை கையில் கொடுக்க, நங்கையும் பெருமகிழ்ச்சியுடன் குழந்தையை மார்போ டணைத்து முத்தமிடவும் திருவருளால் நங்கையின் தனங்களில் பால் சுரக்க, அப்பாலை குழந்தைக்கு ஊட்டி நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்த்து வந்தார்கள்.

வளர்ந்து வரும் நாளில் குழந்தைக்கு நாமகரணம் செய்வதற்கு எண்ணிப் பல பெரியோர்களை அழைத்து அவர்களிடம் குழந்தைக்கு என்ன பெயர் வைக்கலாம் எனக் கேட்கவும், அப்பெரியோர்கள் திருவருளைச் சிந்தித்து நன்றாக யோசித்துக் குழந்தையானது வல்லிக் கொடிகளிடையே பிறந்தபடியால் இக்குழந்தைக்கு வள்ளியம்மை என நாமகரணம் செய்யலாம் எனச் சொல்லவும் நம்பிராஜனும் மிகவும் சந்தோஷித்து, வள்ளியம்மை என நாம கரணம் செய்து மகிழ்ந்திருந்தான்.

இறுதியிலா வேதங்களுக்கு எட்டாத வள்ளி நாயகியும் காலில் பொற்சதங்கை முதல் சர்வாபரணங்களையும் அணிந்து தேவா மிருதம் போன்ற இனிய வசனங்களால் நம்பி ராஜன் முதலி யோரை மகிழ்விக்கும் [illegible]

தீபம் போலவும் பிரகாசித்து வளர்பிறை சந்திரனை யொத்து வளர்ந்து வந்தாள். தேவர்கள் மலர் மழை பெய்தார்கள்.

தேவதுந்துபியின் முழக்கத்தையும், அருவி நீர் விழுச்சியின் முழக்கத்தையும் குறிஞ்சிப்பறை வாத்யங்களின் முழக்கத்தையும் உடைய அம்மலைச்சாரலிலே அரசனாக விளங்குகின்ற நம்பி ராஜன் வள்ளி நாயகியைப் பெற்றதினால் தன் பிள்ளைக்கலி நீங்கிப் பரமானந்தத்தை யடைந்து வள்ளியம்மை * பேதைப் பருவத்தையும் பெதும்பைப் பருவத்தையும் கடந்து வேல்கொண்ட திருக்கரத்தை யுடைய கடவுளுக்கு இனிய மங்கைப் பருவத்தைப் பெண்மைக் குணம் முதிரப் பெறும்வரையும் இனிய செய்தலுடன் சந்தோஷித்துப் பாலித்து வந்தான்.

அகில உலகத்துக்கு தாயாகிய வள்ளிநாயகியாரை நம்பிராஜன் வளர்த்து வரும் நாளில் புனங்களிலுள்ள தினைகளைக் கிளிகள் கடியாவண்ணம் காக்கின்ற சேடியர்கள் வள்ளியம்மையை நோக்கி தேவீ தினைப்புனத்தில் கிளிகள் மொய்த்து தினையை அழிக்காமலிருக்கத் தாங்களும் தினைப்புனத்துக்குக் கிளியோட்ட வரவேண்டுமெனப் பிரார்த்திக்க ஒப்பிலா வள்ளி நாயகியாரும் கிளிகளை ஓட்டுவதற்கு சம்மதித்து தந்தையாம் நம்பி ராஜனை இணங்கச் செய்து விடைபெற்று சேடியருடன் தினைப்புனம் சென்றனள்.

வள்ளி நாயகியாரும் சேடிகளுடன் தினைப்புனத்தில் கிளியோட்டும் பாடல்கள் பாடி கிளியோட்டும் சமயத்தில் வீணை வாசிக்கும் கந்தருவர்கள் கண்டு, அன்பொடு சந்தோஷித்து இம்மாதின் பாதார விந்தஸ்பரிசத்தினாலே இம்மலையும், இத்தினைப்புனமும் முன்செய்த தீவினைகள் நீங்கி அளவற்ற சிறப்பை அடைந்தது என்று கூறினார்கள்

அகில உலகத்தையும் தன்னுள் உடைய வள்ளி நாயகியைப் புதல்வியாகப் பெற்ற பாக்யத்தினால் நம்பி ராஜனும் அவனது

* பேதைப் பருவம் 7 வயது வரை. பெதும்பைப் பருவம் 12 வயது வரை. அதற்குமேல் மங்கைப் பருவம்.

வேடர் குலமும் மிகவும் உயர்ந்து சிறப்புற்றது. இப்பெரும் பாக்யத்தைப் பெற பன்னெடுங்காலம் அரியமா தவத்தைச் செய்ய அம் மாதவமே வேடர் குலத்தில் பிறந்ததுபோல வள்ளி வந்துதித்த பெருமையை நினைக்கின் இந்த வேடர்கோன் தவத்தை எவரே சொல்ல வல்லார் என அங்குள்ள முனிவர்கள் கூறினர்.

காமவன்றனை அறுத்து மூத்த முனி சிரேஷ்ட்டர்கள் மேகங்கள் தவழும் மலைச்சாரலில் இருந்த ஞானஒளியாகிய ரத்தின தீபமாம் வள்ளியம்மையை நாள்தோறும் சென்று தரிசித்துத் துதித்துக் கொண்டு அம்மலையில் தவத்தோடு பொருந்தியிருக்க வள்ளியம்மையாரும் சிறப்புடன் தினைப்புனத்தில் வீற்றிருந்தருளினர் என வேதவியாசர், சுகருக்கு உபதேசித்ததை, சூதர் நைமிசாரண்யவாசிகளுக்குக் கூறி பின்னும் கூறுவார்.

6-வது அத்யாயம்.

வள்ளியம்மை திரு அவதார வைபவம் முற்றிற்று.

---

## ஏழாவது அத்தியாயம்.

### முருகக் கடவுள் வள்ளியம்மையிடம் சென்றது.

கேளீர், நைமிசாரண்ய வாசிகளே

வேடர் தலைவனும் நம்பி ராஜன் அரசு செய்கின்ற சிற்றூரின்கண் தினைப்பயிர்கள் அடர்ந்து நெருங்கிப் பயிர் செழித்து ஓங்கி வளர்ந்திருக்கும் தினைப் புனத்திலே அமைக்கப்பட்ட பரண்மீது நின்று தனது இனிய பாடல்களால் கிளிகள் தினையை அணுகவொட்டாமல் கிளிகளை விரட்டியடித்து வந்தார்கள் வேடமாதர்கள்.

சர்வலோக நாயகன் ஸ்ரீ முருகக் கடவுள் முன்னர் தாம் வள்ளி நாயகிக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்ற திருவுளங்கொண்டு அம்மலைக்கு வந்து தினைப்புனத்திலிருக்கின்ற வள்ளி

நாயகியாரது முன்னிலையில் நின்று மனக்களிப்புடன் வள்ளிநாயகியாரைப் பார்த்து தேவாமிருதம் போன்றவளே மூங்கில் செறிந்த இம்மலையின் தினைப் புனத்திலுள்ள நீ யாவள் உன்னுடைய ஊர் எது? உன்னைப் பெற்ற தாய் தந்தையர்கள் யாவர் என்பனவற்றை பவழத்துக் கொப்பான உனது திருவாயால் சொல்லுக என வினவ தேவியாரும் நான் இந்த குறிஞ்சி நிலத்தலைவன் மகள். தினைப் புனம் காத்தற்கு சேடிகளுடன் இங்குற்றேன் என பதிலுரைத்தார்.

அது கேட்டு முருகக் கடவுள் வள்ளியம்மையாரைப் பார்த்து பெண்ணே நீ கல்யாணமாகாத கன்னிப் பெண் என்றே நினைக்கிறேன் எனக் கூறவும், வள்ளியம்மையார் ஆம் எனப் பதில் உரைத்தார். அது சமயம் முருகன், பெண்ணே நான் உன்னைக் கல்யாணம் செய்துக் கொள்ள விரும்புகிறேன். உனக்குச் சம்மதமா. நீ என்னைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புகின்றனையா என வினவ, வள்ளி நாயகியும் அதிசயத்துடன் குமாரசுவாமியின் புயங்களில் தனது இரு கண்களையும் செலுத்தித் தலை குனிந்து உடல் வியர்த்து நாணத்துடன் கூடிய புன்முறுவலுடன் மெள்ள வாய் திறந்து, ஒப்பற்ற தனி நாயகரே.

செய்யுள் 20.

எனவா றுமுகே சனியம் புதலுங்
கனிவாய் மொழியன் பொடுகா தலியாத்
தனிநாயகரே தருமந் தவறு
முனியா தருள்வீ ரெனவே மொழிவாள்.

செய்யுள் 21.

குரவோர் கள்ளித் திடுகொள்கையினல்
வரைவா ருடன்வாழ் வதுவே மரபாங்
கரவா லொருகா ளையர்கை யுறலாற்
றரைமீ துயர்கன் னிகையுந் தவறும்.

தந்தை தாய் தரக் கல்யாணம்செய்து கொள்வதேமுறையான தர்மம். என்னைப்பெற்ற தாய்தந்தையர் இனிய அருளைப்பெற்றவர்

கள். ஆதலினால் தேவரீர் அவர்களிடம் சென்றுகேட்டால் அவர்கள் தங்களைக் கண்டவுடனேயே பெருமித மடைந்து என்னை அக்னி சாக்ஷியாக முரசொலிமுழங்க ஜலதாரையுடன் தங்களுக்குக் கல்யாணம் செய்து தருவார்கள். இம்மாதிரியே என்னைத் திருமணம் புரிவீராயின் என்னைப் பெற்றோருடைய பொலிவினை உற்றகுல மெல்லாம் சுத்தமாம் என்று வேண்ட, குமரக் கடவுள் கேட்டு மனம் பூரித்து சந்தோஷத்துடன் கண்ணி, கயிறு, தும்பு, கவண், வலை முதலிய அனைத்தையும், அழகான வில் தழும்புகளையும் காட்டு கின்ற புயங்களைக் கொண்ட நம்பிராஜன் வலியவேடர்களுக் கெல்லாம் செய்தொழிலை பயிற்று விக்கும்பொழுது மனவாக்குக்கு எட்டாதவேத நாயகனும் வேற்படைகுமரன் நம்பிராஜன் முன் தோன்றினன் என வேதவியாசர் சுகருக்கு உபதேசித்ததை சூதர் நைமி சாரண்யவசிகளுக்குச் கூறி பின்னும் கூறுவார்.

7-வது அத்யாயம்

முருகன் வள்ளி நாயகியிடம் சென்றது முற்றிற்று.

---

## எட்டாவது அத்தியாயம்

### ஸ்ரீ வள்ளி நாயகி திருக்கல்யாண அத்யாயம்.

கேளீர் நைமி சாரண்ய வாசிகளே

பிறவியாகிய நோயை நீக்கும் தன்மையுடைய வியாச முனி வரை பல வேதங்களையும், நூல்களையும் ஆராய்ந்து முற்றும் தெரிந்த தவக்கடல் போன்ற சுகமுனிவன் பணிந்து சுவாமீ, கிருபா நோக்கத்துடன் வீற்றிருந்து அகத்திய முனிவருக்குச் சுவை பொருந்திய தமிழை விரித்துரைத்து ஒளி பொருந்திய வேற்படையை கரத்திலே தரித்து விளங்குகின்ற ஸ்ரீ முருகக் கடவுளது சரித்திரங்கள் எல்லாம் செவிக்கு இன்னமுதமாக விளங்குகிறது. எம்பெருமானே உங்களது முகத்தாமரையிலிருந்து

வழிகின்ற சரித்திரத்தின் பேரின்பப் பெருக்கு என் இரு செவிகள் வழியாக மனத்தில் பொருந்தும் தன்மையினுல் பிறப்பு, இறப்புக் களின் மூலத்தைக் களைந்து மாலயன் தேடியும் காணுத ஒப்பற்ற சிவபெருமானது உபய பாதாரவிந்த வீட்டின் முன் சேர்ப்பிக் கின்றது. சுவாமீ, குமரக் கடவுள் வேடராஜன் முன்னே சென்ற பின்னர் வேடராஜன் அறிதற்கரிய குமரக் கடவுளுக்கு முன்னே நவின்றதையும், புன்னகை பொருந்திய முகத்தையும், பவழம் போன்ற இதழையும், வீணையின் நாதம் போன்ற சொல்லையும். மற்றும் பல அழகுகளையுமுடைய வள்ளி நாயகியாரைத் திருமணம் செய்து கொடுத்ததையும் வள்ளி நாயகியாரது வளையணிந்த தளிர்க் கைகளினுல் முருகக் கடவுளுக்கு மாலையணிவித்ததையும் தாங்கள் உபதேசிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தான். பிரார்த் தித்த சுகமுனிவனைப் பார்த்து, சுகமுனியே, இவ்வுலகத்தாரும், தேவர்களும் வழிபட்டு வணங்கும் வேற்படை குமரனது திவ்விய சரித்திரத்தை அன்புடன் கேழ்ப்பவர்கள் இம்மை, மறுமை பயன் களெல்லாம் பெறுவர். ஆதலால் நீ பெறுதற்கரிய பேற்றினை எல்லாம் பெருவாய் கேட்பாயாக என வியாசர் கூறுகின்றூர்.

மறையின் முதலிலும், நடுவிலும், முடிவிலும் உலாவு கின்றதும், வாசனையை யுடையதும் சதகோடி சூரியர்களின் ஒளியை ஒருங்கே வீசுகின்றதுமான திருவடித்தாமரைகளையுடைய ஸ்ரீ முருகக் கடவுள் வேட அரசனை நம்பி ராஜனிடத்தில் தன் னுடைய ஆறுமுகங்களையும் மறைத்து பன்னிரு தோள்களையும் மறைத்து மனித வடிவத்துடன் சென்று நம்பிராஜனைப் பார்த்து வேட அரசனே, உன் மகளாம் வள்ளியம்மையை எனக்குக் கல்யாணம் செய்துகொடு எனக் கேட்கவும் இது கேட்ட வேடர் கோமான் கை கொட்டிச் சிரித்துக் கோபித்து

செய்யுள் 6.

உன்னிடத் துதித்த மகள் வயினூர்வ முற்றன மளிக்குதி யென்ன
வன்னவிற் கரத்துப் புளினர்கோ னழன்று மகிழ்சிறந் தெம்மலை
காக்கும் கொள்ளிலைச் சுடர்வேன் முருகனுக் கிவளைக் கொடுப்



பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி, நாரதாதி ரிஷிகள், திரிசுதந்திரர்கள்,
இவர்கள் கூடியிருக்க சுப்பிரமண்யர் வள்ளியை விவாகம் செய்தல்

பதை யன்றிமுத்தேவ ரென்னிடத் திரந்து கேட்கினும் கொடுப்ப தில்லை நீ போவென விசைத்தான்.

ஏ மானிடனே, எம் மகளை இக்குறிஞ்சி நிலக் கடவுளாகிய குமாரக் கடவுளுக்கே கொடுப்பதல்லாமல் இவ்வுலகில் வேறு யார்க்கும் கொடேன். முத்தேவரும் வந்து கெஞ்சிக் கேட்டாலும் கொடேன். நீ இங்கு நில்லாதே போ போ என உரைத்தான்

அவ் வார்த்தைகளைக் கேட்டு முருகன் தன் பன்னிரு செவி களிலும் தேனையும் அமுதத்தையும் வார்ப்பது போல அகமகிழ்ந்து சந்தோஷத்தை யடைந்து வள்ளியம்மையின் மனம் எவ்வாறிருக் கிறது என அறிவதற்கு எண்ணங் கொண்டு அதிவிரைவில் தினைப் புனம் வந்து இந்த்ர ஜாலம் செய்பவர் போல ஒரு வேங்கை மரமாகி நின்றருளினன். வள்ளி நாயகியும் அவரது சேடியாரும் இப்புதிய வேங்கை மரத்தைக் கண்டு அதிசயித்து அம்மரமானது மிகவும் சௌக்யமான நிழலையும் உற்சாகம் உண்டாகும் தன்மையையும் உடையதாக இருத்தலைக் கண்டு அகமகிழ்ந்து இது முருகன் அருளால் வந்தது என்று எண்ணி அத்தரு நிழலில் படுத்து இன்புற்றிருந்தனர். மின்னல் கொடி போன்ற வள்ளியம்மையை தவப்பேற்றால் மகளாகக் கொண்ட நம்பி ராஜன் தினைப் புனத்தி லிருக்கும் வள்ளி நாயகியைப் பார்க்கும் ஆவலுடன் தன் பரிவாரங் கள் சகிதம், வில் முதலிய ஆயுதம் தரித்துப் புறப்பட்டு தினைப் புனம் வந்து சேர்ந்து, அங்கு நேற்றுவரையில்லாத புதிய வேங்கை மரம் திடீரென ஆகாயத்தை அளாவி நிறைந்த நிழல் பொருந்த நிற்பதைக் கண்டான். கண்டதும் அதிசயித்து வள்ளி நாயகியை அழைத்து குழந்தாய் இம்மரம் இதற்கு முன் இங்கு இருந்த தில்லையே திடீரென எப்படி முளைத்து ஆகாயமளாவி நிற்கிறது என வினவ அதுகேட்டு வள்ளி நாயகி இது விபரம் நான் அறியேன் எனப் புகன்றாள். வேட ராஜன் இது மாயையின் விளையாட்டு என நினைந்து அங்கு நின்ற தன் பரிவாரங்களை அழைத்து பரிவாரங்களே, நீங்கள் இம்மரத்தை உடனே சேதியுங்கள் எனக் கூறலும் அதுவரை அங்கிருந்த வேங்கை மரமானது மாயமாக மறைந்தது. வேடர்குலத் தலைவனும் இவ்வதிசயத்தைப் பார்த்து

இனி மகளை இங்கு விட்டு வைப்பது தகாதென நினைத்து வள்ளி நாயகியாரையும் சேடியருடன் கூட்டிக் கொண்டு தன்னிருப்பிடமான சிற்றூர் போய்ச் சேர்ந்தான்.

சிற்றூர் சேர்ந்த சில நாள் கழித்து வள்ளிநாயகி தன் சேடியருடன் திரும்பவும் தினைப்புனம் வந்து தினைப்புனத்தைக் கிளிகள் வந்து அழிக்கா வண்ணம் காத்துக் கொண்டிருக்கையில் சர்வ வல்லமையுள்ள முருகக் கடவுள் வள்ளியம்மைக்கு அனுக்கிரஹகம் செய்ய நினைந்து அவ்வள்ளி நாயகியார் யானையின் வடிவத்துக்கு மிகவும் பயந்தவளெனத் தெரிந்து தன் சகோதரனை ஸ்ரீ விநாயகக் கடவுளை மதயானையாக வந்து வள்ளி நாயகியைப் பயமுறுத்தும்படி வேண்ட, ஸ்ரீ விநாயகக் கடவுளும் முருகனது வேண்டுகோளின்படி பெரிய மதயானை வடிவமெடுத்து தினைப் புனம் வந்து அகில உலகமும் நடுங்கும்படி சத்தமிட்டு வள்ளி நாயகியாரது முன்னால் வந்தது. வள்ளி நாயகியாரும் அந்த யானையைக் கண்டு பயந்து நடு நடுங்கி ஓட ஆரம்பித்தாள். அதுகண்டு யானையும் வள்ளியம்மையாரைத் துரத்த ஆரம்பித்தது. வள்ளியம்மையும் பயந்து ஓடி வரும்பொழுது எதிரே முருகக் கடவுள் தோன்றி நின்றருளினர். அதுகண்டு வள்ளியம்மையாள் முருகனிடம் சென்று யானையைக் கண்ட பயத்தினால் முருகனைக் கட்டி அணைத்துக் கொள்ளவும், முருகன் புளகாங்கித மடைந்து தன் அண்ணனும் விநாயகனை மறைந்தருளும்படி வேண்ட, விநாயகரும் அத்தினைப் புனமதில் அக்குற மகளுடன் அச்சிறு முருகனைச் சேர்த்து வைத்து மணமக்களாகக் கண்குளிரப் பார்த்து மகிழ்ந்து ஆசீர்வதித்து வாழ்த்தி மறைந்தருளினர். பின்னர் வள்ளி நாயகியாரும் முருகக் கடவுளும் உடலும் உயிருமாகி ஒன்றாகக் கலந்து கொண்டனர். தேவர்களும், முனிவர்களும் இது பரமேஸ்வரன் உலகம் நடைபெற்று இன்புற்று உய்யச் செய்யும் திருவிளையாட்டு என்று கொண்டாடிப் பாராட்டிப் பேசினர்கள். தேவதுந்துபி முழங்க மலர் மழை சொரிந்தார்கள். இது இப்படியிருக்க வள்ளியுடன் இருந்த சேடியர்கள் சிற்றூருக்கு ஓடிப்போய் நம்பி ராஜன் முன் சென்று வணங்கி வள்ளியிடம் யானை வந்து துரத்தியதையும் வள்ளி பயந்தோடும் சமயம் முருகக் கடவுள் எதிர்தோன்றி வந்ததையும்

வள்ளி நாயகி முருகனைக் கட்டிக் கலந்த வைபவத்தையும் கூறவே
நம்பி ராஜனும் தன்னிருக்கைவிட்டு எழுந்து தன் பரிவாரங்களுடன்
நொடிப் பொழுதில் தினைப்புனம் வந்து மகளையும், குமரனையும்
இருவிழிகளால் கண்டான். தகப்பன் வரவைத் தெரிந்த வள்ளி
நாயகியார் தகப்பனைக் கண்டதும் நாணமடைந்து முருகனைப்
பிரிந்து தந்தை பால் வந்து வணங்கவும், நம்பியும் அகமகிழ்ந்து
புளகாங்கிதமாகி தன் மகளைக் கொண்டவன் ஒப்பற்ற வேற்படைக்
குமரன் எனத்தெரிந்து, எட்டு அங்கங்களும் பூமியிலழுந்த நமஸ்க்
கரித்து கை கட்டி வாய்புதைத்து நிற்கும் சமயம், முருகனும்
தனது ஆறுமுகங்களையும், பன்னிரு தோள்களையும், வேற்படை
யுடன் ஏனைப்படைகளையும் மயூர வாகனத்தையும் காட்டி காக்ஷி
கொடுத்தருளினன்.

அந்தக் காக்ஷியைக் கண்ட நம்பி ராஜனும் அடியற்ற மரம்
போல் வீழ்ந்து பன்முறை வணங்கித் துதித்து பல, பல பாடல்
களால் தோத்திரம் செய்து எமையாண்ட சர்வலோக நாயகனே
தாங்கள் தேவர்கள் கூட்டத்துடன் எங்கள் சிற்றூர் வந்து எங்கள்
குல முறைப்படி எம் சுற்றத்தார் சூழ்ந்திருந்து நாங்கள் கொடுக்க,
தேவரீர் ஏற்றருளிக் கல்யாணம் செய்தருள வேண்டும் எனப்
பிரார்த்திக்க அடியவர் நினைத்தவை முடித்தருள் கிருபைக் கடலா
கிய முருகவேளும் நம்பி ராஜனை நோக்கி நம்பியே நீ பிரார்த்
தித்தபடியே செய்கிறோம் எனப் பணித்தருளினன்.

குறவர்கோனும் அளவிலாத சந்தோஷத்தை யடைந்து தன்
அரண்மனை சேர்ந்து அரண்மனை வாயிலிற் ஆகாயம் போல் பந்தல்
யமைத்து அதில் சூரியர், சந்திரர் போல் கண்ணாடிகளை யமைத்து
நக்ஷத்திரங்கள் போல் நவரத்தினங்களை யழுத்தி அமைந்த மண
வரையை உண்டாக்கி வாழை, கமுகு, மா இன்னும் பல விருக்ஷங்
களினல் தோரணங்கள் கட்டி யாரும் பார்த்திராத அதிசய அலங்
காரங்கள் செய்து பார்த்து அகமகிழ்ந்து மணநாயகனை ஸ்ரீ முரு
கக்கடவுளின் வரவை எதிர்நோக்கி யிருக்கும் சமயம் ஸ்ரீ முருகக்
கடவுள் விஷ்ணு, பிரம்மா, இந்திரன், குபேரன் முதலிய தேவர்

ளும், அவர்களின் பத்தினிமார்களும், தவமுனி சிரேஷ்டர் களும், யோகிகளும், திரிசுதந்திரர்களும் புடை சூழ்ந்து வர, குறித்தநேரத்தில் நம்பி ராஜனால் அமைக்கபெற்ற மணவரை வந்து சேர்ந்து பிரகாசிக்கக்கூடிய மணவரையில் இனிது அமர்ந்தான்.

லெக்ஷிமி, பார்வதி, சரஸ்வதி முதலிய தேவிமார்களும் வேடுவ மாதர்களும் வள்ளியம்மையாரை எவரும் கண்டு பிரமிக்கும் படி திவ்யாலங்காரம் செய்து மணவரையில் முருகனுக்குப் பக்கத்தில் உட்கார வைத்தார்கள். நங்கையும், நம்பிராஜனும் பொன் தட்டில் முருகனுடைய திருவடிகளை தமது கரங்களால் எடுத்து வைத்து பால், சந்தணம் முதலியவற்றால் பாதபூஜை செய்து ஜவ்வாது, குங்குமம் அணிவித்து பொன்தட்டிலிருந்த திருவடியை நமஸ்க்கரித்து அந்த பொன் தட்டை எடுத்து அதிலிருக்கும் முருகன் திருவடி தீர்த்தத்தை உண்டு களித்து பிரம்மாவினால் உண்டாக்கப்பட்ட அக்னி சாக்ஷியாக தேவர்களும், திரிசுதந்திர முனிவரார்களும் யோகியர்களும் மந்திரங்களையோத நங்கையும், நம்பியும் வள்ளி நாயகியை முருகக் கடவுளுக்கு தாரை நீர் வார்த்துக் கொடுக்கவும், முருகக் கடவுள் வள்ளி நாயகியாரை வேத முறைப்படி திருமணம் செய்து அருளினர். சகல தேவர்களும் யாவர்களும் கண்டு களித்துத் தரிசித்தனர். அது சமயம் முருகன் வள்ளி நாயகியினது திருப்பாதம் பற்றி அம்மி மிதித்துப் பின்னர், அருந்ததி காட்டி, நலுங்கு, பொன்னூஞ்சல்யெனும் விளையாடலைச் செய்து மஞ்சள் நீராடி மகிழ்ந்திருந்தனர்.

திருக்கல்யாணத்தைக் கண்டு தரிசித்த பிரம்ம விஷ்ணு இந்திராதி தேவர்களும் சந்தோஷத்துடன் தத்தம் பதிகளுக்கு ஏகினர். யோகியர்களும் தம் தம் இடங்களுக்குச் சென்றனர். வள்ளி நாயகியை ஸ்ரீ முருகக் கடவுளுக்குக் கல்யாணம் செய்து கொடுத்த புண்ய விசேஷத்தினால் நம்பி ராஜனும் மற்றும் வேடர்களும், வேடுவப் பெண்களும் தங்களுக்கு முன்னாள் எம முனிவரால் ஏற்பட்ட சாபம் நீங்கி, கந்தருவர் நாட்டியப் பெண்களாகி முருகனைப் பணிந்து, தம் தம் பதிகள் சேர்ந்தனர். முருகனும் வள்ளி நாயகியாருடன் வாயுவைச் சாரதியாக கொண்ட மனோவேக

மெனும் ரதத்தில் ஆரோகணித்து திரிசுதந்திரர்கள் சூழ செயந்தீபுரம் நோக்கி சென்றார்.

இது இவ்வாறாக ஸ்ரீ முருகன் வள்ளிநாயகி கல்யாணத்துக்கு சென்றிருந்த சமயம் ஞானசக்தியானதேவநாயகி சிவபெருமானைக் குறித்துக் கடும் தவம் செய்ய அத்தவத்துக்குச் சிவபெருமான் மகிழ்ந்து லிங்கவடிவமாகத் தோன்றி காக்ஷி கொடுத்து தேவநாயகியே நீ தவம் செய்த காரணம் என்ன உனக்கு வேண்டும் வரத்தைக் கேட்பாயாக என ஆஞ்ஞை செய்ய, தேவநாயகி சிவபெருமானைப் பார்த்து வணங்கி சுவாமீ என் நாதன் முருகக் கடவுள் வள்ளியம்மையிடம் வைத்திருக்கும் காதல் போல் என்னிடத்தும் இருக்கவேண்டுமென பிரார்த்திக்க சிவ பெருமானும் மனமகிழ்ந்து அவ்விதமாகுக என வரம் கொடுத்து அவ்விடத்தே ஜகந்நாதர் எனப் பெயர் கொண்டு இருந்தருளினர்.

முருகனும் வள்ளி நாயகியுடன் வருவது தெரிந்து தேவநாயகி எதிர் சென்று வணங்க வள்ளி நாயகி வலக்கரம் பிடித்தும் முருகன் இடக்கரம் பிடித்தும் தேவநாயகியை தேரில் ஏற்றி செயந்திபுரம் வந்து திருக்கோயில் முன் தேர்விட்டு இறங்கி கோயிலின் உள் சென்று அங்கு சிவபெருமான் எழுந்தருளி யிருக்கக் கண்டு அதுவிபரம் தேவநாயகி சொல்லத் தெரிந்து பரமசந்தோஷமடைந்து சிவபெருமானைப் பூஜிக்கவும் சிவபெருமான் தனது குமாரனும் முருகக் கடவுள் இச்சாசக்தி கிரியாசக்தி ஞானசக்தி யெனப்படும் வள்ளி நாயகி வேற்படை தேவ நாயகி சகிதமாக விளங்கும் காக்ஷியைப் பார்த்து பேரானந்த மடைந்து ஆசீர்வதித்தார். முருகனும் தமது சிங்காதனத்தமர திரிசுதந்திரர்களும் வேதவிதிப்படி ஒன்பது கால பூஜைகள் செய்து தோத்திரம் செய்ய முருகனும் அகமகிழ்ந்து சகல உலகத்தவர்களுக்கும் அனுக்ரஹம் செய்து திரிசுதந்திரர்கள் தேவர்கள்பரவ விளங்குகிறார்கள் என வியாசர் சுகருக்கு உபதேசித்ததை சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்கு கூறியருளினர்.

எட்டாவது அத்தியாயம் வள்ளி நாயகி திருக்கல்யாணம் முற்றிற்று.

# ஒன்பதாவது அத்தியாயம்

## பிரம்மாவுக்கு வரம் கொடுத்தது.

---

கேளீர். நைமி சாரண்ய வாசிகளே.

வேதங்களை நான்கெனவகுத்த வியாச முனிவரின் இரு பாதங்களையும் சுகமுனிவன் பணிந்து நின்று சுவாமீ படைத்தற்கு உளாகிய பிரம்மா அன்புடன் வழிப்பட சிவ குமரன் அப் பிரம்மனுக்கு அருளிய வைபவத்தைச் சொல்ல வேண்டுமெனப் பிரார்த்திக்க வியாச முனிவரும் அக மகிழ்ந்து கூறுகிறார்.

இப் பிறப்பிலும் வரும் பிறப்பிலும் இன்பங்களை எனக்கு அனுக்ரஹிக்கும் குமார சுவாமியாகிய பரமகுருவானர்,

செய்யுள் 2.

குருபரன் விமானமுயர் கோயிலி னிருந்தே
வரு திரிசுதந்திர மெய்ம் மாமறையி னோர்கா
ளொருவசன முண்டது வழாதிவ னுரைப்பாஞ்
சுந்தியொடு நம்மடி துதித்தரு கிருப்பீர்.

செய்யுள் 3.

என்றுமுல கேழுதொழு மெம்பதி யிருந்தே
நன்றியுட னம்மடிதி னுண்மல ரெடுத்தே
மன்றவணி வீர்கதி வழங்குவது தென்கா
ளின்றுலவு சிந்துபுர மேயென நினைப்பீர்,

செய்யுள் 4.

நம்மையு நலம்பெருகு மாதரையு நாடுஞ்
செம்மை திரு கோயிலுள சீரியன யாவுஞ்
சும்மைகொடு காப்பது தொழிற்குரிய தென்று
னிம்மையுட னம்மையு மெனக்குதவு செவ்வேள்.

செய்யுள் 5.

ஆயிரமிரட்டியுள வந்தணர்க ணீவிர்
மேயவதி னுமொருவ னென்றுரை விளம்பித்
தாயினுமிரங்கியெளி யேன்றனை யளிக்குஞ்
சேயுள மகிழ்ந்து திரு வாய்மலர்வ தானன்.

செய்யுள் 6.

வந்துதெரி சித்துநமை வாழ்த்துநர் பெருஞ்சீர்
சந்ததமு நுங்களை யடைந்தவர்கள் சார்வா
ரிந்தமட மாதரிரு வோருட னியாமிச்
சிந்துபுரம் வந்துதெரி சித்தினி திருந்தாம்.

வானளாவி உயர்ந்து விளங்குகின்ற திருக் கோயிலில் வீற்றிருந்து திரிசுதந்தரர்களை நோக்கி மெய்ம்மை பொருந்திய திரிசுதந்தரராகிய பெரிய வேதியர்களே உங்களுக்கு ஒன்று சொல்லக் கூடியது உள்ளது அதனைத்தவராது இங்குசொல்வோம் கேட்பீராக.

தென்றல் நின்று வீசுகின்ற இச் செயந்தீபுரமே எப்பவும் எண்ணும் பயனைஉதவுவது என்று உறுதியுடன் நம்புங்கள். உலகமேழும் வணங்கும் நமது இத்தவத்தில் நீங்கள் எப்போதும் வசித்துப் புது மலர்களை யெடுத்து நற் செய்கையுடன் எமது திருவடியில் அர்ச்சித்து வேத முறைப்படி பூசித்துக்கொண்டும் துதித்துக்கொண்டும் நம் பக்கதிலேயே இருந்து கொண்டிருங்கள்.

நம்மையும் எல்லா நலன்களையும் தரும் மாதர்களாம் வல்லீ தேவயானையையும் எம்முடைய நிலம் ஆபரணதி யாவற்றையும் செம்மைப் பயனைத் தருகின்ற நம் கோயிலிலுள்ள சிறந்தனயாவற்றையும் பாரமாகக் கொண்டு காத்துவருவது உங்கள் கடமை. இது தான் உங்களுக்கு உற்ற தொழில். நீங்கள் இரண்டாயிரத்தாரெனும் அந்தணர்கள். இந்த இரண்டாயிர முள்ள உங்களில் நாமும் ஒருவர் என்பதை விளக்கிக் கூறிப் பின்னும் கூறுகிறார்.

திரிசுதந்திரர்களே.

உங்களை என்றும் அடைந்தவர்கள் நம்மை வந்து தரிசித்து வழிபடும் புண்ணியப் பலன்களைப் பெறுகிறார்கள். நாம் வள்ளி தேவநாயகி சமேதராக எழுந்தருளி இன்பத்தை அனுபவித்திருக்கிறோம்.

அறிவிலாதவர்களா யிருந்தாலும் நம்மை மனத்துள் நினையாமல் குற்ற முள்ள பாதகங்களைச் செய்தவர்களா யிருந்தாலும் அன்புடன் இத் திருச்செயந்திபுரம் வந்து சேருபவர்களுக்கு அவர் விரும்பும் மேலான புண்ணியங்களை ஆதரத்தோடு கொடுத்து அருளுவோம் என ஆஞ்ஞை செய்த ஸ்ரீ குமரக் கடவுளது அன்றலர்ந்த செந்தாமரைபோன்ற இருசரணாரவிந்தங்களைத் திரிசுதந்திரர்கள் வணங்கி எம் பெருமானே தங்களின் ஆஞ்ஞைப்படியே தங்களது பாதாரவிந்தங்களையும் நிலையான வழிப்பாட்டையும் திருமேனி காத்தலையும் எமது பரம்பரைத் தொழிலாகக் கொண்டு வாழ்வோம். அண்ணலே எங்கள் மனதிலிருக்கின்ற ஒன்றை விண்ணப்பம் செய்ய ஆஞ்ஞை செய்யவேண்டுமெனப் பிரார்த்திக்கவும், முருகக்கடவுள் திரி சுதந்திரர்களைப் பார்த்து சந்தோஷித்து புன்முறுவல் செய்து நீங்கள் எண்ணும் எண்ணத்தைச் சொல்லுங்கள் என அருளவும் திரிசுதந்திரர்களும் ஆறுமுகக்கடவுளுடைய திருவடித் தாமரைகளை வணங்கிச் சொல்லுகிறார்கள்.

செய்யுள் 9.

நித்தலு மிறைஞ்சியிவ ணேயமொடு மூழ்கச்
சித்திவிழை மானுடர்க டேவர்பிறா மூழ்கப்
புத்திர புவுத்திரர்கள் புண்ணிய மருந்த
முத்திதரு மத்தகய மூலமும தாகி.

செய்யுள் 10.

நல்குரவு வெம்பிணி யொழித்தினிய நாவின்
மெல்லமுத மொத்தசுவை மேன்மையுள தாகிக்
கல்விபெரு ஞானமொடு காட்டியெமை யாளச்
செல்வமுள் தீர்த்தம்வர நீயருள்செய் வாயால்.

சுவாமீ நாங்கள் இங்கே நித்தியமும் அன்பொடு வணங்கி ஸ்நானம் செய்யவும் தேவர்களும் மற்றும் யாவர்களும் ஸ்நானம் செய்யவும் வறுமையையும் நோய்பிணிகளையும் நீக்கி புத்ர பௌத்ராதி சந்ததிகளையும் அறம் பொருள் இன்பம் எனும் வீடுகளையும் அருளி நாவுக்கு அமிர்தம் போன்ற மதுர ரசத்தின் மேன்மையான கல்வியைப் பேரறிவுடன் பெற்றுய்யும்படி அதிர்ஷ்ட்டமான சிரேஷ்ட்ட தீர்த்தத்தைத் தந்தருளவேண்டும். ஆதிமத்யாந்தமிலா அண்ணலே! இங்குள்ள சமுத்திர தீர்த்தங்களில் ஸ்நானம் செய்வதற்குரிய தினங்களைப் பெரியோர் வகுத்திருக்கின்றனர் ஆதலால் சமுத்திரத்தில் என்றும் ஸ்நானம் செய்யமுடியவில்லை. அடியவர்கள் எப்பொழுதும் ஸ்நானம் செய்து புண்ணியப் பேறெய்தும் பொருட்டு ஆகாச கங்கைபோல் ஒரு தீர்த்தத்தை தந்தருள வேண்டும் எனப் பிரார்த்தித்து நின்றனர்.

பார்வதி தேவி தந்தருளிய குமரக் கடவுள் வேதங்களைப்பயிலுகின்ற திரிசுதந்திரர்களின் உறுதி மொழிகளைக்கேட்டு மகிழ்ந்து இலை வடிவுகொண்ட வெற்றி வேற்படையை எடுத்துக் கோயிலுக்குத் தென்பால் இருநூறுவில் இடையளவு தூறத்தில் செலுத்தினர்.

செலுத்திய வேற்படை பாதாளத்தை நோக்கி விரைந்து சென்று ஆதிசேஷனின் முடிமீதும் பட்டு அதற்கப்பாலும் சென்று புனித கங்கையை அழைத்துக்கொண்டு சென்றவழியே கொண்டு வந்து அங்கு குறைவில்லாமல் இருக்கப்பணித்துக் கடப்பமாலையை அணிந்த குமரவேள் திருக்கரம் வந்தமர்ந்து.

சமுத்திரத்தின் சமீபத்திலே பரிசுத்தமாகிய கங்காஜலம் வேலாயுதத்துடன் வந்த அதிசயத்தைக் கண்ட காரணமின்றி சுயம்புவாக உயர்ந்த வேலாயுதக் கடவுள் முதன் முதலாக தானே அந்தத் தீர்த்ததில் வேத கோஷங்கள் முழங்க ஸ்நானம் செய்து அருளினர்.

கந்தவேள் முதல் முதலில் ஸ்நானம் செய்தருளினமையாலும் ளி பொருந்திய வேற்படையினால் கொண்டுவரப்பட்ட தன்மை

பொருந்தியதாயிருப்பதாலும் அந்தக் கங்கா தீர்த்தத்துக்கு *கந்த புஷ்கரணி என்றும் வேல்தீர்த்தம் என்றும் பெயர் பெற்று தன்னி டத்தில் ஸ்நானம் செய்வாரை மகேந்திரைஸ்வரிய சுகத்தில் சேர்க்கும் தன்மையைப் பெற்று மேன்மையுடன் விளங்குகிறது.

செய்யுள் 16.

வருதிரி சுதந்திர மறைவல் லோர்களு
மருமறை முறையினு லதனின் மூழ்கினூர்
திருபுவ னங்களுங் தினமு மூழ்கிடப்
பெரிதிது நன்றென மகிழ்ந்து பேசினுர்கள்.

செய்யுள் 17.

தாவறு கந்தபுட் கரணித் தண்புனன்
மூவிரு முகத்தினு னருளின் முன்பதச்
சேவையின் மிக்குயர் திரிசுதந்திரர்க்
கேவரும் புகழதி காசங் காட்டுமால்

முருகக் கடவுள் ஸ்நானம் செய்ததும் அடுத்ததாக நான் மறை வல்லராம் திரிசுதந்திரர் அனைவரும் வேதமுழக்கத்துடன் கிரமப் படி அதனில் ஸ்நானம் செய்து சகல லோகத்தினரும் எப்பொழு தும் ஸ்நானம் செய்து உய்ய இத்தீர்த்தம் மிகவும் நல்லது என்று மகிழ்ந்து கூறினர்.

இந்த கந்த புஷ்கரணி தீர்த்தமானது முருகக் கடவுளின் பாத தாமரைகளை பூசிக்கின்ற திரிசுதந்திரர்களின் பொருட்டே ஏற்பட் டது என இதிகாசம் முழங்கும்.

சுகமுனியே.

அலைகளை வீசுகின்ற சமுதிரத்திலே சந்நிதி முன்பாகஉள்ள முகாரம்பமெனும் வதனாரம்ப தீர்த்தத்திலே வேதமுறைப்படி ஸ்நானம் செய்து பெரும்பலனைப் பெற்றவர்களது மேம்பாட்டைக் கேட்பாயாக.

---

*கந்தபுஷ்கரணி-நாழிக்கிணறு.

முகை முதிர்ந்து விரிந்த தாமரை மலரை ஆசனமாகக் கொண்ட பிரமனது பழய கற்பத்திலே திருப்பாக் கடலில் ஆதி சேஷன் எனும் பாம்பணையில் பள்ளிகொண்ட நாராயணன் பாம்ப ணையில் துயிலுவதைநீத்து பெரிய வில்லுடன் ஸ்ரீராமாவதாரத்தை அடைந்து சினத்துடன் இலங்கையில் வீற்றிருந்த இராவணனது கொட்டத்தை அடக்கக் கருதி அழிவிலாத நமது சந்நிதியிலே ஆதி சேது என ஓர் அணையைக்கட்டி அதன்மேல் இலங்கை சென்று சீதையைக்காத்து வாகை சூடினர். இவ்வாருக நாராயணன் மூன்ற வதாரம் எடுத்து வந்து சேதுவைக் கட்டினமையால் இத் தீர்த்தம் புனிதமும் சிறப்பும் உடையது. இதிலும் நீங்கள் மூழ்கலாம் என்று முருகக் கடவுள் திரிசுதந்திரர்களுக்கு கூறியருளினர்.

இன்னும் நாம் வசிக்கும் கந்தமாதன வெற்பின் சரித்திரமும் கூறுவோம் என்று பின்னும் திரிசுதந்திரர்களுக்கு கூறுகிருர்.

காளமேகங்கள் தங்கி உறங்குகின்ற பெரிய கந்தமாதன மலே யானது மேருமலேயோடு கடும் போர் செய்து உடலோடு மனமும் இளேத்து தான் பொன் மயமான மலேயாக விளங்க விரும்பி நம்மை குறித்துக் கடும் தவம் செய்யவே நாம் அதன்முன் தோன்றி கந்தமாதனமே! உனது கடும்தவத்தை மெச்சினேம் நீ புண்ணியங் கள் நிறைந்த திருச்செந்தூர் எனப்படும் செயந்திபுரத்தில் மலேயாக இருந்து நம்மை துதி செய். அப்பொழுது நடக்கும் பிரமகற்பம் கடந்தபின் வரும் பிரம கற்பத்தில் நீ பொன் மேருவாக விளங்கு வாய் என அன்புடன் கூறியருளினேம். ஆகையால் நமது சந்நதி சேர்ந்து திரைகள் மோதுகின்ற சமுத்திரத்தில் தினமும் ஸ்நானம் செய்து நமது திருவடிகளேப் பணிந்து நம்மையும் எப்பொழுதும் தாங்கி வருகின்றது.

கந்தமாதனமும் இருக்கு வேதம் கூறி மூழ்கி எம்மைத் துதித் தலால் அகில உலகத்தார்களும் தினம்தோறும் இச் சமுத்திரத்தில் ஸ்நானம் செய்யலாம் ஆகையால் இதற்கு கந்தமாதன தீர்த்தம் எனவும் பெயர் பெற்று இதில் ஸ்நானம் செய்பவர்களுக்கு பெறு தற்கரிய பெரும் பாக்கியங்களே அளிக்கிறது.

மேலும் ஒரு சரித்திரம் உள்ளது அதனையும் சொல்லுவோம் சதுர்வேத மறிந்த திரிசுதந்திரர்களே கேளுங்கள்.

முன்னொருக்கால் அன்ன வாகனத்தையுடைய பிரமன் அகந்தைமேலிட எங்கும் நிறைந்த சிவபெருமானை நிந்தனை செய்து கொண்டிருந்தான். அதனை அறிந்த சிவக்கடவுள் பிரமன் சிருட்டி கர்த்தாவாக இருப்பதினால் அவனுக்கு அகந்தை இருத்தல் கூடாது என்று நினைந்து அவனது அகந்தையை நீக்கக்கருதி வைரவக் கடவுளை அழைத்து அவ் வயிரவக் கடவுளை நோக்கி வயிரவனே நீ சென்று பிரமனது தலைகளாம் ஐந்தில் ஒரு தலையைக் கிள்ளிவா என்று ஆஞ்ஞை செய்யவும் அது கேட்ட வயிரவக் கடவுளும் சிவ பெருமானை வணங்கி சுவாமீ தங்களது ஆஞ்ஞைப்படியே செய்கிறேன் எனச்சொல்லி பிரமனை அடைந்து கோபித்து அவனது தலைகள் ஐந்துள் ஒரு தலையைத்தனது கூர்மையான நகத்தால் கிள்ளி எறிந்தார்.

உடனே பிரமன் பதைபதைத்து அளவிலா வருத்தமுற்று வைகுண்டத்தை அடைந்து தன்னைப் பெற்ற பிதாவாகிய ஸ்ரீமந் நாராயணனது திருவடிகளை நமஸ்கரித்து நடந்தவற்றை விண்ணப்பம் செய்யவும் அது கேட்ட மஹாவிஷ்ணு தன்மகனாகிய பிரமனைப் பார்த்து பிரமனே கிள்ளிய தலை திரும்ப முளைக்க வேண்டுமானால் ஸ்ரீமுருகக் கடவுளது சடாக்ஷர மந்தர மகிமையால் தான் அனுகூலமாகும் ஆகவே அம் மஹாமந்திரத்தை உனக்கு உபதேசிக்கிறேன் என பிரமனை அன்புடன் தழுவி பின்னும் சொல்கிறார்.

பிரமனே! நீங்கிய உனது தலை திரும்பப் பெறவேண்டின் உனக்கு மாமராகியசூரனைத் தடிந்து அலைவாய்கரையில் வெற்றிவேலாயுதத்தைக் கரத்திலே தரித்து விளங்கும் முருகக் கடவுளது ஆறெழுத்து மஹாமந்திரத்தை நாம் குரு முகூர்த்தமாக உனக்கு உபதேசிப்போம். நீ அதனை சிஷ்யபாவமாகக் கேட்டு பலமுறை தியானிக்கக்கடவது என ஸ்ரீமன் நாராயணன்முருகக் கடவுளது சடாக்ஷர மந்திரத்தை உபதேசித்தருளினார்.

அந்த பெருமையான சடாக்ஷர மந்திரத்தை பிரமதேவன் கேட்டுப் புளகாங்கித மடைந்து மனமொடுங்கி விருப்பமுடன் தியானித்தான். அப்படித்தியானத்துடன் கடும் தவம் செய்த பிரமனிடம் நாம் தோன்றி பிரமனே உன் தவத்துக்கு மகிழ்ந்தோம். உன் விருப்பம் யாது விளம்புக எனவும் பிரமனும் சுவாமீ என் ஐந்து தலைகளில் ஒன்று அறுபட்டமையால் யான் மனவருத்த முற்று இக்கடும் தவம் செய்தேன் என எழுந்து நம்மை வணங்கி கண்ணீர் சொரிந்து அகந்தை நீங்கி பக்தி மேலிட்ட மனத்துடன் வாயாரத் துதி செய்கிறுன்.

கைலாசபதியால் அருளப்பட்ட கருணையங் கடலே
வள்ளி நாயகியாரையும் தேவநாயகியாரையும் கலந்தவேத
சமுத்திரமே ஆறுமுகங்களையும் பன்னிருபுயா சலத்தையும்
உடைய வள்ளலே என்னைக் காக்கவேண்டும் என்னைக் காக்க
வேண்டும்.

அன்பர்களின் மன இருளைப் போக்கும் ஞானசூரியனே! சகல உயிர்களுக்கும் தாரகமாக விளங்கும் பிரணவ வடிவே! என்னைக் காக்கவேண்டும். திருக்கருணையினுல் அருளுதல் காத்தல் அழித்தல் எனப்படும் முத்தொழிலையும் செவ்வனே நடைபெறச் செய்யும் அண்ணலே என்னைக் காக்கவேண்டும்.

துறந்தோர் உள்ளத்தையும் மயக்கும் காமபாணத்தை அறவே ஒழித்த முனிவரது உள்ளத்திலே சதகோடி சூரியர் போல பிரகாசித்து விளங்கும் பன்னிருகரத்தனே என்னைக் காக்கவேண்டும்.

நான் சிருஷ்ட்டிக்கும் இந்த அண்டம் எனும் மலர் பிருதிவி அப்பு, தேய்வு, வாயு, ஆகாயம் எனும் பூதங்கள் ஐந்துடன் உயர்ந்த மான் அலங்காரம் முதலாகப் பொருந்திய தத்துவங்களாகிய பொதிந்த இதழ்களினுல் அமைந்தது. இது போலும் இயல்பினையுடைய ஒவ்வொரு அண்டமாகப் பரந்த அளவிறந்த அண்டங்களெல்லாம் மலர்ப் பீடங்களாகவும் அதில் மாக்ஷிமைபொருந்த வீற்றிருக்கும் சிவகுமாரரே, உமது கீர்த்தியை வேதவேதாந்தங்களும் தெளியா. அப்படியிருக்க அந்த கீர்த்தியை எளியேனுல் உரைக்க முடியுமா

எவர்க்கும் மிக்க பிரீதி உண்டாகும்படி போதிக்கும் குருநாதரே என்னைக் காக்க வேண்டும்.

வேதங்களால் துதிக்கப்படுகின்ற தேவரீரை தியானித்ததாலே யாகிய பெருமையினால் சரஸ்வதி சதுர் வேதங்களிலும் ஆகமங் களிலும் தேர்ச்சியுடையவளாக இருக்கிறாள். தங்கள் திருவடிகளை வணங்கு வோர்களுக்கு அளவில்லாத ஞானம் உண்டாகும். கல்வி யில்லாத சிறுவனாகிய நான் எப்படி அறிவேன். என் குற்றங்களை மன்னித்து என்னைக் காக்கவேண்டும்.

ஆண்டவனே உமது பாதாரவிந்தமானது வழிபடுகின்ற மூவுலகத் தோருக்கும் வேண்டிய ஐஸ்வரியத்தைக் கொடுக்கும். லெக்ஷிமீ தேவிபோலவும் கலை ஞானமெலாம் அருளும் சரஸ்வதி போலவும் விளங்கி சிவஞானவுறுதியை அருளதற்கு மெய்மை நிறைந்த குரு வாகி சிந்தித்தவற்றை யெலாம் சிந்தித்தபடியே அருள் செய் கின்றமையால் துதிக்கிறேன் என்னைக் காக்க வேண்டும்.

தத்துவங்களாகிய திரைகளைமோதி ஆணவம் மாயை கன்மம் என்னும் முதலைகளோடு காமனாகிய சந்திரனை ஆசையுடன் பார்த்து இரைகின்ற இப்பிறவிக் கடலைக் கடக்குமாறு திருவடியை அருளும் மலரகிதரே! அருளையே பொழிகின்ற ஆறுமுகப் பெருமானே! சிம்மாசனத்தின் மேல் வீராசனத்தில் எழுந்தருளி இடது திருக்கை யை இடதுதிருமு ழந்தாளில் வைத்தா வலக்கையில் சின் முத்தி ரையைக்கொண்டு விண்ணிற்ற வழுகின்ற பூர்ணசந்திரன் போல் ஒளி விளங்கும் திருவுருவம் கொண்டு பிரம்ம விஷ்ணுக்களும் அறியாத சித்துருவான சிவக்கடவுளுக்கு உபதேசம் செய்த திருக்கோலத்தை யும் தியானித்து மனத்தால் வழிபட்ட நல்லோர்களை எல்லாம் நான்கு வேதங்களும் தேடுகின்ற சிறப்பினையுடைய சிவஸ்வரூப மாகச் செய்யும் ஞான காரணமே. எங்கள் சண்முகப்பெருமானே நும் கருணையாகிய அமுதக்கடலில் படிந்தவர்கள் சத்திய லோகத் தில் வாழும் சிறப்பினையும் நீங்கிய உடலில் பொருந்திய ஆடை அணிகளை வெறுத்துப் பார்ப்பதைப் போன்ற துணிதலை உண்டாக கக் கூடியவரே! தேன் போன்ற பழத்தை வெறுத்து நஞ்சை உண் டவர் போல தங்களது கருணைப் பிரவாகம் தெரியாது மற்றொருவ

ரை வழிபட்டு நினைந்து வருந்தாமல் அடியவர்களுக் கெல்லாம் நினைத்த மாத்திரத்தில் ஆறுமுகங்களையும் பன்னிரு தோள்களையும் காட்டி அருளுகின்ற அழிவிலா முதல்வரே! வேலாயுதத்தைத் திருக் கரத்தில் தரித்தவரே! வள்ளியம்மை யாரெனும் கொடி படருவதற்கு இசைந்த கற்பகத் தருவே! வெள்ளியங்கிரியின் ஞானப் பிழம்பாக விளங்கும் இரத்தினமே என்னைக் காக்க வேண்டும். உள்ளம் கசிந்துருகும் என் பொருட்டு அனுக்ரஹம் செய்து என்னைக் காக்க வேண்டும் எனத் துதித்தான்.

அவ்விதம் துதி செய்த பிரமனைப் பார்த்து கமலா சனனே உனது தோத்திரத்துக்கு மிகவும் மகிழ்ந்தோம். நீ செய்த தோத்திரமானது சுருதிப் பொருள்களைப் பொதிந்த பாடல்களையும் அதன் கருத்துக்களையும் கொண்டன வாயிருப்பதால் இத் தோத்திரங்களைச் சொன்னவரிடத்தும் இதைக் கேட்டவரிடத்தும் நாம் மிக்கப் பிரீதியாகி அவர்களுக்கு அழிவற்ற மேலான நல் வாழ்வை இம்மையிற் கொடுத்து உபய சரணவிந்தப் பெருமையையும் அருளுவோம் என வரம் கொடுத்துப் பின்னும் சொல்லியதாவது பிரமனே மனம் வருந்ாதே உன் மனத்தில் விரும்பிய வரத்தைக்கேளு யாம் தருவோம் என்று சொல்லவும் இதைக் கேட்டதும் பிரமன் சந்தோஷித்து சாஷ்ட்டாங்கமாக நமஸ்கரித்து கை கட்டி வாய் புதைத்துச் சொல்லுகிறுன்.

சுவாமீ முன்னம் சிவபெருமானை நிந்தனை புரிந்ததினுல் என் ஐந்து சிரங்களில் ஒன்றை இழந்தேன். இழந்த சிரமானது மீண்டும் கிடைக்குமாறு அருள வேண்டும் என்று பிரார்த்திக்க

திரிஸ்வதந்திர முனிவர்களே:-

நாம் அப்போது பிரமனது கருத்துக்கும் தவத்துக்கும் மிக உவந்து இழந்த சிரசு திரும்பும் சமயத்தைத் தெரிந்து பிரணவத்துடன் முதிர்ந்த பஞ்சாக்ஷரத்தின் ஞானத்தையும் பிரமனுக்குப் போதித்துப் பின்னும் கூறியதையும் சொல்லுகிறேன் கேளுங்கள்.

நிகரில்லாத பேரழகினையுடைய தேவயானை விருப்பமுடன் தவம் செய்வதற்காக மெய்வடிவாம் இலிங்கா காரத்தில் சிவபெரு

மான் காக்ஷியளித்த ஜகந்நாதருடைய ஆயிரக்கணக்கான நாமங்களை நாவினல் உச்சரித்துப் பஞ்சாக்ஷரமாகிய மூல மந்திரத்தை பிரணவம் முன்னக மனதில் அழுத்தி இரவு பகல் துதி செய்து நியமத்தின் வழுவாது ஒழுகும் இயல்புடன் இனிய ஐந்தெழுத்தின் ஜபத்தையும் பூஜையையும் இடைவிடாது முறைப்படி செய் என்று கூறினேம். அவ்விதமே பிரமனும் சிவபெருமானுடைய திருவடிகளை குறித்து நாலாயிரயுகம் கடும்தவம் செய்தான். அத் தவத்திற்கிரங்கி சிவபெருமானும் பிரமன் முன் இலிங்க வடிவமாகத் தோன்றி பிரமனே நீ இக்கடும் தவம் செய்த காரணம் என்ன சொல்லுக. யாம் உனக்கு அனுக்ரஹம் செய்வோம் என்று சொல்லவும் பிரமன் சிவபெருமானைத் தரிசித்து அடிமுடிபட வணங்கி கைகூப்பி ஆனந்தக் கண்ணீர் சொரிய நின்று கொண்டு நாக்குழற துதிப்பானயினன்.

ஒப்பின்றி உயர்ந்த நங்கை பாகராய் அறிவாலும் இன்பத்தாலும் சமுத்திரம் போன்று அடியர்க்குப் பொருந்திய விருப்பத்தினும் விசேஷமாக உதவுகின்ற மலரகிதரான ஜகந்நாதரே! ஒளிபொருந்திய திருமேனியில் தூய விபூதி அணிந்து புலித்தோலை ஆடையாகக் கொண்டு ஜடாமுடியில் பிறை பாம்பு கங்கை அறுகு இத்யாதிகளை அணிந்து திருபாற்கடலில் தோன்றிய ஆலகால விஷத்தைத் திருக்கண்டத்தில் நிறுத்தி திரிபுரத்தைச் சிரித்து எரித்து வேத நான்கையும் திருவாய் மலர்ந்தருளி மன்மதனை நெற்றிக் கண்ணினற் எறித்துப் பின்னர் ரதி வேண்ட அனுக்ரஹித்துப் பார்வதி தேவியை இடப்பாகத்திலே கொண்ட சாமவேதகீதரே! சகஸ்ரநாமங்களையுடையவரே, அறிவினலும் குணத்தினலும் மனத்தில் நினைந்த அடியவருக்கு அவரவர் கருத்தும் கற்பகத்தருவையும் சிந்தாமணியையும் அருளி மேலும் வேண்டியன அருளுமாறு அவர்கள் மனத் தாமரையில் வீற்றிருக்கும் ஜகந்நாதரே! தங்களை இகழ்ந்து கூறிய பாபத்தினல் எனது ஐந்து தலைகளில் ஒன்றை இழந்தேன். இழந்த சென்னியை திரும்பப் பெற இத்தவம் செய்தேன். எனக்கு அனுக்ரஹிக்க வேண்டும் எனப் பிரார்த்திக்க சூலபாணியார் பிரமனை நோக்கி அன்னவாகனத்தை யுடையவனே நீ இழந்த சிரம் பெற வேண்டி உனக்கு ஆகவேண்டியதைச் சொல்லுவோம் நீ அதனை மனத்தில் ஆசையுடன் உள்ளத்தில் அமைத்துக்கொள்.

பிரமனே நீ குமரக்கடவுளைப் போற்றும்பொருட்டு அக்கடவுள் நிலையாகவுள்ள திருச்செயந்திபுரத்துக்கு அன்புடன் சென்று அங்கு தியானம், தோத்திரம், பூஜை, மிகுந்த நோன்பு, இவைக ளால் குமரக்கடவுளை நோக்கிக் கடும் தவம்செய்து கொண்டிருக்கும் பெரியாரைச் சேர்ந்து வணங்கி கோயிற் சன்னதி முன்னிருக்கும் சமுத்திரத்தில் மூழ்கி பொன் விமான உருவத்துடன் துதித்துக் கொண்டிரு. இவ்விதமே நீ கடும் தவம் செய்தால் விரும்பியவற்றை குறைவிலாது கொடுத்தருளும் நம் முருகக் கடவுளுடைய திருவருளி னல் முருகக்கடவுளுடைய திருக்கோயிலில் என்றும் நீங்காத பொன் விமான உருவத்துடன் விளங்குவாய்.

அப்படி நம் முருகக் கடவுளுக்குப் பொன் விமானமாக இருக் கும் போது நமது ஆஞ்ஞையினல் உனக்குள்ள கற்பம் நீங்கும். நல்ல காலத்தில் இழந்த சிரம் பெற்று ஐந்து சிரத்துடன் விளங்கி நமது சாரூபத்தை அடைவாய். பிரமனே உன்மேல் கொண்ட கருணையி னல் இவ்வரம் உனக்குத் தந்தோம். கந்தமாதனத்துச் சமுத்திரத்தில் தினமும் ஸ்நானம் செய்வதால் நினைத்தவையாவும் விரைந்துவரும். இந்த உண்மையை உன் பொருட்டு கூறினோம். நீ அங்ஙனம் சிந்து ஸ்நான விமான ரூப தாரண குகசேவனங்களை இயற்றலாகிய தொண்டுத்தலைமையை அனுஷ்டித்த பின்னர் நாம் அனுக்ரஹித்த படி யுள்ள சாரூப்ய நிலையைப் பெறின் உன் தலைகள் ஐந்தும் சீர் படும். வேற்படையைத் திருக்கரத்திலேயுடைய முருகக் கடவுள் கோயிலின் வாசலிலே விலை யுயர்ந்த முத்துக்களையும் மணிகளை யும் சேர்க்கும் கீர்த்தி பொருந்திய சமுத்திரத்திலே நித்யமும் ஸ்நா னம் செய்வது தக்கது. பிரமனே நீ சிரசைப் பெறும் காலம் வரை யிலும் சன்னதி சமுத்திரத்தில் ஸ்நானம் செய். விஷ்ணு எடுத்த ராமாவதாரம் மூன்றிலும் அமைத்த சேதுக்களில் இதை ஆதிஆதி சேதுவாக அமைத்து நமது இருசரணாரவிந்தங்களை பூஜித்திருக் கிறார்கள். ஆதலால் பிரமனே நீ இச்சயந்திபுரத்திலே யுள்ள சமுத் திரத்தில் தவறாது ஸ்நானம் செய்து கொண்டிரு. உனது தவத்தால் இச்சந்நிதான சமுத்திரத்துக்கு வதனாரம்பம் என்று கூறுதல் முறை யாம். இப்பூவுலகத்தில் சுப நதிகளாகிய அளவில்லாத மஹா தீர்த் தங்கள் எல்லாவற்றிலும் ஸ்நானம் செய்யும் பலன்கள் எல்லாவற்

றையும் சதுர்வேதமறிந்த பிரமனே நீ வதனுரம்பத்தில் ஒரு நாள் ஸ்நானம் செய்வதினுல் பெறுகிருய் என்று சொல்லியருளி சிவ பெருமான் லிங்கத்தில் மறைந்தருளினுர்.

அதனுல்தான், சந்நிதி முகாரம்ப தீர்த்தத்தில், வேண்டிய பலன்களைப் பெறும் பொருட்டு, அன்புடன், தினம், தினம், ஸ்நா னம் செய்வது முறையாம்.

வெண்மையான மனத்தையுடைய திரிசுதந்திரர்களே இன் னும் ஒரு சரித்திரம் உள்ளது. அதையும் உங்களுக்குக் கூறு கிறேன் என்று அருளிச் செய்கிருர் முருகக் கடவுள்.

கலிங்க நாட்டு, அரசன் ஒருவன், பெற்ற கனகசுந்தரி, என் னும் பெண், தாம்பிரபரணி நதியின், உற்பத்தி ஸ்தானத்தில் நீராடச்சென்ருள். செல்லும் வழியில் தவத்திலிருந்த அயக்ரீவ ரென்னும் மஹரிஷி குதிரை முகத்துடனிருப்பதைப் பார்த்து அவரை அவமதித்துச் சிரித்தாள்.

அது கண்டு அயக்ரீவ முனிவரும் கோபம் கொண்டு பெண் ணே நீ என்னை வீணில் அவமதித்தபடியால் வரும் பிறப்பில் உனக்குக் குதிரைமுகம் உண்டாவது என்று சபித்தார். இது கேட்டு கனகசுந்தரி பதைபதைத்து அம் முனிவரின் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து தான் அறியாமற் செய்த பிழையைப் பொருத் தருளுமாறு பிரார்த்திக்க முனிவரும் கோபம் தணிந்து பெண்ணே நான் கொடுத்த சாபம் நீங்கவேண்டுமானுல் குமரக்கடவுள் வீற்றி ருக்கின்ற திருச்செந்திலம்பதி சென்று அங்கு சந்நிதி முன்னுள்ள சமுத்திரத்தில் ஸ்நானம் செய்தால் இச்சாபம் நீங்கும் என்று மொழிந்து மீண்டும் தவத்துக்கு ஏகினுர்.

கனகசுந்தரியும் அப்பிறப்பு நீங்கி மறு பிறப்பில் முனிவர் சாபத்தின்படியே உக்கிரப் பெரு வழுதி எனும் பாண்டியனுக்குக் குதிரை முகத்துடன் மகளாகப் பிறந்தாள். உடம்பெல்லாம் ரதியும் வெட்கும்படி திவ்விய மேனியுடன் இருந்தும் முகம் மட்டும் குதிரை முகமாயிருத்தலைக் கண்டு பாண்டியன் துக்கமுற்று கவலை

யில் தோய்ந்த சமயம், பாண்டியனே கவலைப் படாதே நீ உன் மகளுடன் எல்லா தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து வந்தால் இக் குதிரை முகம் மறைந்து செம்முகம் வரும் என ஆகாயவாணி உரைக்கவும் இதைக் கேட்ட பாண்டியனும் உளம் மகிழ்ந்து திரு வருளை வியந்து துதித்து தீர்த்தங்களை ஆடுவதற்கு செல்லுகின்ற மாதவர்களுடன் தானும் தன்மகளும் தன்னுடைய பரிசனம் புடைசூழப் புறப்பட்டு காசி முதல் கன்யாகுமரி வரையுள்ள எல்லா தீர்த்தங்களிலும் முறைப்படி ஸ்நானம் செய்து நாம் வீற்றிருக்கும் திருச்செந்திலம்பதி வந்து சன்னதி முன்னுள்ள தீர்த்தத்திலே முறைப்படி ஸ்நானம் செய்து எழுந்திருக்கையில் பாண்டியன் மகளுக்கு ஏற்பட்டிருந்த குதிரை முகம் மறைந்து மறுவில்லா சந்திரனை யொத்த முகம் அமைந்திருந்தது. இதைப்பார்த்த பாண் டியனும் மற்றும் யாவர்களும் சந்தோஷ புளகாங்கிதமடைந்து எம் சந்நிதி வந்து பணிந்து தோத்திரம் செய்து நமக்கு உத்ஸவம் முதலானதுகள் செய்து கொண்டாடி மகிழ்ந்தான்.

சமுத்திரமானது நமது சந்நதி முன்னிருப்பதாலும் பிரமன் தலையைப் பெற்றதினாலும் பாண்டியன் மகளுக்குக் குதிரைமுகம் மறைந்து பூர்ணசந்திரனை யொத்தமுகம் உண்டானதாலும் இதற்கு முகாரம்ப தீர்த்தம் எனப்பெயர் உண்டாயிற்று. இன்னும் இதற்கு வாஞ்சாதீர்த்தம் சத்யதீர்த்தம் என்னும் பெயர்களும் உண்டு என்று கூறியருளிய முருகக்கடவுளின் மலர்த்தாமரைகளை திரிஸ் வதந்திரர்கள் மனமொத்த அன்புடன் வணங்கித் துதித்து மகிழ்ந்து முறைப்படி பூஜைசெய்து தொழுது கொண்டிருந்தார்கள் என வேதவியாசர் சுகருக்கு கூறியதை சூதர் நைமிசாரண்ய வாசி களுக்குக் கூறியருளினர்.

ஒன்பதாவது அத்யாயம்

பிரம்மாவுக்கு வரம் கொடுத்தது முற்றிற்று.

---

# பத்தாவது அத்தியாயம்

## திரிஸ்வதந்திரர் வரலாறு உரைத்தது.

நைமிசாரண்ய வாசிகளே.

முற்றுமுணர்ந்த வியாசமுனிவரது திருவடிகளை சுக முனிவன் அன்புடன் பணிந்து சுவாமீ தேவரீர் மேலே சொல்லிய திரிஸ்வதந்திரர்களின் வரலாற்றையும் கீர்த்தியையும் பின்வற்றையும் அடியேனுக்குக் கூறியருளவேண்டும் என்று வணங்கி வேண்ட வியாசமுனிவரும் சுகமுனிக்கு அன்புடன் சொல்லுகிறார்.

செய்யுள் 2.

சுகமுனி வருதிரி சுதந்தி ரத்தருங்
குகனுமொன் றுகவே யிருந்த கொள்கைநா
முகமனன் றுரைப்பது மோனத் துன்மைபோ
லகமகிழ்ந் தினிதுகே ளறைகு வாமரோ

சுகமுனியே திரிஸ்வதந்திரர்களும் முருகக்கடவுளும் வேறல்ல ஒன்றுதான். நான் கூறுவது உபசாரவார்த்தை யல்ல உள்ளபடியே கூறுகின்றேன் மௌனத்துடன் மனமுவந்து இனிதுகேள்.

நான்கு வேதங்களையும் முழுதும் கற்றுணர்ந்து பேரறிவு வல்லமை படைத்த தவசிரேஷ்ட்டர்களாகிய முனிவர் கூட்டங்கள் பூமியில் புண்ய கங்கை நதிக்கரையில் தவம்செய்வதற்கு வந்து கூடினார்கள்.

சந்தோஷத்துடன் ஆறுதொழில்களையும் வேதமுறைப்படி செய்தும் தேவர்கள் முனிவர்கள் பிதுர்க்கள் முதலிய எல்லோரையும் மகிழ்விக்கும் பொருட்டு பெருமையாகிய பிரம்மசாரிய நிலையில் நின்று அளவிறந்த வேதங்களையும் ஸ்மிருதிநூல்களையும் ஆராய்ந்து உரிய கருமங்களை முன்னரே செய்தல் உடையவராயும் தேவர்களுக்குப் ப்ரீதியான யாகங்களைச் செய்து அவிர்ப்பாகங்கள் கொடுத்தும் தென்புலத்தாரை மகிழ்விக்கப் புத்திரப்பேர் எய்தும்

பொருட்டு நல்வாழ்க்கையாம் இல்வாழ்க்கை நடத்துபவராயும் பிரம்மதேவனைக் குறித்துக் கடும்தவம் செய்தனர்.

கடும்தவம் செய்யும் முனிவர்கள் முன், பிரம்மதேவன் தோன்றி முனிவர்களே உங்கள் தவத்துக்கு மகிழ்ந்தோம் உங்களுக்கு வேண்டியது யாது சொல்லுங்கள் எனப்பிரமன் கூறவும் அது கேட்டமுனிவர்கள் எழுந்து நின்று வணங்கி அஞ்சலி செய்து சுவாமீ நாங்கள் பூலோகத்திலும் தேவலோகத்திலும் பிரம்ம லோகத்திலும் தடையில்லாமல் வசித்து வருவதற்கு அனுக்ரஹம் செய்யவேண்டும் என்று பிரார்த்திக்க பிரமனும் மகிழ்ந்து நீங்கள் விரும்பிய வரத்தைத்தந்தோம் என அருளி மறைந்தார்.

பின்னர் முனிவர்கள் மஹாவிஷ்ணுவைக் குறித்து கடும்தவம் செய்ய மஹாவிஷ்ணுவும் அம்முனிவர் பால் தோன்றி முனிவர்களே உங்கள் தவத்துக்கு மகிழ்ந்தோம் உங்களுக்கு வேண்டுவது யாது எனவினவ முனிவர்களும் மஹாவிஷ்ணுவைப் பணிந்து சுவாமீ நாங்கள் பூலோகம், தேவலோகம், பிரம்மலோகம், இம்மூன்றிலும் வசித்துவர வரம்தரவேண்டும் எனக்கேட்க மஹாவிஷ்ணு மன மகிழ்ந்து அவ்வாறுருக என வரம் கொடுத்து மறைந்தார்.

பின்னர் முனிவர்களும் கைலாசபதியைக் குறித்துக் கடும் தவம் செய்ய சிவபெருமானும் முனிவர்கள் முன் தோன்றி முனி வர்களே உங்கள் தவம் பூர்த்தியடைந்தது. மகிழ்ந்தோம் உங்களுக்கு வேண்டுவதைக் கேளுங்கள் தருவோம் எனப்புகலவும் முனிவர்கள் சிவபெருமானை வணங்கி சாஷ்ட்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்து உரோமம் சிலிர்க்கக் கை கூப்பி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து சுவாமீ நாங்கள் பூலோகம் தேவலோகம் பிரம்மலோகம் இம்மூன்றி லும் வாசம் செய்து வர அனுக்ரஹிக்க வேண்டும் எனக்கேட்க பரம சிவனும் மனமகிழ்ந்து முனிவர்களே நீங்கள் விரும்பியபடியே கொடுத்தோம் எனக்கூறி மறைந்தருளினர்.

இவ்வாறு முத்தொழில் முக்கடவுளும் முனிவர்கள் முன் தோன்றி மூன்று புவனங்களிலும் வசித்துவரும் பேற்றை அருளி னமையால் இம்முனிவர்களுக்கு திரிஸ்வதந்திர முனிவரர் என தேவர்கள் பெயர் சூட்டினர்.

செய்யுள் 10.

அம்புயத் தண்ணலு மளித்துப் போயினன்
வெம்புமக் கினியவர் வேட்ட மூவர
ஙம்புற வளித்தன னகைநி லாக்கொழுந்
தும்புனேர் தருள்புரி சூல பாணியும்.

செய்யுள் 11.

வேட்டமூ வரங்களும் வேதியர்க்குளங்
கூட்டுற மாயனுங் கொடுத்துப் போயின
ஞட்டமுத் தேவமுப் புவன நல்கலாற்
சூட்டுபேர் திரிசுதந் திரரென்றுயதே.

அம்முனிவர்களும் தங்களுக்குக் கிடைத்தவரத்தின்படி பூவுல கம் தேவர்உலகம் பிரம்மலோகம் இம்மூன்றிலும் சுதந்திரத்துடன் மகிழ்ந்து வசித்து வரலாயினர். அத்துடன் தாம்பிரவருணி நதிக் கரையில் பெரிய யாகம் செய்தலுடன் இல்லறத்தில் வாழ்ந்தும் இருந்தனர் எனவியாசர் சுகருக்கு சொல்லிவரும் சமயம் சுக வியாசரைப் பணிந்து சுவாமீ மேலே கூறியுள்ள இத் திரிஸ்வதந்தி ரர்களின் எண்ணிக்கை எவ்வளவு எனக்கேட்க வியாசரும் அதன் விபரத்தையும் சொல்லுகிருர்.

சுகமுனியே

திரிஸ்வதந்திரத்தார்களில் ஓராயிரவர் விருத்தாசலத்தில் முக்கண்ணையுடைய சிவபெருமானைப் பூஜித்துக் கொண்டிருக் கிருர்கள்.

செய்யுள் 15.

பெறலருந் திருவுடன் சிறந்து பெய்மதத்
தறுகண்மா வியானையாற் ஞரம் புல்லிய
வறுமுகன் பாலிரண் டாயிரத்தரு
முறுபொரு ளடைந்துவா னவர்க்கோப் பாகவே.

செய்யுள் 16.

நித்தமுங் குகன்பத நீக்க மின்றியே
பத்திமைச் செய்ந்தியம் பதியின்வைகினர்
வித்தகச் சரித்திரம் விளம்பு மேலையோர்
முத்தராய் குகனடி முளரி சார்வரால்.

இரண்டாயிரம் பேர்கள் திருச்செய்ந்திலம்பதியில் ஸ்ரீமுருகக்கடவுளைப் பூஜித்துக்கொண்டு முருகனது திருவடியைக் கனவிலும் மறவாத மனத்துடன் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். இவர்களது சரித்திரத்தைக்கூறினவர்களும் கேட்டவர்களும் குகப்பெருமானது திருவடிப்பேறினைப் பெறுவர்.

மூவாயிரம் பேர்கள் பதஞ்சலி வியாக்ரபாதர் வணங்க சிவபெருமான் ஆனந்த நடனஞ்செய்யும் சிதம்பரத்திலே கனகசபையில் நடராஜ மூர்த்தியை பூஜித்து கொண்டும் நியமம் பழுவாது தியானித்துக் கொண்டுமிருக்கின்றனர். இம் மறையோர்களை சிந்தையில் நினைப்பவர்கள் இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தை அடைவார்கள்.

நாலாயிரம்பேர்கள் பிரமபுரம் எனும் விஷ்ணு க்ஷேத்திரத்திலே செல்வத்துடன் திருமாலைப் பூஜிக்கும் பெருமை யுடையராய் வாழ்ந்து வரலாயினர்.

ஐயாயிரம்பேர்கள் ஜோதிப்பிழம்பாய் விளங்குகின்ற நினைக்க முக்தியளிக்கும் திருவண்ணாமலையில் ஸ்ரீஅருணாசலேஸ்வரரை பூஜித்து வரலாயினர்.

ஆயிரம்பேர்கள் ஜகந்நாத க்ஷேத்திரத்தில் துளசி மாலையை அணிந்த மஹா விஷ்ணுவை பூஜித்து வரலாயினர்.

எழாயிரம்பேர்கள் திருவீழிமிழலையெனும் க்ஷேத்திரத்திலே உமாபதியாகிய சிவபெருமானை வேதமுறைப்படிப் பூஜித்து வரலாயினர்.

எண்ணுயிரம்பேர்கள் அறுபத்தி நான்கு திருவிளையாடல்களை யும் உடைய கூடல் எனும் மதுரையில் ஸ்ரீமீனுக்ஷிசமேத ஸ்ரீசோம சுந்தரக் கடவுளை பூஜித்து வரலாயினர்.

ஒன்பதினுயிரத்தவர்கள் தவத்துக்குரிய தண்டகாரண்யத்தில் சிவபூஜையையுடைய ஸ்ரீராமபிரானது திருவடியை அர்ச்சித்துப் பூஜை செய்து வரலாயினர்.

பதினுயிரத்தவர் கோகுலத்தில் ஸ்ரீமாஹாவிஷ்ணுவினது திரு வடிகளைப் பூஜித்து வரலாயினர்.

பதினோராயிரவர் சிறப்பாலுயர்ந்த பத்ரிகாச்ரமத்தில் ஸ்ரீமஹா விஷ்ணுவைப் பூஜித்து வரலாயினர்.

பன்னீராயிரவர் குடகாவிரிக்கு வடபால்வாழ் சுவாமி மலை யில் குரு முகூர்த்தமாய் விளங்கும் சுவாமிநாதக் கடவுளின் திரு வடிகளைப் பூஜித்து வரலாயினர்.

இவ்விதமாக எழுபத் தெண்ணுயிரத்தவர்களாகிய இத்திரிஸ் வதந்திர முனிவர்கள் இக்கடல் சூழ்ந்தபுண்ணிய தலங்களிலும் ஆங் காங்கு தவத்தைச் செய்து கொண்டும் திரிலோகங்களிலும சஞ் சரித்துக் கொண்டுமிருக்கிறார்கள்.

செய்யுள் 29.

எவர்களாயினுமிவரை நெஞ்சத்துப்
பாவகஞ் செய்யினும் பண்பி னேத்தினும்
பூவடித்தாமரை போது போற்றினுர்.
தேவரோர் மூவர்க்குஞ் சிறப்புச் செய்துளார்.

சுகமுனியே இப் பெருமைவாய்ந்த திரிஸ்வதந்திரர்களை மனதில் எண்ணுபவர்களும் இவர்களை வணங்குவோர்களும் முக் கடவுளை வழிபட்டு வணங்கும் புண்ணியப்பேற்றை அடைவர் என வியாச பகவான் சுகமுனிவருக்கு உபதேசித்ததை சூதர் நைமி சாரண்யவாசிகளுக்கு உபதேசித்தருளினர்.

பத்தாவது அத்தியாயம்

திரிஸ்வதந்திரர் வரலாறு உரைக்கது முற்றிற்று

# பதினொன்றாவது அத்தியாயம்

## மாதபூஜை விதி உரைத்தது

நைமி சாரண்யவாசிகளே,

இந்திரியங்களின் வழியால் மனதை உலக விஷயங்களில் செலுத்தாத வியாசமுனிவர் சுகமுனிவனது முகத்தை அன்புடன் பார்த்து அகத்திய முனிவருக்குச் சிவ தருமங்களைப் போதித்த கொவ்வைக்கனிபோன்ற திருவாயையுடைய ஸ்ரீகுமரக் கடவுளின் திருவடிகளைத் தியானித்து முருகக் கடவுளது அருளோடு பொருந்திய அறிவைப் பெற்று வேதங்களை யுணர்ந்த திரிஸ்வதந்திரர்களின் பெரும் செயல்களையும் மாதம் தோரும் கிரமமாகப் பூஜை செய்யும் பலன்களையும் விதிப்படி கூறுகிறார்.
சுகமுனியே

செய்யுள் 2.

கூறுமிரண்டாயிரு மிருககாகு முதல் வேதக்குழுவோருள்ள
மாறுமட வருங்காம முதலாகும் பகயனைத்து மரபின் வென்றோர்
தேறுபெறு ஞானமெலாந் தாமுணர்ந்து பிறர்க்குறைக்குஞ் செயலோர்செவ்வே
ளாறெத்து மம்புலத்து ளடக்கியொரு நால்வேத மங்கமாறும்.

செய்யுள் 3.

முற்றுணர் பெரியோர்க ளருமகத்தின் கருமமுற்று முாவோர்வேதத்
துற்றசுபா சுபகரும மனைத்தியுந் தவருதுள்ளோது மேலோர்
பற்றிகலி லாதுறைவோர் முத்தேவர் தம்பதமும் பழித்து வாய்ந்த
பெற்றமுகைத் தவன் சரண பங்கயமே பொருளாகப் பேணுகிரார்

செயந்திபுரத்தி லிருக்கும் இரண்டாயிரத்தாரான திரிஸ்வதந்தரர்கள் முதல் வேதமாகிய இருக்கு வேதத்தையுடைய கூட்டத்தவர்கள் மனதைமயக்கும் ஆசைமுதலான பகைகளை முறையே வென்றவர்கள் ஞானமெலாம் தாமுணர்ந்து அதைபிறர்க்கு அறிவிக்கும் செய்கையுடையவர்கள் ஸ்ரீமுருகக் கடவுளது சடாக்ஷரத்தை

மனதில் அடக்கி நான்கு வேதங்களையும் ஆறு சாஸ்த்திரங்களையும் முற்று முணர்ந்த பெருமை யுடையவர்கள் அரிய யாகத்தைச் செய்து முடிக்கும் அறிவுடையவர்கள் சுருதிகளில் சொல்லியிருக் கின்ற சுபா சுபகரும மந்திரங்கள் எல்லாவற்றையும் தவராது மனம் கொண்டு ஓதும் மேலவர்கள் விருப்பு வெறுப்பு, இல்லாமல் இருப் பவர்கள் முத்தேவர்களுடைய பதவிகளையும் ஒரு பொருளென நினையாது சிவ தியானத்திலேயே ஈடுபட்டமனதினர்கள்.

ஐப்பசி மாதத்திற் சுக்ல பக்ஷத்து நவமி கார்த்திகை மாதத்திற் சுக்ல பக்ஷத்து அஷ்டமி வைகாசி மாதத்திற் சுக்ல பக்ஷத்துத் திரு தியை மாசி மாதத்திற் சுக்ல பக்ஷத்து சப்தமி எனும் யுகாதிகள் நான்கிலும் பன்னிரெண்டுமாதங்களில் வரும் அமாவாசைகளிலும் தைமாதத்தில் சுக்ல பக்ஷத்து சப்தமி ஏகாதசி எனவழங்கும் மனு வாதி பதினன்கிலும் புரட்டாசி மாதத்திற் அபரப் பிரதமை முதல் மஹாளயம் பதினறிலும் சங்கராந்தி காலம் பன்னிரெண்டிலும் வைத்ருதி வ்யதீபாதம் முதலிய 26 தினங்களிலும் மார்கழி தை மாசி பங்குனி மாதங்களில் பிற்பகத்துச் சப்தமிகளும் நவமிகளா கிய அனுவட்டங்கள் எட்டும் இவற்றினிடையேவரும் அட்டமிதிதி கள் நான்காகிய மஹாவட்டைகள் நான்கும் ஆக பன்னிரெண்டிலும் அதாவது (யுகாதி4. மனுவாதி14. மஹாளயபக்ஷம்16. அமாவாசை 12. மாதப்பிரப்பு12. வைத்ருதி வ்யதீபாதம்26. அநுவட்டகையாதி 8. மஹாவட்டகை4. ஆக 96 புண்யதினம்) இந்த தொண்ணூற்ரூறு புண்யதினங்களிலும் தென்புலத்தா ரெனப்படும் பிதுர்களுக்கு சிரார்த்தாதி கிருத்தியங்களை முறையோடு செய்யும் தூயமனத்தை யுடையவர்கள்.

சுவாஹாகாரம் சுதாகாரம் வஷட்காரம் மூன்றினும் மிகுந்த மந்திர உச்சாரணத்தால் மிக உயர்ந்தவர்கள் பகல் மத்யானம் சாயந்தரம் வேளைகளில் நித்யகருமங்களை வழுவாது அனுஷ்டித்து வரும் மேலோர்கள் காகங்களுக்கு உணவு கொடுத்து விருந்தினரு டன் இருந்து புஜிப்பவர்கள் சரீரமெங்கும் விபூதி அணிந்து ருத்ரா க்ஷங்களை மேனிமுழுவதிலும் ஆபரணமாகப் பூணும் பெருமை யுடைளவர்கள்.

செய்யுள் 8.

இருக்காலு முக்காலுந் தூயகந்த புட்கரிணி யினிதின் மூழ்கி
மருக்காலு மலரெடுத்துக் குகனையருச் சனைபுரிந்து வணங்கி ஞானச்
செருக்காலுங் களிசிறப்போ ரவர்முகச்செந் தாமரையைத் தியானமாக
வொருக்காலுண் ணினைப்பவரை யிருக்காலு மெடுத்துரைப்ப வலப்பின்றுமால்.

புனிதமான கந்தபுஷ்கரணி தீர்த்தத்தில் வேத கோஷத்துடன் ஸ்நானம் செய்து வாசனையுள்ள புஷ்பங்களால் ஸ்ரீமுருகக் கடவுளை அர்ச்சித்துப் பூசனைசெய்து தொழுது ஞானச் செருக்கினால் களிப்பவர்கள் இத்தனை சிறப்புடைய திரிஸ்வதந்திரர்களின் முகத்தாமரைகளை காலை மாலை இரண்டு வேளைகளிலும் ஒருதரம் மனத்தில் நினைப்பவரின் பெருமையை எடுத்துக்கூற முடியாது.

செய்யுள் 9.

நவையனுகா ட்சுய ராகிக், கால மொரு, மூன்றுமுன, நாடியத்தூய
தவவடிவா குந்திரிசு, தந்திரத்தார், தங்களிடஞ், சாரந்து, சார்ந்தூண்
கவனமெடுத் தருந்திடினு நீர்சிறங்கை யருந்திடினுங் கவற்சி பூண்ட
பவமகன்று மேலாய பரபோக மடைந்தாழின் பகைவெல் வாரால்.

நிர்மலஞானத் தினராய் முக்காலங்களிலும் உள்ள நிகழ்ச்சிகளையுணர்ந்து சுத்த தத்வரூபராகிய திரிஸ்வதந்திரர் களிடத்துப் பலகாலும் அன்னவர்களுக்குப் பணிவிடை செய்து அவர்களுடைய உணவில் ஒரு கவளம் அன்னத்தைப் பெற்று சாப்பிட்டாலும் ஒரு சிறங்கை நீர் உட்கொண்டாலும் இவர்கள் கவலை பொருந்திய பிறவியை நீங்கி மேலான பரசுகத்தை அடைந்து விதியாகிய பகையை வெல்வர்.

செய்யுள் 10.

இத்திரி சுதந்திர ரென்னும் பூசுரர்
வத்திர சததனம் பார்க்கு மான்பினோர்
குத்திரப் பாவவேர் குறைத்து மேலதா
முக்தியெய் தானடி மளரி சேர்வரால்.

இந்த திரிஸ்வதந்திர அந்தணர்களின் முகத்தாமாரைகளைத் தரிசிக்கும் குணமுடையோர் கொடியபாவங்களை ஒழித்து மேலான முக்தியைப்பெற்று சிவபாதாரவிந்தப் பெருமையை அடைவர்.

செய்யுள் 11.

திரிசுதந் திரத்தராய்ச் செல்வ மிக்குள
விருபிறப் பாளருக் கிடுக்கண் செய்துளோர்
வெருவருஞ் சேதக வெல்வழற்பெரு
நரகிடை யளப்பில்பல் கால நண்ணுவார்.

அருள் செல்வமிகுந்த திரிஸ்வதந்திரப் பூசுரர்களுக்குத் தீங்கு செய்தவர்கள் பயங்கரமான சேறும் சுடுதீயும் பொருந்திய பெரிய நரகத்தில் அளவிலா நெடுங்காலம் வீழ்ந்து அநந்துவர்,

செய்யுள் 12.

சந்தனே வந்தனைக் கடவுள் வேதியர்
சிந்தனை நோவுறச் செப்பு வாரவர்
முந்துறச் சீறுவோர் முகங்கண்டுள்ளத்து
நிந்தனை புரிதர நினைக்கு நெஞ்சினர்.

செய்யுள் 13.

அளப்பருங் கொடுநர கழுந்து வார்மதித்
துளத்திடை வணங்குவா ரொளிரும் பூஞ்சத
தளக்கம லாசனத் தளிமச் செஞ்சுடர்
விளக்கருள் பெற்றுவே ளருளு மேவுவார்.

*கனவினிலும் முருகனையே வழிபடும் இத் திரிஸ்வதந்திரர் களின் மனம் வருந்த பேசுபவர்களும அவர் எதிரே கோபிப்பவர் களும் அவர்களின் முகம்கண்டு அகத்தே அவமதி செய்யும் எண் ணும் மனத்தினரும் அளவிடலாகாத கொடுமைகளையுடைய நரகங் களில் வீழ்ந்தும் அழுந்துவார்கள்.

---

*மறந்தும் புறந்தொழா திரிசுதந்திர் எனும் வாக்யத்தை சுப்பிரமணிய பராக்ரமம் என்னும் நூலில் திரிசுதந்திரர் வரலாற் றில்காண்க.

அத் திரிஸ்வதந்திரர்களை மனத்தால் வழிப்படுகிறவர்கள் கமலாசனனாகியப் பொன்மேனிப் பிரமனது அறுளைப் பெற்றும் குமரக் கடவுளுடைய அருளைப் பெற்றும் உய்வார்கள்.

சுகமுனியே,

செய்யுள் 14.

திரிசுதந் திரருளத் தெய்வத் தாமரை
யரதனச் சிங்கவேற் றணையின் வள்ளியுஞ்
சரவணோற் பவனுமா தவச்செ யந்தியம்
புரநிறைந் திருத்தல்போற் புகுந்து வாழ்வாரல்

செய்யுள் 15.

ஆதலாற் பரகதியடைய வேண்டினோர்
தீதிலாத் திரிசுதந் திரரைச் சேவிப்பா
ரேதுதா னஞ்செய வெண்ணி னுலுமவ்
வேதியர் தங்கள்பாற் செய்ய வேண்டுமால்

ஸ்ரீவள்ளி தேவநாயகி சமேத ஸ்ரீமுருகக் கடவுள் திருச்செந்திலில் இனிது வாழ்வது போல் இத் திரிஸ்வதந்திரர்களுடைய மனத்தாமரையிலும் புகுந்து இரத்தின சிங்காதனத்தில் எப்பொழுதும் வீற்றிருந்து அருள் செய்து வாழ்ந்துவருகின்றார்.

ஆகையினால் முக்தியைப் பெற விரும்பினவர்கள் குற்றமற்ற இத் திரிஸ்வதந்திரர்களை வழிபடுவர் எந்த தானத்தைச் செய்ய நினைப்பினும் நினைப்பவர்கள் அத்தானங்களை இத் திரிஸ்வதந்திரத்தார்களுக்கே செய்தல் வேண்டும்.

செய்யுள் 16,

உத்தம தானமே முதல வொண்பொரு
ளெத்தனை தானமென்றாலும் வெற்கரத்
தத்தனுக் குரியவந் தணர்க்குச் செய்குநர்
முத்திபெற் றிருப்பர்நான் மொழிவன் கேட்டியால்.

வேற்படைக் கடவுளுக்குரிய இத் திரிஸ்வதந்திரர்களுக்கு சிறுதொகையை மனமுவந்து கொடுத்தாலும் அது முதன்மையான உத்தம தானமாகும். அப்படி செய்பவர் பெறுத்தற்கரிய பெரும் பேற்றினை யுடையவர்.

சுகமுனியே இன்னும் கூருகிறேன் கேள்

சிவ ஞானத்திலே தெளிந்த இத் திரிஸ்வதந்திரத்தார்களின் மகிமையைக் கூற விரும்பி மனத்தால் நினைப்பினும் அம்மகிமைகள் அளவு கடந்து விளங்குகின்றது. ஸ்ரீகுமரக் கடவுளது அனுக்ரஹத்தினாலே நீ அறியும்படி தெரிந்தவற்றை கூறினேன்.

நான்கு வேதங்களையும் ஆராயும் இரண்டாயிரத்தாரெனும் இத் திரிஸ்வதந்திரர்களுடன் ஒன்றாகிய ஸ்ரீவேலாயுதக் கடவுளுக்குப் ப்ரீதியான கார்த்திகை மாதத்துத் திருக் கிருத்திகையில் சன்னிதி முன்னுள்ள வதனாரம்ப தீர்த்தத்திலே ஸ்நானம் செய்து அன்பின் மனத்தினராய் முருகக் கடவுளை வழிப்பட்டுத் துதிப்பவர்கள் இப்பரந்த உலகத்தின் அரசராகப் பெற்று அறமும் இன்பமும் பெற்று மறுமையில் ஸ்ரீமுருகப் பெருமானது திருவடி நிழலில் சார்ந்து பேரின்பச் செல்வத்துடன் விளங்குவார்.

பன்னிரெண்டு மாதங்களிலும் வரும் கிருத்திகை தினத்தில் சன்னதி சமுத்திரத்திலுள்ள வதனாரம்ப தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து கொடிய விஷத்தைக் கொண்ட பாம்பின் பகையாகிய மயிலை வாகனமாகக் கொண்ட முருகவேளின் பாதாரவிந்தங்களைச் சிரமேற் கொண்டவரது பெருமையைச் சொல்ல முடியுமோ.

தைமாதம் அமாவாஸை கழிந்த முதல்நாள் துடங்கி மாசி மாதம் அமாவாஸை வரை சன்னதி முன்னுள்ள வதனாரம்ப தீர்த்தத்திலே உத்தமமாம் மூன்று தினங்களேனும் மத்திமமாம் இரண்டு தினங்களிலேனும் அதமாம் ஒருதினத்திலேனும் அன்புடன் ஸ்நானம் செய்து முருகவேளுடைய உபய சரணாரவிந்த தரிசன ஆனந்தத்தை நுகர்ந்தவர்கள் தங்களின் முடிவில்லாப் பிறவிக் கடலை நீந்தி முக்தியை அடைவர்.

சித்திரை மாதத்து முப்பது நாள்களிலும் அலைகள் தவள்கின்ற வதனாரம்ப தீர்த்தத்திலே ஸ்நானம் செய்து ஞானஸ்வரூபியாகிய கந்த வேளின் திருவடிக் கமலங்களை வழிப்படும் அடியார்கள் முருகக் கடவுளின் பேரருளாம் முக்தியிற் சேரும் பக்தி மான்களே அன்றி வேறு சொல்ல முடியுமோ.

மாசிமாதத்து முப்பது நாள்களிலும் முன்னதாக கந்த புஷ்கரணி தீர்த்தத்தில் மகிழ்ந்து ஸ்நானம் செய்து வேற்படைக் கடவுளை வணங்குகிறவர்கள் இம்மாநிலத்திலுள்ள மனிதர்கள் யாவர்க்கும் மேலோராகி தம்மை பக்தியோடு காணவரும் அன்பர்களின் பாவங்களைப் போக்கும் பெருமையை அடைவார்கள்.

சித்திரை மாதப்பிறப்பிலும் ஐப்பசி மாதப்பிறப்பிலும் உத்தராயண தக்ஷிணாயண சங்க்ரம புண்யதினங்களிலும் கந்தபுஷ்கரணி வதனாரம்ப தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து குமரக் கடவுளைத் தரிசனம் செய்தவர்கள் தினந்தினமும் வாஜபேய மஹாயாகத்தைச் செய்யும் பலனை அடைகிறார்கள்.

ஒவ்வொரு மாதப்பிறப்பிலும் புண்ணியகாலமறிந்து சன்னதி முன்னுள்ள முகாரம்ப தீர்த்தத்திலும் பொங்கிஎழும் கங்கையாகிய கந்தபுஷ்கரணி தீர்த்தத்திலும் வேதசாஸ்திரப்படி ஸ்நானம் செய்து ஆறுமுகக் கடவுளுக்கு சிறுபயறு செந்நெல்அரிசி நெய்கலந்த அன்ன நிவேதனம் செய்வித்து தரிசித்தவர்கள் நூறுயாகங்கள் செய்துபெறும் உயர்ந்த பலனை அடைகிறார்கள் என சுருதிகள் கோஷிக்கின்றன.

ஆடிமாதத்து முப்பதுநாளும் பசுவின் வெண்தயிறுகலந்த அன்ன நிவேதனத்தை நிவேதித்து அன்புடன் கடப்பமாலையை அணிந்த குமரவேளின் தரிசனம் கண்டவர் வேதங்களும் தேடறியா முருகனது திருவடிகளைப் பெறுவர்.

ஆவணிமாத முப்பதுநாளும் முருகக்கடவுளைப் புனிதமிகும் வேதங்களால் துதிப்பவர்கள் ஓய்வில்லாமல் நூற்றுக்கணக்கான யாகங்களைச் செய்துபெரும் அரியபலனைப் பெற்று குற்றமிலாத பரகதியும் எய்துவார் இது நிச்சயம்.

ஆறுமுகக்கடவுள் நிலையாகவுள்ள இச்செயந்தீபுரத்திலிருந்து புரட்டாசி மாதத்தில் மஹாளய சிரார்த்தத்தை அன்புடன் செய்ப வாது , பிதுர்க்கள் பிதிர் லோகத்திலிருந்து விடுபட்டு பிரம்மலோகம் சென்று பிரம்மனுடன்வீற்றிருப்பர்.

ஐப்பசிமாதத்தில் கந்தபுஷ்கரணி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து வேலாயுதக் கடவுளைப்பணிந்து துதிப்பவர்களுக்கு பிறவி கள் கிடையாது என வேதங்கள் சாற்றுகின்றன.

மார்கழி மாதத்திலே குமரக்கடவுளுக்குத் தயிரன்னம் நிவேத னம் செய்து அவருடைய திருவடிகளை உறுதித்துணையென்று துதிப்பவர்கள் விஷ்ணு லோகத்திலே பரிவாரங்கள் சூழ இனிது வாழ்ந்திருப்பர்.

தைமாதம் முப்பதுநாளிலும் இரத்தினங்களினாலும் பொன்னா லும் சந்தனத்தினாலும் ஸ்ரீ முருகக்கடவுளை அலங்கரித்து சாம்பி ராணி தூபம் செய்வித்து வணங்குபவர்கள் நினைக்கொணாத் தகுதி வாய்ந்த சிவலோகத்திலே தம் குலத்தாருடன் சேர்ந்து இன்புற்றி ருப்பர். திருச்செந்தூர்க் குமரக்கடவுளது திருவிழாக்களை செவ் வனே நடத்துகிறவர்கள் தாம் எடுக்கும் பிறவிகள் எல்லாவற்றி லும் பேரரசனாகப் பிறந்து பெரும் போகம் அனுபவித்து கடைசி யில் குமரபெருமானுடைய திருவடி நிழலைப் பெறுவர்.

கார்த்திகை மாதம் முப்பதுநாளிலும் குமரக்கடவுள் சந்நதி யிலே உள்ளன்புடன் பசுவின் நெய்யால் தீபம் எற்றினவர்கள் உலக இன்பங்களை எல்லாம் குறைவில்லாமல் பெற்று நெடுநாள் இன்புற அனுபவித்துப் பின் முருகனுடைய பாதாரவிந்தப் பெரு மையை அடைவர். கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நக்ஷத்திரத் திற் கந்தக்கடவுளின் திருமுகச்சோதியைப் பாராதவர்கள் செறிந்த நரகங்களில் அட்டைகள் பொருந்திய படுகுழியில் வீழ்ந்து வருந் துவர்.

கார்த்திகை மாதத்துக் திருக் கார்த்திகை தினத்தில் நெல்லி இலைகளால் கந்தக்கடவுளை அர்ச்சித்தவர்களும் பூசைக்கு உதவினர்

களும் அப்படி அர்ச்சித்த நெல்லிப்பத்திரம் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு யாகம் செய்த பலனைப் பெறுவர் என நான்மறை பகருகிறது.

சுகமுனியே

இவ்வத்யாயத்தில் சொல்லப்பட்ட திரிஸ்வதந்திரர்களின் உண்மையான சிறப்பையும் ஒவ்வொரு மாதங்களுக்குரிய பூஜையின் விதிகளையும் கருத்து ஒருமித்தவராகக் கேழ்ப்பவர்கள் ஆண்டவன் சந்நிதியிலுள்ள வதனாரம்ப தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பெற்றவாது பலனை அடைகிறார்கள் என வியாசபகவான் சுகமுனிவனுக்குக் கூறியருளினதைச் சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்குச் கூறியருளினர்.

11-வது அத்யாயம்.
மாத பூஜை விதியுரைத்தது முற்றிற்று.

---

## 12-வது விபூதி அத்யாயம்

நைமிசாரண்யவாசிகளே

வேத முழுவதையும் முற்றுணர்ந்த சுகமுனிவனைப் பார்த்து வேதம் நான்கென வகுத்த வியாசபகவான் கூறுகிறார்.
சுகமுனிவனே

நான் உனக்கு இப்பொழுது சொல்லுகின்ற வைபவமானது சர்வலோக நாயகனாகிய செந்திலாண்டவனது விபூதி அத்யாயம். இச்சரிதை உள்ளங்கை நெல்லிக்கனி போல உனக்கு விளங்கும்.

செய்யுள் 2.

கொடிய சூரற வறமறை விண்ணகங் குடிபுக விகல் காட்டு
நெடிய வேலெடுத் தமர்த்தொழின் முடித்து மா னின்னிடை வருந்தேனைக்
கடிமணம்புரிந் தாறுமா முகத்தவன் கடவுளர் பலர்சூழ
வடிய ராந்திரி சுதந்திரர் தம்மொடு மாலயத்தினிதுற்றான்.

ஒளி பொருந்திய வேலாயுதத்தை எடுத்து கொடிய வஞ்சக சூரனுதியர் அழிய போர்த் தொழில் முடித்துத் தேவர்களை அவரவர் நகரங்களில் குடியேற்றிய முருகக் கடவுள் திருச் செந்திபுரம் வந்தபின் பிரம்ம விஷ்ணு இந்திராதி தேவர்கள் சூழ மான் புதல்வியாகிய வள்ளியம்மை யாரைக் கல்யாணம் செய்து வள்ளி தெய்வானை சமேதராக சமுத்திரக்கரை திருக் கோயிலிற் கொலு மண்டபத்தில் இனிது அமர்ந்திருக்கும் சமயம் தோள்வலி மிக்க வீரபாகுதேவர் ஸ்ரீகுமரக் கடவுளுடைய திருவடிகளை வணங்கி எழுந்து கை கட்டிவாய்புதைத்து நின்று ஞானசமுத்திரமே குருநாதரே நான்கு வேதங்களாலும் அறியப்படாதவரே வேற்படை நாயகரே, ஹரி பிரமரால் வணங்கி துதிக்கப்படுகின்ற சிவஸ்வரூபமே, நினது திருவடிவம். அனைத்துலகிற்கும் விபூதியாக நின்று ஒளிரும் காக்ஷியைக கண்டு பூஜிக்க விருப்பமுடையவனுக இருக்கிறேன், அருள்புரியவேண்டுமெனப் பிரார்த்தித்த வீரவாகுவை முருகக் கடவுள் திருக்கண்நோக்கி வீரவாகுவே உனக்கு நமது விபூதியின் அளவைக்கூற எண்ணினேம். நாம் எண்ணும் சமயம் நீயும் அதனை பிரார்த்தித்ததனை சந்தோஷம் கூறுகிறேம் கேள் என முருகக் கடவுள் கூறுகிறுர்.

அழகிய அகன்றஇடமாகிய இப்பூலோகமுதல் எல்லா அண்டங்களுமாக விளங்குவது நானே. முத்தொழில் செய்கைகளும் நான் சிருஷ்ட்டி செய்யும் தசப் பிரமர்களில் நான் முகப்பிரமனும் நான். உலகங்களுள் புகழப்படும் சுவர்க்கமும் நான். ஒன்பது கண்டங்களும் நான். அதில் பரதகண்டமும் நான். மஹாமேருவும் நான். தேவ ராஜனுன இந்திரனும் நான். அறிவுமயமான வியாழனும் தேர் வல்லவர்களில் மாதலி நான். தேவர்களுக்குள்ளே புதிய அழகிய புட்பகமெனும் பொற்றேரும் நான். தேவமாதர்களில் புகழப்படும் ஊர்வசி நான். தேவலோகத்தில் கானவித்தையில் சிறந்த கந்தர்வரும் நான். உலகங்களுள் பிரகாசம் பொருந்திய சிவலோகம் நான். குற்றங்களை ஒழிக்கும் நூல்களில் மனத்தபல் வாக்கால் எட்டமுடியாத ஆதிவேதமும் நான். அருள் நிறைந்த வேதங்களின் தொனிகள் நான்கினில் அளவிலா சிறப்பினை யுடைய பிரசயம் எனும் சப்தமும் நான். அக்ஷரங்களில் ஓங்கார

மெனும் பிரணவமும் நான். ரிஷிகளின் அகத்தியர் நான். யோகி களில் தத்தாத்ரேயனும் நான். சிவபெருமானது திருவடிகளையே பணியும் பக்தர்களில் திருப்பாக்கடலில் ஆதிசேஷ சயனனாக விளங் கும் மஹாவிஷ்ணுவும் நான். புண்யரூபமான காசி க்ஷேத்திரமும் நான். ஏழுமலைகளில் வானளாவி நிற்கும் இமயமலையும் நான் எண்ணுதற்கரிய படைப்பினால் பிரமனும் நான். எல்லா உயிர்களை யும் காத்தலினால் விஷ்ணுவும் நான். சங்காரத் தொழிலில் காலாக் னி ருத்ரனும் நான். வலிய செயலால் வெல்ல முடியாத இமயனும் நான். தெற்கு முகம் நோக்கி ஆசார்ய வடிவத்துடன் இருக்கும் தெக்ஷிணாமூர்த்தியும் நான். சொல்லுவதற்கரிய தெய்வமாதர்களில் பார்வதீ லெக்ஷிமி சரஸ்வதி இவர்கள் எல்லாம் நான். மாதங்களில் ஆவணி மாதம் நான். பிரம்ம ரிஷிகளில் அளவின்றி உயர்ந்த வசிஷ்டரும் நான். தேவ ரிஷிகளில் நாரதர் நான். ஆதிசேஷ னோடு பூமியைத் தாங்கும் அஷ்டதிக் கஜங்களில் வலிமிக்க சார்வ பௌமமாகிய யானையும் நான். பசுக்களில் காமதேனு நான். பரியல் ஏழுநாமப் பெரும்பரி நான். மிருகங்களில சிங்கம் நான். பக்ஷிகளுள் வலினம் பொருந்திய சர்பமும் நான். ஏகாதசருத்திரரிற் சிறந்த சங்கரனும் நான். பாதாளத்தில் உள்ள சர்ப்பங்களில் ஆயி ரம் தலை ஆதிசேஷனும் நான். ஆசை உண்டாக்கும் தடாகங்களுள் மானச தடாகமும் நான். மந்திரங்களில் சிறந்த காயத்ரீ மந்திரமும் நான். மரங்களில் அரசமரமும் நான். சுத்தம் செய்வாரில் ஆண் தன்மையிற் சிறந்த வாயு நான். வானர சிரேஷ்டரில் வலிமை யையுடைய அனுமானும் நான். போரிற் சிறந்த சிலைவலியுடைய ராமன் நான். மற்போரில் சிறப்புப் பொருந்திய வீரர்களுள் கார்த்த வீரியன் நான். அறநெறியில் சத்தியம் நான். யாகங்களில் அசுவ மேத யாகம் நான். வடுவில்லாத கற்புடைய மாதர்களில் பார்வதி நான். வியக்கப்படும் பல பொருள்களில் மேலான தங்கமும் நான். வந்திக்கத் தகுந்த பெண்மணிகளில் தாய் நான். சிறந்த தானங்க ளில் அபயதானம் நான். யதுகுலத்துக்குக் கண்ணன் நான். வாக்கு பிறழாதவர்களில் அரிச்சந்திரன் நான். நதிகளில் தசகங்கை நான் சமுத்திரங்களில் திருபாற்கடல் நான். ஆகாயத்தில் விளங்குகின்ற நக்ஷத்திரக் கூட்டங்களில் சந்திரன் நான். ருதுக்கள் ஆறில் வசந்த ருது நான். மகளிரை மயக்கும் புருஷரில் மன்மதனும் நான். பெரிய

தவத்தில் பிராணயாமம் நான். நவரத்தினங்களில் கடலில் தோன்றும் வெண்முத்து நான். ஆடைகளில் பீதாம்பரம் நான். பிதுர்க்களில் அரியமா என்பவன் நான். நான்கு வருணத்தாரில் அந்தணன் நான். ஆஸ்ரமங்கள் நான்கில் சந்யாசம் நான். வனங்களில் சயித்ர வனமும் நான். ஆகாயத்து ஜோதிகளில் கிரணங்களை வீசுகின்ற சூரியனும் நான். வித்தைகளில் மெஞ்ஞான வித்தை நான். இந்திரியங்களுக்கு ஹேதுவாகிய இருதயம் நான். மன்னர்களின் புருகூதன் நான். செல்வர்களில் குபேரன் நான். தீர்த்தங்களில் மணிகர்ணிகை நான். ஒளியையுடைய உயர்ந்த பொருள்களுள் அளவிறந்த மலைகளும் நான். பாபங்களை அழிக்கின்ற சேதுவும் நான். தயவில் தாய் நான். சூரிய குலத்தோரில் வீரமுள்ள ராமனும் நான். சந்திர குலத்தவரில் தருமன் நான். தண்டனையில் எமதண்டனை நான். அவஸ்த்தைகளில் யௌவனம் நான். பூஜைகளில் மானஸ பூஜை நான். படங்களையுடைய பாம்புகளின் வாசுகி நான். சுவை ஆறில் உப்பு நான். செந்தீக்களில் குற்றமற்ற உதராக்கனியும் நான் முதிய காவியங்களில் ராமாயணமும் நான். தர்ம சாஸ்திரங்களில் மனுசாஸ்திரம் நான். ஞானக் கதைகளில் கீதை நான். கவிகளில் வியாசன் நான். இன்னும் கண்ணுக்குப்புலப்படும் அழகான பொருள்கள் அனைத்தும் நானே, உள்ளத்தில் தெரிந்து மனதில் தியானித்து வேதமுறையால் ஆராய்ந்து குற்றமிலா உன் பூஜையை நீ செய் என்றருளினர்.

பிரமனைச் சிரசிற்குட்டியவராகிய பன்னிரு புயாசலக் கடவுள் இத்தகைய விபூதித்திறமையைக் கூறியருளி இருக்க கணுதிபதித்வமாகிய வித்தகத் தன்மையுடைய வீரபாகு கேட்டுத் தேர்ந்து அதிசயித்தார்.

சுகமுனியே உன்மனம் உட்கொள்ளுமாறு இச் சரித்திராமிருதமாகிய விருந்தைத் தந்தேன் என வியாசர் சுகருக்கு கூறியருளினதை சூதகர் நைமிசார்யணய வாசிகளுக்குக் கூறியருளினர்.

12-வது விபூதி அத்யாயம் முற்றிற்று.

---

# பதிமூனாவது விஸ்வரூப அத்தியாயம்

நைமிசாரண்யவாசிகளே,

வீரவாகுதேவர் முருகக் கடவுளுடைய பாதாரவிந்தங்களை அடிமுடிபட வணங்கி எழுந்து உச்சிகூப்பியகையினராய் எந்தையே பலகோடி உயிர்களுக்கும் நாயகரே, நான்கு வேதநாதரே, சுயம்பு குமாரரே, மயூரவாகனரே, பிரணவ வடிவமே என்று பல பல துதித்து சுவாமீ தங்களது பாதாரவிந்தத்தின் அடிமையாகிய தமியேன் தாங்கள் அன்பினால் கூறியருளின வீபூதியியல்பின் நன்மையினால் புனிதத்தன்மையடைந்தேன். ஆண்டவனே தமியேன் பிரார்த்திக்கும் செய்தி ஒன்றுள்ளது அதனை கூறுகிறேன்.

சேதநாசேதனப் பிரபஞ்சங்களையெல்லாம் தன்னுள் அடக்கிய ஒருவர் நீரே யன்றி வேறாய அரும்பெரும் பொருளென எடுத்துரைக்கும் வண்ணம் ஒன்றுமேயில்லை. குமாரவடிவாயுள்ள தங்களது திருமேனியில் பொதிந்த பொலிவு எப்பொருளும் தன்னிடத்தே தோன்று தலையுடைய மிகப்பெரிய திருவுருவமாய்ப் பரந்த விஸ்வரூப காக்ஷியாகத் தரிசிக்க சிறியேன் ஆசைப்படுகிறேன். அடியவனாகிய என்மேல் கருணைவைத்து அடியேனுக்கு தங்களுடைய விஸ்வரூப தரிசனத்தைக்காட்டி யருளவேண்டுமெனப் பணிந்து நின்ற வீரவாகுவை முருகன் அன்புடன் நோக்கி அருளோடு கூறுகின்றார்.

செய்யுள் 5ம்.

இருடிகட் கரிதுவா னிமையவர்க் கரிது நூற்
சுருதிகட் கரிதுமெய்த் தொண்டருக் கரிது சொற்
கருதுகற் கரிதுளங் காண்பதற் கரிது மாம்
பொருவிலற் புதமொடும் போற்றுநந் தோற்றமே.

வீரவாகுவே ஒப்பில்லாத அதிசயத்துடன் மனப்பக்குவமுற்ற ரிஷிகளால் துதிக்கப்படும் நமது திருவடிவமானது முனிவர்களுக்கும் ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் வேதங்களுக்கும் சுருதி

நூல்களுக்கும் மெய்த்தொண்டர்களுக்கும் சொல்லுதற்கும் மனத்தால் நினைப்பதற்கும் காண்பதற்கும் அறிதானது.

வீரவாளைக் கையில் ஏந்திய வீரவாகுவே நமது விஸ்வரூபமானது ஊனக்கண்களுக்குப் புலப்படாது. உன்னால் காணமுடியாது என்றாலும் நாம் உனக்கு ஞானக்கண் தருகிறோம் நீ அந்த ஞானக் கண்ணினால் காணுதி என ஞானக்கண்ணையும் அருளி ஆறுமுகக் கடவுள் நிலை பெற்ற பெரிய அண்டங்களுமாய் அந்த அண்டங்கள் தோறும் வீற்றிருப்பவர்களது தோற்றங்களுமாய் தேவர்களும் முனிவர்களுமாய் நான் மறைகளும் இனிய பயன்களுமாய் சர்வ சராசரங்களையும் தன்னுள் கொண்ட விஸ்வரூபத்துடன் நின்றருளினார்.

கருணை நிறைந்த முருகக் கடவுளின் விஸ்வரூபத்தை அவனருளால் பெற்ற ஞானக்கண்ணினால் கண்ட வீரவாகு இருகரங்களையும் சிரமேற்குவித்து இருகண்வழியால் ஆனந்தக் கண்ணீர் சொரிய வாய்குழறி உரைதடுமாற மனமிகுந்த மகிழ்ச்சியுடன் பிரார்த்திக்கிறார்.

சுரத்திரளை ஈடேறவைத்த பெருமானே சுவாமீ உமது விஸ்வரூபத்திலே அளவிறந்த தேவர்களையும் ஏகாதசருத்ரர்களையும் காண்கிறேன். தசப்பிரமர்களையும் துவாதசஆதித்யர்களையும் காண்கிறேன். எட்டு பெரிய மலைகளையும் பொன்மஹாமேரு மலையையும் அதனைச் சூழ்ந்த எல்லா மலைகளையும் கங்கை முதல் கோடிகணக்கான தெய்வ நதிகளையும் நல்வாழ்வையே தருகின்ற கைலாச மலையையும் அக் கைலாசத்தில் சிவபெருமான் திருநடனஞ் செய்து நடராஜராகக் காக்ஷியளிக்கும் திருக் கோலத்தையும் கண்டு மகிழ்கிறேன்.

திருப்பாற் கடலில் ஆதிசேஷன்மேல் படுத்துறங்கும் நாராயணனை அந்த நாராயணன் உந்தி கமலத்தெழுந்த பிரமனோடும் சக்கரப்படையோடும் பூமகளோடும் பொலிந்து நின்ற திருவுருவத்தையும் கண்டுகளிக்கின்றேன்.

யோகியர்களின் சிறந்த கபிலனையும் மற்றும் ஏனையமாதவர்களையும் நான்கு வேதங்களைத் தெரிந்த வசிஷ்ட்டர் முதலிய ரிஷிகளையும் தமியேன் காண்கிறேன். மனுநீதியில் உயர்ந்த அரசர்களையும் இனியது நிறைந்த சிற்றாறுகளையும் மலைமுதல் கடல்வரையுள்ள தேவாலயங்கள் யாவற்றையும் நவகண்டங்களையும் அங்குள்ள சோலைகளையும் சமர்க்களத்தில் புறமுது காட்டியோடாது தீரத்துடன் யுத்தம் புரியும்வீரர்கள் முடிவாகவாழும் வீரசொர்க்க லோகத்தையும் காண்கிறேன்.

சுவாமீ உமது திருமேனி முழுவதும் இரத்தினங்களால் இழைந்த ஒளிமிக்க ஆபரணங்களாலும் சூரியனுக்கு அழகு கொடுதது விளங்கும் பீத்தாம்பரங்களினாலும் திருச் செவியிலுள்ள குண்டலங்களிலிருந்து புறப்படுகிற ஆயிரக்கோடி சூரியர்களின் ஒளியினாலும் பொருந்திப் பிரகாசிக்கும் தன்மையை சித்தரிக்க முடியாதனவாகக் காண்கிறேன்.

வேதமுதல்வனே

அனேக மன்மதன்களின் திருவுருவையும் அனேகோடி சூரியர்களின் பிரகாசத்தையும் அனேககோடி சந்திரர்களின் ஒளியையும் சோமன் சூரியன் அக்னி முதலானவர்களை மூன்று கண்களாக உள்ளத்தையும் காண்கிறேன்.

ஆண்டவனே கோடிக்கணக்கான அண்டங்களை யெல்லாம் உனது திருமேனியிலுள்ள உரோமத்தில் கோத்தமணிகள்போலக் காண்கிறேன். உமது கமலமுகமும் மிக்க பயங்கரமாகத் தெரிகிறது உமது திருவாயிலிருந்து வருகின்ற இனிய ஓசையில் பேரிடி ஓசையும் கேழ்க்கின்றது.

ஆதிமத்யாந்தம்மிலா திருவடிவே

சூலம் வாள் தண்டு வில் தோமரம் வேல் எழு சக்கரம் முதலிய கொடியப்படைகளையும் நின் திருக்கரத்தில் காண்கிறேன்.

கணக்கற்ற திருமுகங்களையும் அளவிலா செவிகளையும் அளவிலாத கண்களையுடைய எண்ணிறந்த நாசிகளையும் எண்ண முடியாது உயர்ந்து நீண்ட கைகளையும் உடைத்தான உமது பேருருவத்தைக் காண்கிறேன். இந்த பெரிய உருவத்தை வேதங்கள் எப்படித் தெரியமுடியும்.

ஐயனே உமது திருமுக கமலங்களில் திருவாயுலுள்ள பற்களினின்று அக்னிப்பொறிகள் எழ சட சட வென்றுதோன்றும் ஓசைகளால் சகல அண்டங்களும் நடுங்குகின்றன தமியேன் மனம் கலங்கிப் பயப்டுகின்றேன் பயப்படுகின்றேன்.

சுவாமீ தாங்கள் கொண்ட இப்பேருருவானது மிக்க பயங்கரம் கொண்டதாயிருப்பதால் சிறியேன் சிறப்பாகப் பார்ப்பதற்குப் பயப்படுகிறேன். தாங்கள் எந்த இயல்பை உடையவர்கள் என்று வீரவாகு பிரார்த்திக்கவும் முருகவேள் மனமகிழ்ந்து அவ்வீரவாகு நன்கு தெரியும்படி சொல்லி யருளுகிறார்.
வீரவாகுவே

இவ்வுலகமனைத்தையும் கொண்டது இவ்வடிவம். ஐந்தொழிற்கும் உரிய சிருஷ்ட்டி. திதி சங்காரம் எனப்படும் முத்தொழிலுக்குறிய மூன்று வடிவங்களும் பொருந்தியது இவ்வடிவம். ஒப்பிலா ஈசன் ஒருவன் யென உள்ளது இவ்வடிவம் ஞான ஸ்ரூபமாக உடையது நம் வடிவம். இதை நீ தெரிந்து கொள் என ஆறுமுகக் கடவுள் அருளின மொழி கேட்டு வீரவாகு ஐயனின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி சேவடி துதித்து நாக்குழறி கூறுகின்றார்.

கின்னரர்களும் இயக்கர்களும் பாடவும் அரம்மையர்கள் சூழ்ந்து ஆடவும் முனிவரும் சித்தரும் மற்றையவரும் வச்சிராயுதப் படையோன் இந்திரனும் உள்ளம் நடுக்கி நிற்பதைக் காண்கிறேன். உமது திருக கோலத்தைப் பார்க்க மனம் பயப்படுகிறது தோத்திரம் செய்கிறேன் காத்துக் கொள்ள வேண்டும்.

சொல்லால் துதிக்கவும் நாக்கு உள்வாங்குகிறது. தியானத்தால் மதிக்கவும் நெஞ்சம் கலங்குகிறது உரையும் தடுமாறுகிறது

சுவாமீ, சர்வக்ஞதை எனும் முற்றிரவு திருப்தி எனும் வரம்பிலின்பம் அநாதி போதமெனும் இயற்கை உணர்வு ஸ்வதந்திரம் மெனும் சுதந்திரமுடைமை நித்யமெனும் அழிவிலாற்றல் அலுப்தசக்தி யெனும் வரம்பிலாற்றல் முதலிய ஆறுகுணமே ஆறுவதனங்களுடன் தோன்றி அருளிய வேற்படைக் கடவுளே நின் சரணத்தைத் துதிக்கிறேன் காத்தருள வேண்டும்.

பிரபஞ்சம் அனைத்துமாகிய பிரபஞ்சத் தன்மையில் நீங்கிய பதியாகி வழிபடுவோர் மனங்களில் கலந்த அருளாகி விளங்கும் உமது திருவுருவத்தின் தோற்றம் என்னைக்காத்துக் கொள்ள வேண்டும்.

கடப்பமாலையை அணிந்த மயில் வாஹனக் கடவுளே! கிருபா சமுத்திரமே! காணமுடியாத அளவிறந்த அண்டங்களை யெல்லாம் ஒருங்கு கொண்ட இப்பெரிய விஸ்வரூபத்தைச் சுருக்கி உமது பழய அழகிய வடிவத்தைக் காட்டியருள வேண்டுமெனப் பிரார்த்திக்கும் வீரவாகு முன்னிலையில் அப்பெரிய விஸ்வரூபத்தை நீக்கி பன்னிருகோடி சூரியர்கள் போற்பிரகாசிக்கும் ஆறுதிருமுகங்களோடும் பன்னிரு விழிகளோடும் இரத்தின குண்டலங்களை யணிந்த பன்னிரு செவிகளோடும் அன்றலர்ந்த செந்தாமறை போன்ற இருசரணாரவிந்தத்துடன் அழகிய திருக்கோலமாக காக்ஷியளித்துத் தோன்றிய முருகக் கடவுளைக் கண்ணாரக்கண்டு தரிசித்து தாளில் வீழ்ந்து வணங்கினார்.

அவ்வாறு வணங்குகிற வீரவாகுவை முருகப்பெருமான் தன்னுடைய கரங்களால் எடுத்து அருள்சுரந்து கூறுகிறார். வீரவாகுவே நீ அஞ்ச வேண்டாம் நாம் ஒன்று சொல்லுகின்றோம் கேள் பிரமதேவனும் சனகராதியோரும் நந்தி தேவனும் பிருங்கி முதலான வலிமை பொருந்திய கூட்டத்தார்களும் மனதை அடக்கி தவம் செய்து கண்களுக்கு அடங்காத இந்த விஸ்வரூத்தைத் தரிசிக்க முயன்றார்கள். நாம் அவர்களை நோக்கி இந்த விஸ்வரூப கோலத்தை இனிவரும் யுகாதியில் சூரபத்மனை வேற்படையால் சங்கரித்துக் காத்த கந்தமாதனப் பொற்கோயிலில் வீற்றிருக்கும்

போது எமது சேனைத்தலைவனும் வீரவாகுவுக்கு காட்டியருளு வோம். அது சமயம் நீங்களும் கண்டுய்யுங்கள் என்று ஆஞ்ஞை செய்தோம். அந்த ஆஞ்ஞைப்படியே இப்பொழுது உனக்கு இந்த விஸ்வரூப தரிசனம் காட்டினேம். நீயும் வழிப்பட்டு நிகரிலா மகிழ்ச்சியடைந்தாய். உன் மனமும் சுத்தி அடைந்தது மூவுலகத் தாரில் முதன்மையாக விளங்குவாய்.

செய்யுள் 36.

ஆதலி னெழுதிதோரா று மற்புதத் தழுத்தி வேத
நீதியான் மெய்த்தியான நெஞ்சகத் தடக்கி நம்பே
ரோதுதி நமது பொற்று ளூற்றிளோர் தம்தமக் காத்துக்
காதலா லவர்தமுள்ளக் கருத்தவா முடித்தியப்பால்.

ஆதலினுல் சடாக்ஷரங்களை மனதில் அற்புத முறப்பதித்து வேதமுறைப்படி அமைந்த திருவுருவத்தைத் தியானஞ் செய்து நமது நாமத்தைச் சொல்லுக. நமது திருவடிகளையே வழிபடுபவர் களைப் பரிபாலித்து அவர் உள்ளத்தில் கருதிய இஷ்ட்ட சித்தி களை மனப்பூர்வமாக அனுக்ரஹம் செய்து கொடு. அப்பால் பிரமகற் பத்தின் முடிவில் ஸ்கந்தசாயுஜ்ய ஸவரூபத்தை யடைவாய் என சிவத்தின் நெற்றிக் கண்ணினின்றும் தோன்றிய குமரக்கடவுள் ஆஞ்ஞை செய்ய வீரவாகுவும் குமரக் கடவுளுடைய விபூதியையும் கேட்டு மேலான விஸ்வரூபத்தையும் கண்டு தியானத்துடன் அக யோகத்தமர்ந்து அதிசய ஆனந்தத்தில் மூழ்கினர்.

இத்தகைய சிறப்புப் பொருந்திய சரிதையை கேட்டவர்களும் படித்தவர்களும் எழுதினவர்களும் பூசை செய்தவர்களும் பெறற் கரிய பேற்றை எல்லாம் பெறறும் முருகப் பெருமானுடைய அனுக்ரஹத்தைப் பெற்றும் அதனுல் பிறவியாகிய வேரை யறுத் தும் நீங்கா நிறை செல்வத்தைப் பெற்றும் வேண்டிய புதல்வர்களை யும் புதல்விகளையும் பெற்றும் வாழ்ந்து வருவதுடன் அவர்களை வஞ்சனை பில்லி சூனியம் நோய் அவமிருத்யு முதலிய கொடிய நோய்களும் அண்டாது இந்தச் சரிதையை என் சந்நிதானத்தில் பாராயணம் செய்பவர்கள் நினைத்தவற்றை யெல்லாம் பெறும்படி

யான சித்தியைப்பெறுவர். என குமரக்கடவுள் திருவருள்புரிந்துள்ளார் என வியாசர் சுகமுனிக்கு கூறியருளினதை சூதர்நைமிசாரண்ய வாசிகளுக்குக் கூறியருளி உங்களுக்கு இன்னும் பெரிய சரித்திரங்களை அறிவிப்போம் என மொழிந்தார்.

13 வது விஸ்வரூப அத்யாயம் முற்றிற்று.

---

## 14-வது சுவாமியின் மந்திரமகிமை யுரைத்த அத்யாயம்.

நைமிசாரண்ய வாசிகளே

வியாச பகவான் சுகமுனிவரைப் பார்த்து நூல்களைக் கற்றறிந்த சுகமுனியே மஹாமாயை முதலிய பாசங்களை ஒழித்து நல்லறிவை யருளும் ஒரு சரித்திரம் உள்ளது அதனைக் கூறுகிறோம் கேள் என்றுரைத்துப் பின்னும் சொல்லுகிறார்.

குமரக் கடவுள் கொண்ட நினைத்தற்கரிதான இந்த விஸ்வரூபமானது சகல அண்ட கூடங்களில் வியாபிக்க அதனைக் கண்டு வீரவாகு அன்புடன் தொழுது நிற்கும் பொழுது தேவர்களும் முருகக் கடவுளின் அருளினல் அதை தரிசித்து வணங்கிச் சென்றனர்.

அவ்விதம் தரிசித்துத் தொழுது சந்தோஷித்த பெரிய முனிவர்களில் சிரேஷ்ட்டராகிய நாரத முனிவர் நீங்கா பேரன்புடையவராகி முருகக் கடவுள் திருக்கோலத்தை நின்று வணங்கி கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் அருவி நீர் போல் பாய உரோமங்கள் சிலிர்ப்ப தோத்திரம் செய்து ஆனந்தமும் அறிவும் பெற்றுக் களிப்பென்னும் கடலில் மூழ்கி கையில் வீணையுடன் குளிர்ச்சி பொருந்திய துளசிமாலையை அணிந்த மஹாவிஷ்ணு வீற்றிருக்கும் வைகுண்டத்தை யடைந்து திருக்கோயிலிற் சென்று பளிங்கு கற்களால் அமைந்த ஆயிரங்கால்களையுடைய மண்டபத்திலே ஸ்ரீ சேஷசயனத்திலே ஸ்ரீதேவி பூதேவி இவர்கள் இருபங்கிலும் விளங்க சுனந்தனன் விஸ்வக்ஸேனர் முதலியவர்களும் தேவர்களும் கந்

கை முதலிய நதிகளும் கர்ப்பகத்தரு காமதேனு அமரகளிர் வசுக்கள் அநுசந்தர் முதலிய எல்லோரும் வாயாரத் துதித்து அவர்களுக்கு அனுக்ரஹம் செய்து கொண்டிருக்கும் சமயம் மஹாவிஷ்ணு முன்னிலையில் நாரதர் வந்து வணங்கவும் வணங்கிய நாரதனை அன்புடன் மஹாவிஷ்ணு நோக்கி புன்முறுவல் செய்து நாரதரை பொன் ரத்தினம் இவைகளால் இழைக்கப்பட்ட ரத்தின ஆசனத்தில் அமரச்செய்து முகமன் கூறி அர்க்யங்கள் கொடுத்து உபசரித்து நாரதரைப் பார்த்து நாரதரே நீர் இங்கு வந்த காரணமும் நீர் விரும்பிய பொருளையும் உரைத்திடுக என்று திருவாய் மலர்ந்தருள நாரதர் மனமகிழ்ந்து சொல்லுகிறார்.

செய்யுள் 9.

கொற்றவம் புயவீர வாகுவுக் காகதே கொண்டவா னந்த வடிவஞ்
செற்றமின் றுயர்முனிவர் கந்திருவர் விண்ணவர் கடிரி சுதந்திரர்
களுடனே
யுற்றுநின் றெழுவடிவு கண்டுகண் டுள்ளத் துவப்படங் காமையாலே
மற்றநின் பாதத் துரைப்பான் பொருட்டிலிவண் வந்தனனெனப்பு
கலுவான்.

செய்யுள் 10.

பாரதப்போறிற் றனஞ்சயற் காவநீ பரித்த வடிவுகண்டேன்
சூருடைத் தண்டகா ரணியத்தின் மாதவன் றேழற்கு நன்கு
வாய்ந்த
மேருவிற் சங்கரன் காட்டுந் திருக்கோல மேவரக்கண்டு தொழுதே
னுமருவிற் சுறவெதிரு காச்சிரம மதனிலே யரியநர நாரணர்களாம்.

செய்யுள் 11.

இருவோர் தமக்கு மொரி காலாக் கினிக்கடவு ளின்பத் தெடு
வடிவும்
பிரியாது கண்டுகண்டுள்ளங் களித்தனன் பிரமன் றெழிற் கூடவும்
பரமே சுரக்கடவுண் மேருமால் வரையினிடை பண்டுகொள்ளவடிவு
மொருவாது நின்றுகண்டுள்ளங் களித்தன னுரைக்கடங்காககுமான்

உமாகுமாரான ஸ்ரீ முருகக் கடவுள் பற்பல மாயையினாலும் மாமரமாகத் தோன்றிப்போர் செய்த சூரனைச் சம்ஹாரம் செய்து ஸ்ரீ வல்லி தேவநாயகி சமேதராகப் பரதக்கண்டத்திலே தென்றிசையிலே ஜீவநதியான தாம்பிரவருணி நதிக்குத் தெற்கே முத்தமிழோடும் மற்றும் ஏனைய வளங்களெல்லாம் பொருந்தியும் கந்த மாதனச் சிகரத்தின் அமைந்ததுமான திருச்செயந்திபுரத்தில் தேவர்கள் முனிவர்கள் துதிக்க வீற்றிருக்கும் சமயம் ஸ்ரீ வீரவாகு தேவரின் பிரார்த்தனைக்கு அருள்செய்து வீரவாகு தேவருக்கு ஆனந்த விஸ்வரூப தரிசனம் காட்டியருளின சமயத்தில் முனிவர் கந்தருவர் தேவர்கள் மற்றும் யாவர்களும் திரிஸ்வதந்திரர்களுடனிருந்து அந்த விஸ்வரூபத்தைத் தரிசித்தனர். அது சமயம் நானும் அவர்களுடனிருந்து தரிசித்தேன். அதில் கண்ட ஆனந்தத்தை அச்சுதரே உமது சமுகத்தில் தெரிவிக்கவே இங்கு வந்து உம்மை தரிசித்துத் தொழுகின்றேன் கேட்டருள்வீர் என நாரதர் உரைத்திடவும் மஹாவிஷ்ணுவும் மகிழ்ந்து நாரதரைச் சொல்லும்படி புகல நாரதரும் சொல்லுகின்றார்.

பாரதப் போரிலே தனஞ்சயனுக்காக நீர் காட்டிய விஸ்வரூப வடிவத்தையும பார்த்திருக்கிறேன். அர்ச்சுனனுக்கு சிவபெருமான் பாசுபதாஸ்த்திரம் கொடுத்தருள எழுந்த சமயம் காட்டிய விஸ்வரூபத் திருக்கோலத்தையும் பார்த்திருக்கிறேன். பத்ரிகாச்ரமத்தில் நரநாராயணர்கள் இருவருக்கும் காலாக்னி ருத்ர எடுத்தருளிய விஸ்வரூபத்தையும் கண்டிருக்கிறேன். பிரமன் சிருஷ்டித் தொழில் புரியும் பொருட்டு பரமேஸ்வரன் கொண்டவிஸ்வரூபத்தையும் தரிசித்திருக்கிறேன். ஆனால் சொல்லற்கரிய எமது குமாரக்கடவுள் திருச்செயந்திம்பதியில் கொண்டிருந்த இந்த விஸ்வரூப திருக் கோலத்தைப் போல தமியேன் முன் சொல்லிய விஸ்வரூபங்களில் நான் காணவில்லை. இந்தப் பெரிய விஸ்வரூபத்தின் காரணத்தைத் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன் என நாரதர் சொல்லவும் திருமால் கேட்டுப் புன்னகை செய்து நாரதரைப் பார்த்துப் பிரபஞ்சக் கடலைக் கடத்தற்குச் சன்மார்க்கத்தைச் சாரும் மும்முக்ஷுமக்களுக்கு முதல் துணையான வீணைமுனிவனே.

செய்யுள் 15.

தத்து வக்கட னீந்தித் தகைமை சார்
முத்த ருக்கு முதன்மைய தாம்பரி
சுத்த யாழ்முனி சொல்லுவன் கேளென
வித்த கத்துப தேசம் விளங்குவான்.

செய்யுள் 16.

கயிலை மால்வரைக் கண்ணுதன் மூர்த்தியுந்
துயிலும் யாமுமொன் றாகிக் குகனுருப்
பயிலு மந்தப பசுபதி யைம்முகத்
தியலு நம்முக மெய்திய தாறென.

செய்யுள் 17.

இறைவன் றிண்புய மெட்டுமெட் டார்துழாய்
நறைகொ ணம்புய நான்குமுன் னன்கதாம்
விறல்கொ ளம்புய மேயவெஞ் சூலமும்
பொறைகொ ளாழியும் பொற்பமர் சத்தியாய்.

கைலாசபதியாகிய சிவபெருமானும் நாமும் கூடியே குமரக் கடவுளாகினேம் சிவபெருமானுடைய ஐந்துமுகங்களுடன் என்னுடைய ஒருமுகமும் சேர்ந்து ஆறுமுகமாக விளங்குகிறது. சிவபெருமானுடைய எட்டுத்தோளும் என்னுடைய நான்கு தோளும் சேர்ந்து குமரக்கடவுளுக்குப் பன்னிரு தோள்களாக விளங்குகிறது. சிவபெருமானுடைய சூலாயுதமும் என் சக்கராயுதமும் இரண்டும் சேர்ந்துதான் முருகக்கடவுளுக்கு வேலாயுதமாக இருமுக வேலாய் அமைந்திருக்கிறது. சிவகலையாக சூரியன் நமது வலக் கண்ணினின்றும் பக்குவமாகி உலகத்தைத் தோற்றுவிக்கும் விக்ஷேப சக்தியே வள்ளியம்மையாராகத் திகழ்கின்றது எனது இடக் கண்ணினின்றும் சந்திரன் அம்சமானது பக்குவமாகித் தோன்றிய பரிபூர்ண சிவகலையே ஆவரண சக்தியான தேவநாயகி யாகத்திகழ்கின்றது. சிவபெருமானுடைய அம்சமே சூரிய சந்திர கலைகளாய் எமது வலக்கண்ணிலும் இடக்கண்ணிலும் தோன்றிய விக்ஷேப

ஆபரண சத்திகளாம் வள்ளி தேவயானைகளே குமரக்கடவுளாகிய பிரம்மத்துக்கு வேறிலாத சக்திகளாக விளங்குகின்றார். சிவபெருமானும் முருகனும் ஒருவர் தான் வேறரல்லர்.

செய்யுள் 22.

சுப்பிர மணிய னென்று சொல்லும்பெயர் பதமூன் றாகு,
மப்பதத் திடையுண் டான வரும்பதஞ் சிவனு மீற்றின்
மெய்பதஞ் சிவனையேத்தும் விண்டுவின் வடிவா முன்னஞ்
செப்புறு பதமிரண்டு பதங்களைச் சேர்த்துக் காட்டி.

செய்யுள் 23.

ஒப்பரு மயிக்கமாக வுரைத்தலா லுரைக்க வொண்ணு
மைப்படி மிடற்றினனு மாலெனு நாமு மாக
முப்புவ னங்களேத்த மூலமு முடிவு மில்லாச்
சுப்பிர மணியைனகச் சொல்லுநால் வேத மாதோ.

சுப்ரமண்யன் எனும் நாமம் சு பிரம்ஹ ண்யம் என மூன்று பதங்களாகியது. இதில் மத்தியாக உள்ள பிரம்ஹ எனும் பதத்துக்குச் சிவபெருமான் உரித்தானவர் மூன்றாவதாக உள்ள ண்யம் எனும் பதத்துக்கு நான் உரித்தானவன் இந்த இரண்டு பதங்களையும் கூட்டி அத்துடன் சு எனும் நன்மையே தரும் அக்ஷரத்தையும் சேர்த்து சுப்ரமண்யம் என மொழிவதால் ஆலகால விஷத்தைக் கண்டத்திலே தரித்து தேவர்களைக் காத்தருளிய சிவபெருமானும் நாமும் சேர்ந்துத்தான் ஆதியந்தமிலாத சுப்ரமணியக் கடவுள் என நான்கு வேதங்களும் சொல்லும்.

செய்யுள் 24.

சரவண பவனென் றோதுந் தாவறு பதங்கண் மூன்றிற்
பரவுறு சரமென் றாய பதமது சலமேயாகும்
வருவநம் வாசமிந்த வான்பத மிரண்டும் பார்க்கி
லரிதுமா தவத்து நாரா யணனெனு மருத்த மாமால்.

செய்யுள் 25.

இயலுறு பவனென் ேறேது மிருபதஞ் சிவன்றனைகு
மயலற விரண்டு மொன்றாய் வமுத்திலா றெழுத்தேயாகும்
பயனெருங் குணரின் ஞனேப் பரம்பொருட் சிவனதாய
சயவடி வாகுமென்றே சொல்லு நான் மறைக ளம்மா.

சரவண பவ என்னும் குற்றமற்ற பதங்களில் சரம் என்பது ஜலம் என்றாகும் வநம் என்பது வாசம் எனப்பொருள்படும் அது போலவே நாரம் என்பது ஜலம் என்றாகும் அயநம் என்பது வாசம் எனப்பொருள்படும் ரகத்தின் தொடர்பால் நகரம் ணகரம் என்றாகும் ஆகவே சரவணன் நாராயணன் என்னுமிரண்டும் ஜலத்தை வாசஸ்தானமுடையவன் எனும் பொருளுடையனவாக என்னுடைய அம்சமாகி விளங்குகிறது. பவன் எனும் பதம் சிவன் என்றாகும் மயக்கந்தீர சரவணபவன் என்பது சிவ விஷ்ணுவடிவ சடாக்ஷர மந்திரமாகும் இதன் பொருளை முற்றும் ஆராய்ந்து அறிந்தால் ஞானப்பரம் பொருளாய குமரக்கடவுள் சிவ வடிவே என்பது பொருளாகும் என வேதங்கள் கூறுகின்றன.

முருகப்பெருமானின் கருணைமலரும் இடங்களைச் சொல்லும் பொழுது நிலம் மணல் சுக்குப்பாறை கல்மலை என நிலங்கள் நால் வகைப்படும் இந்த நான்கும் எனக்கும் குமரக்கடவுளுக்கும் உரித்தான இடமாகும் பயன் பொருந்திய நிலம் நமதுவடிவம் பெருமலைகள் எல்லாம் சிவபெருமானது வடிவம் நாம் தரையிலும் சிவபெருமான் மலைகளிலும் ஆக இருப்போம் இந்த இரண்டு இடங்களில் எல்லாம் மயில் வாகனக் கடவுள் இருப்பார் என எடுத்து விளக்கி தேவர்களுக்கு அமுதம் கொடுத்த மஹாவிஷ்ணு பின்னும் சொல்லுகிறார்.

நாரதரே வேங்கடமலையும் அவ்வேங்கடமலையின் மீதுள்ள குகனேரி தீர்த்தமும் அம்மலையில் நாமும் முருகக் கடவுளும் ஒன்றாய் மூர்த்திகரம் அமர்ந்திருப்பதையும் கவனிப்பாயாக.

கார்த்திகை நக்ஷத்திரத்தில் ஆறுகலைகள் உள்ளது அதில் முன் கலை மூன்றும் பூமாதேவி லக்ஷ்மி பார்வதியாகவும் பின் மூன்று





விச்வரூபத்தால் பயந்து நமஸ்கரித்த வீரபாகு தேவரை முருகன் கைகளாலெடுத்து

கலையும் உருத்திரன் அநந்தேசன் சாதசிவ மூர்த்திகளாகும். இவ் விதமான கலைகள் ஆறும் சிவஸ்ரூபமும் என்னுடைய ஸ்வரூபமும் ஆகும் ஆதலினால் கார்த்திகை நக்ஷத்திரத்தில் முருகக் கடவுளுக்கு ஹோமம் பூஜை ஜெபம் உபவாசம் இத்தியாதிகளை அன்புடன் செய்தால் சிவபெருமானுக்குரிய விரதம் எனக்குரிய விரதம், இது களைப் புரிந்தவர்கள் பெறும் பெரும் பேற்றையெல்லாம் பெறுவர் என்பது திண்ணம்.

அகரம் மகரம் உகரம் எனும் அக்ஷரங்கள் முறையே பிரமன் நாம், ருத்ரன், என்பது தான் இம்மூன்றும் சேர்ந்து பிரணவம் அப் பிரணவ ஓங்காரமானது அகரம் தேவநாயகியாகவும் உகரம் முரு கக் கடவுளாகவும் மகரம் வள்ளிநாயகியாகவும் இம்மூன்றும் சேர்ந்து வள்ளி தேவநாயகி சமேத முருகக் கடவுளே பிரணவஸ்வரூபராக விளங்குகிறார். வேதம் வல்ல வீணை முனிவனே! உண்மையை உன் பொருட்டுக் கூறினேம். நீ நன்றாகத் தெரிந்துக் கொள் என்றுகூறி ஸ்ரீ மஹாவிஷ்ணு,

செய்யுள் 33.

நாரதற் குரைத்துச் செங்க ணாரணன் முனிவனேடுஞ்
சீரினுக் கழகு செய்யுஞ் செயந்தியம் பதியின் முன்னந்
தாருகற் றடிந்த செவ்வேள் சரித்திர மினிது காண்பான்
காருடற் பிடர்மேற் கொண்டு கந்தமா தனத்திற் போந்தான்.

பாம்பினை விட்டு எழுந்து செயந்திபுரத்திலிருக்கும் முருக னைத் தரிசிக்கத் திருவுளம் கொண்டு கருடனை அழைத்து அவன் மீது அமர்ந்து திருச் செயந்திபுரம் வந்து திருக் கோயிலிற் சென்ற தும் மஹாவிஷ்ணுவைப் பார்த்த முருகக்கடவுள் அவரை அன்பு டன் வரவேற்று ஆசனமளித்து சந்தோஷத்துடன் உபசரிக்கவும் மஹாவிஷ்ணு முருகக் கடவுளை அருமறை முறைப்படி நறுமலர் கொண்டு பூஜித்து அளவிலா மகிழ்ச்சியுற்றார்.

---

* தாழ்சடையும் நீள்முடியும் எனப் பேயாழ்வார் பாடிய திரு வாய் மொழியினைக் காண்க.

செய்யுள் 35.

வேதனும் விமானமாக விளங்கிய சிமையக் கந்த
மாதனத் திருந்தான் கந்த வரைச்சுக நாத மூர்த்தி
யாதரத் தகில மெல்லா மற்புதத் தளித்தானேமிச்
சீதரப் புத்தே டானுஞ் செயந்தியம் பதியிற் புக்கான்.

இச்செயந்திபுரத்தில் பிரமனும் தனக்குரிய சிரசைப் பெற முன்னரே விமானரூபமாகத் தவம் செய்திருக்கிறார். சிவபெருமானும் ஜகந்நாதராக காக்ஷியளித் தருளுகிறார் மஹாவிஷ்ணுவும் முருகக்கடவுளைப் பூஜித்தபின் பாம்பணைப் பள்ளியில் அனந்த சயனாகவும் தனது உந்தியில் பிரமன் தோன்றவும் அருகில் ஸ்ரீதேவி பூதேவி பூஜிக்கவும் கஜலெக்ஷிமி சமேதராக திருக்கோயில் வடபால் இனிதமர்ந்து காக்ஷியளித்தருளுகிறார்.

கந்த புஷ்கரணி தீர்த்தத்துக்கு அருகிலுள்ள ஸ்ரீமுருகக்கடவுளை நினைந்தவர்க்கு நினைத்தவாறு திருவருள் செய்து கொண்டு தேவருடன் முனிவரும் துதிக்க வீற்றிருந்தருளினர்.

செய்யுள் 37.

மூனைச்சுடர் தேற்கை யானை மொழியவர் தனைகள்செய்ய
நினைக்கமெய்த் தியானஞ் செய்ய நிறைந்தபூ சனைமளாற்ற
கனைத்துழா யலங்கலாற்கு நான்மறை முடிவுங் காணுப்
புனற்சடை யாற்கு முள்ளம் பொருந்திய மகிழ்ச்சியாமால்.

இத்தகைய வேற்படைக் கடவுளை மனதில் நினைப்பவரையும் வாயால் துதிப்பவரையும் நறுமலர் கொண்டு அர்ச்சிப்பவரையும் பூசனை புரிவோரையும் வணங்குவோரையும் துழாயணி விஷ்ணுவும் கங்கையணி சிவபெருமானும் மனமகிழ்ந்து பேரருள் புரிகின்றார்கள் என வியாச முனிவன் சுகமுனிவனுக்குச் சொல்ல மனத்தில் உறுதி நிலையை ஆராய்ந்தறிந்த சுகமுனிவன் கேட்டு ஆனந்தத் தேன் அருந்தினவனுப் பிதாவினது திருவடியில் வீழ்ந்து வணங்கி

எழுந்து வேற்படைக் குமரனது திருவடிகளைத் தியானித்திருந்தான் என சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்குக் கூறியருளினர்.

14-வது சுவாமியின் மந்த்ரமகிமை யுரைத்த
அத்யாயம் முற்றிற்று.

---

## 15-வது பல சரித்திரம் உபதேசித்த அத்யாயம்

நைமிசாரண்ய வாசிகளே,

வியாசமுனிவர் பாலசந்த்ரசேகரக் கடவுளை நினைந்து கை கூப்பி வணங்கி சண்முகக் கடவுளது திருவடித் தாமரையை மனத்துள் இருத்தி தியானித்து மைந்தனுகிய சுகமுனிவனைப் பார்த்து உள்ளம் மகிழ்ச்சியுடன் கூறுகின்ருர் நால்வேதங்களையும் நவிலப்பயின்ற சுகனே உனக்கு மற்ருெரு சரித்திரம் கூறுகிறேன் மனஒருமையுடன் கேட்ப்பாயாக.

முக்கால நிகழ்ச்சிகளையும் மனதில் அறியவல்லவனும் காம வெகுளி மயக்கங்களை நீக்கினவனும் சூலபாணியான சந்திரசேகரக் கடவுளுடைய உபய சரணாரவிந்தங்களை வழிபடும் துர்வாசமுனிவர் தேவர்கள் வாழுகின்ற சுவர்க்கலோகம் வழியாக பிரம்மலோகத்துக்குச் செல்லும் பொழுது அவ்வழி வந்த தேவமாது ஒருத்தி முனிவனைக் கண்டு நமஸ்கரித்து வணங்கி எழுந்து தான் கொண்டு வந்திருக்கின்ற புஷ்ப்பமாலையை முனிவர் கையில்கொடுத்தாள். முனிவர் அத்தேவமாது கொடுத்த மாலையை பெற்று அம்மாலையின் அழகைப் பார்த்து மணத்தையும் நுகர்ந்து முடியிலும் கண்ணிலும் மார்பிலும் ஒற்றி அளவிலா மகிழ்ச்சியுடன் வரும் வழியில் கற்பகத் தரு நிழலில் அரசாளுகின்ற இந்திரன் நாற்கொம்புகளையுடைய ஐராவதத்தில் ஆரோகணித்து வருவதைக்கண்டு அரசனுக்குரிய மரியாதையைச் செலுத்தும் பொருட்டு தன்கையிலுள்ள அழகிய மாலையை ஆசையுடன் இந்திரன் கையில் கொடுக்க அம் மாலையை வாங்கிய இந்திரன் அலக்ஷியமாக வாங்கி ஐராவதத்தின் மத்தகத்தின் மேல் வைத்தான்.

ஐராவதமானது தன்மத்தகத்தின் மேல் வைக்கப்பட்ட அந்த மாலையைத் தன்னுடைய துதிக்கையால் எடுத்துச் சிதறி காலால் மிதித்தது. இதைக்கண்ட துருவாசர் கோபக்கனல் மூண்டு இந்திரனைப்பார்த்துச் சீறி இந்திரனே நீதேவராஜன் எனும் அகந்தையால் நான் தந்தமாலையை இவ்விதமாக அவமதித்தாய். நான் அன்புடன் உனக்குத் தந்தமாலையை நீ அதை அணிந்து கொள்ளாமல் அயிராவதத்தின் மத்தகதில்வைத்தாய் அதனால்அந்தயானை அந்தமாலையை எடுத்துக் காலால் மிதித்து அழித்தது. இச் செய்கையால் பெரும் பாவம் உன்னை அடைந்தது. இப்பாவம் உன்னை அடைந்ததினால் அசுரர்கள் உன் பொன்னாட்டையும் கவர்ந்து திருமகளும் நின்னை விட்டகன்று வறுமையுற்று அற்பர்கள் போல நீ திரிந்து உழலக் கடவாய் எனச் சபித்தார்.

இதைக் கேட்ட இந்திரன் பதைபதைத்து ஐராவதத்தை விட்டு இறங்கி துர்வாசமுனிவரது திருவடியில் வணங்கி சுவாமீ தமியேன் அறியாமையாற் செய்த இக் குற்றத்தைப் பொருத்து எனக்கு சாப விமோசனம் சொல்லியருள வேண்டுமெனப் பிரார்த்தித்த இந்திரனைப் பார்த்து முனிவர் கோபம் தணிந்து இந்திரனே உனக்கிட்ட இச்சாபம் தீரவேண்டுமானால் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் நெடுநாளாகத் துன்பம் இழைந்த கொடுஞ்சூரனை தொலைத்து உங்களைக் குடியேற்றிய வெற்றி வேற்படை கடவுளது ஸ்த்தானமாக விளங்குகிற கந்தமாதனத்துத் திருச்செயந்தீபுரம் சென்று ஆறுமுகக் கடவுளின் திருவடிகளைத் துதித்து அங்கிருந்து மா தவத்தைச் செய்வாயாகில் குமரக்கடவுளின் அனுக்ரஹத்தால் தேவர்கள் திருப்பாக்கடலைக் கடைவார்கள். அப்பொழுது லெக்ஷிமி தேவி தோன்றுவாள் அவளைத் தரிசித்த மாத்திரத்தில் உனக்கு ஏற்பட்டிருக்கிற என்னுடைய சாபம் நீங்கி உன்னுடைய பழய செல்வங்களை யெல்லாம் அடைவாய் என அருளிச் செய்து அவ்விடம் விட்டு அகன்றார்.

முனிவர் கொடுத்த சாபத்தின்படி அசுரர்கள் தேவலோகத்தில் படையெடுத்து பொன்னகரத்தை முற்றுகையிட்டு கற்பகத் தரு காமதேனு சிந்தாமணி இருநிதி இந்திராணி சுவர்க்க லோக

அரசுரிமை முதலிய எல்லாவற்றையும் கவர்ந்து தேவேந்திரனை விரட்டி யடித்துவிட்டார்கள். இந்திரனும் விண்ணிழந்து செல்வ மிழந்து மனங்கலங்கி நிலைதடுமாறி இருக்கையில் முனிவர்சொன்ன சாபவிமோசனம் மனதில் வரவும் எழுந்து வேற்படைக் கடவுளது திருச் செயந்திபுரம் வந்து சேர்ந்து வதனாரம்ப முதலாய இருபத் தினன்கு தீர்த்தங்களிலும் நீராடி முருகக் கடவுளுடைய திருவடி களைத் தரிசித்துப் பலகாலம் கடும்தவம் செய்தான்.

குமரக் கடவுள் திருவருளால் தேவர்கள் திருப்பாக்கடலைக் கடைந்தார்கள். அதில் திருமகள் தோன்றினாள். இந்திரன் திரு மகளைத் தரிசித்தான். லெக்ஷிமிதேவியை தரிசித்த மாத்திரத்திலே யே முனிவரின் சாபம் நீங்கி அரியபாவம் தீர்ந்து பழய ரூபத்தை யும் பூவலரும் கற்பகத் தருவையும் விண்ணுலகையும் இந்த்ராணி யையும் பெற்று கிரீடங்கள் தரித்த தேவர்கள் வணங்க இந்திரலோ கத்தை அரசாண்டான். இது இப்படியிருக்க ஐராவதமானது எனது அரசனுக்கு இக்கொடிய சாபம் வருவதற்கு நானே காரண மாக இருந்தேன். செய்த தீவினை செய்தவர்க்கு ஆதலால் முனிவர் கொடுத்த மாலையை என் மத்தகத்திலிருந்து துதிக்கையால் எடுத் துக் காலால் மிதித்துச் சிதரிய பாவம்தீர நானும் செயந்திபுரம் சென்று வேற்படைக் கடவுளைக் கண்ணாரகண்டு பூஜிப்பேன் என நாரதரையடைந்து ஸ்வாமி குன்றெறிந்த குமரனைப் பூஜிக்கும் மந்தி ரம் ஒன்று எனக்கு உபதேசித்தருள வேண்டுமெனக்கேட்க நாரதரும் அகமகிழ்ந்து பூஜைக்குரிய மந்திரம் ஒன்றைப் போதித்தார். ஐரா வதமும் திருச் செயந்திபுரத்தை யடைந்தது வதனாரம்பம் முதல் இருபத்தி நான்கு தீர்த்தங்களிலும் ஆடி முருகக்கடவுள் திருச் சந்நிதி யடைந்து வணங்கி துதித்து ஐந்துநாள் பகலிரவும் பூஜை செய்து தன் பாவம் நீங்கித் தன்னிறைவன் பால் சென்று முன் போலிருந்தது. ஆகையால் முருகப்பெருமான் இனிது வீற்றிருக்கும் திருக்கோயிலானது தவரூபமாக விளங்குகிறது. சுகமுனியே இன்னுமொருசரித்திரம் கூறுகிறேன் கேள்.

திருச் செயந்திபுரத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ குமரக் கடவுளுக்கு குமர தந்திர சமுச்ச விதிப்படி ஜாமத்துக்கு ஒரு பூஜையாக எட்டு

ஜாமங்களில் எட்டு பூஜைகள் நடக்கும் அப்படி எட்டு காலங்களி லும் பூஜை செய்யும் தெய்வ வடிவங்களின் பெயரைச் சொல்லு கின்றேன்.

முதன் முதலில் விடியற்காலையில் விஸ்வரூப மென்னும் பூஜையை இரண்டாயிரத்தாராகிய திரிசுதந்திரர்கள் செய்த உடன் பகல் முதல் ஜாமத்தின் முதல் பூஜையை சதுர்முகம் பிரம்மா செய் கிறார் இதற்கு உதய மார்த்தாண்ட பூஜை எனப் பெயர்.

பகல் இரண்டாம் ஜாமத்தில் "த்ரு காலசந்தி" மூன்று கால சந்தி பூஜைகளை முற்றும் துறந்த முனிவர்கள் செய்கிறார்கள்.

பகல் மூன்றாம் ஜாமத்தில் ஒத்தகட்டளை என்னும் பூஜையை கந்தருவர்கள் செய்கிறார்கள்.

பகல் நான்காம் ஜாமபூஜையை திக்குபாலகர்கள் செய்கிறார்கள் இதற்கு உச்சி கால பூஜை யெனப் பெயர்.

இரவில் முதல் ஜாமத்தில் சாயரக்ஷை பூஜையை அனந்த சக்தி களுடன் லெக்ஷிமி தேவி பூஜை செய்கிறாள்.

இரவு இரண்டாம் ஜாமத்தில் அர்த்தஜாம பூஜையை ஆதி சேஷன் செய்கிறான்.

இரவு மூன்றாம் ஜாமத்தில் ஏகாந்த பூஜையை ஸ்ரீ வள்ளி நாயகியும் ஸ்ரீ தேவ நாயகியும் செய்கிறார்கள்.

இரவு நான்காம் ஜாமத்தில் பிரம்ஹ ஜோதி பூஜையை ஸ்ரீ மஹாவிஷ்ணு கங்கை ஜலத்தினால் முருகனுடைய திருவடிகளை அபிஷேகம் செய்து பூஜிக்கிறார். இதற்கு இரகசியம் எனப் பெயர் வழங்குகிறது.

இவ்விதமாக விஸ்வரூப தரிசனத்தையும் எட்டு ஜாமங்களில் நடைபெறுகிற தேவபூஜைகளையும் வீரவாளைக் கையிலேந்திய வீர வாகுவும் தரிசித்து ஆனந்தத்தில் மூழ்கி முருகக் கடவுளுடைய

திருவடிகளை சிரசின் மேற்கொண்டு திருக்கோயிலைக் காத்து வரு கின்றார். முருகக் கடவுளும் வேத விதிப்படி பூஜை செய்து வரு கிற தேவர்களுக்கு அனுக்ரஹம் செய்து திரிவிளையாடல் செய்யும் திறம் என்னால் சொல்ல முடியுமா இத்தரிசனங்களைத் தரிசித்த வர்கள் வீரபாகு பெறும் பேற்றையும் பெற்று இன்புற்றிருப்பர்.

சுகனே இன்னுமொரு சரித்திரம் உரைக்கிறேன் கேள் பதஞ் சலியும் மற்றுமுள்ள தேவர்களும் மெஞ் ஞானத் தொண்டர்களும் தொழுது போற்ற சிதம்பரத்திலே ஆனந்தத் திருக்கூத்து அருளு கின்ற காக்ஷியை சதாவும் தரிசித்துக் கொண்டிருக்கும் புலிக்காலை யுடைய கௌதம முனிவர் ஸ்ரீ நடராஜரைப் பணிந்து சுவாமீ புண்ய தீர்த்தங்கள் ஆட நினைந்தேன். பிரத்யக்ஷ கயிலை முதல் எல்லா தலங்களையும் தரிசிக்க ஆவல் கொண்டுள்ளேன். உத்தரவு அருள வேண்டுமெனப் பிரார்த்திக்க ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியும் வியாக்ர பாதருக்கு அவ்வாறே அருள் செய்தார்.

வியாக்ர பாதராகிய கௌதமர் ஸ்ரீ நடராஜரின் உத்தரவு பெற்று சிதம்பரத்தை விட்டுப் புறப்பட்டு கையிலை முதலிய க்ஷேத் ரங்களையும் தரிசித்து கங்கை முதலாய புண்ணிய நதிகளில் ஸ்நானம் செய்தும் மேகத்தைச் சிரட்டடுத்திய பாண்டியனுக்கு முக்தி நலன் தந்தருளிய தாம்பிரவருணி நதியின் இருகரையி லுள்ள எல்லா தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து சந்திரனுக்கு பெரும்சாபத்தை நீக்கியருளிய *சோமாரண்ய ஸ்தலத்தில் சென்று சோமலிங்கரைத் தரிசித்து திருச்செயந்தீபுரம் வந்து வதனாரம்ப மாதி இருபத்திரண்டு தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து வேற் படைக்கடவுளைக் கண்ணாரக் கண்டு தரிசித்து பேரின்பப் பெறு வாழ்வுற்று தந்திர சமுச்சயம் எனும் விதிப்படி பூஜை செய்து கோயிலுக்கு ஐந்து கூப்பிடு தூரத்தில் யாகசாலைகளை ஏற்படுத்தி அதனுள் சென்று வலப்பக்கத்தி லுயர்ந்த வில் வடிவம் முக் கோணத்தின் வடிவும் சதுர வடிவமுள்ள மூன்று விதமான ஹோம குண்டங்களை யமைத்து கலை முதிர்ச்சியில் தேர்ந்த முனிவர்களும் வேத சாஸ்திர நூல்களைத் தெரிந்த அந்தணர்

---

* சோமாரண்யம் ஆத்தூர் இது திருநெல்வேலி ஜில்லாவில் தாம் பிரபரணி நதிக்கரையில் உள்ளது.

களும் சூழ்ந்து விளங்க பிராணன் வடிவாகிய ஹோதா வெனும் ருக்வேத ஞானியும் அதவர்யு எனும் யஜுர்வேத ஞானியும் அருகிலிருந்து வேதகோஷங்களை முறையிட யாகத்தின் கர்த்தாவாக தான் இருந்து வியானன் வடிவாகிய பிரம்மா புரோகிதராக விளங்க யாகத்துக்குரிய சமித்துக்களாலும் பசுவின் நெய்யாலும் யாகத்தை மாநிலம் புகழச்செய்து கொண்டிருக்கும் சமயத்திலே இதனைத் தெரிந்த புண்யம் பொருந்திய கோதாவரி யெனும் நதியாகிய பெண்ணனவள் தன் தகப்பனாராகிய கௌதமர் ஸ்ரீ சண்முகக்கடவுளுக்கு விருப்பமான யாகத்தைச் செய்கிறார் என்பதைத் தெரிந்து அவர் யாகாந்த ஸ்நானம் செய்வதற்கு நாமே செல்ல வேண்டுமென்பதை உணர்ந்து விருப்பமுடன் சிறிய நதி ரூபத்தில் அங்கு யாகசாலையில் வந்து தோன்றினாள். கோதாவரியின் நல்வரவைக் கண்ட கௌதமரும் சந்தோஷத்துடன் அக்கோதாவரியிலே முறைப்படி யாகாந்த ஸ்நானம் செய்து கோதாவரியைப் பார்த்து கோதாவரியே நீ என் பெண்ணனபடியால் மக்கள் தந்தைக்குச் செய்யும் உதவியைச் செய்தாய் நீ இங்கு உன்னுடைய அம்சத்தில் மிகச் சிறிய உருவத்துடன் * ஒரு சுனையாக சந்திரர் சூரியர் நான்குவேதங்கள் உள்ள காலம் வரையும் வீற்றிருந்து அருள் செய் நீ அப்படியிருப்பது என்னையும் என் யாகத்தையும் நினைப்பூட்டும் என்று உரைத்துப் பின்னும் அவளிடத்தில் கூறுகிறார், விருத்தகங்கை யெனும் கோதாவரியே நீ தாம்பிரவருணிக்குத் துணைவியாகி உன்னைச் சார்ந்தவர்களுக்கு அது போலச் செல்வமும் முக்தியும் உள்ளவாகச் செய்து கொண்டிரு என உரைத்து தான் செவ்வனே முடித்த யாகத்தையும் முருகக் கடவுளுக்கு அன்பினல் சமர்ப்பித்து அவருடைய இரு சரணாரவிந்தங்களைப் பன்முறை பணிந்து ஆண்டவனிடம் விடைப்பெற்று பிரியா மனத்தினராய் திருச்செந்தூர் விட்டு அகன்று சுத்தப் பிரணவஸ்வரூபமான சிவகலைக்கு உரித்தானதாய் விளங்கும் பொன்னம்பலம் சென்று அங்கு காக்ஷியளிக்கின்ற ஸ்ரீ நடராஜப் பெருமானது திரு நடனத்தைத் தரிசித்துப் புகழ்ந்து துதித்துக் கொண்டிருந்தது.

---

* இந்தச் சுனையானது திருச்செந்தூருக்கு மேற்கே ஐந்துமைல் தூரத்தில் இன்னும் வற்றாது இருப்பது கண்கூடு.

சுகனே.

முத்துகளைக் கரையிலேயுடைய தாம்பிரவருணிச் சங்கமம் ஸ்நானம் செய்து சோம தீர்த்தத்திலும் ஸ்நானம் செய்து ஆங்கு எழுந்தருளியிருக்கும் சோம லிங்கத்தைத் தொழுது கௌதவ முனிவரது யாகசாலையில் தோன்றிய கோதாவரிச் சுனையிலும் தீர்த்தமாடி திருச் செயந்திபுரம் சென்று வேற்படைக் கடவுளை அன்போடு வணங்குபவர்கள் அவர்களின் பிறப்பு நோய் அகன்று குகசரணாரவிந்த நிழலில் இனிது வாழ்வெய்துவர்.

சுகமுனியே இன்னுமொரு சரித்திரமும் சொல்லுகின்றேன் கேள்.

பெருந்தவத்திலுயர்ந்த வசிட்ட முனிவரும் வாம தேவரும் சாபாலியும் மாயையிர்காமமிக்க காசிபரும் மார்க்கண்டேயரும் கௌதமரும் முற்கல முனிவரும் வேதமுணர்ந்த குற்ற மற்ற கௌசிக முனிவரும் காசிக்ஷேத்திரத்தை யடைந்து குளிர்ந்த ஆர்த்த சந்திரனை ஜடாபாரத்திலே தரித்த விஸ்வநாதரைத் தரிசித்து வணங்கி அங்கு நெடுங்காலம் தவத்தைச் செய்து கொண்டிருக்கும் சமயம் விஸ்வநாதர் அவர்களுக்குப் பிரத்யக்ஷமாகி அனுக்ரஹம் செய்து முனிவர்களே நீங்கள் தென்பாரிசத்திலுள்ள கயிலைமலை யனைய திருச்செந்தியம்பதி சென்று கந்தக் கடவுளைத் தரிசியுங்கள் என அருளி மறைந்தார். இதுகேட்டு முனிவர்களும் சந்தோஷித்து விஸ்வநாதரை அடி பணிந்து விடை பெற்றுக் கொண்டு திருச் செயந்திபுரம் வந்து சன்னதி வதனாரம்பம் முதல் இருபத்திநான்கு தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து ஸ்ரீமுருகக் கடவுளைத் தரிசித்து மகிழ்ந்து முருகன் அருள் பெற்று ஒவ்வொருவரும் இதனைச் சொல்லுகிறார்கள்.

குமரக் கடவுள் வீற்றிருக்கின்ற கந்தமாதன மலையையும் வதனாரம்பமாதி இருபத்தி நான்கு தீர்த்தங்களையும் ஆராய்ந்து பார்க்கும் பொழுது கடல் சூழ்ந்த இப் பரந்த பூமியிலே செல்வத்தையும் போகத்தையும் முக்தியையும் அருளுகின்ற பலகோடி தலங்கள் இருந்த போதிலும் அந்தத்தலங்களையும் இச் செயந்தி

புரத்தையும் சீர்தூக்கின் அந்தத் தலங்களெல்லாம் இச் செயந்தீ புரத்துக்கு கொஞ்சமும் ஈடாகாது என சந்தரசேகரைத் துதிக்கும் வசிஷ்ட்ட முனிவர் கூறினர்.

பிரம்ஹ ஹத்தி சுராபானம் வேதசாஸ்த்திர நிந்தை எனும் மஹாபாபங்களைச் செய்தவர்களும் செயந்தீபுரம் வந்து ஒரு நாள் உபவாசமிருந்து முருகக் கடவுளைத் தரிசித்த மாத்திரத்தில் தங்களை யடைந்த பாபங்கள் நீங்கி மேலான முக்தியைப் பெறுகிறார்கள் என வேத விதிப்படித் த்வம் செய்கின்ற வாமதேவ முனிவர் கூறினர்.

ஆதிசேஷனல் தாங்கப் பெற்ற இப்பரந்த பூமியிலுள்ள தெய்வத்தன்மைப் பொருந்திய எல்லா நதிகளையும் சகல சமுத்திரங்களிலுள்ள எல்லா தீர்த்தங்களையும் ஒரு தட்டிலும் இந்த கந்தபுஷ்க்கரணி தீர்த்தத்தின் மகிமைகளை ஒரு தட்டிலும் வைத்து சீர்தூக்கி பார்க்கு மிடத்து இவ்வுலகினுள்ள எல்லா தீர்த்தங்களும் இந்த கந்த புஷ்க்கரணி தீர்த்தத்துக்கு ஒப்பாகாது. இது சத்யம் என்று சாபாலி முனிவர் கூறினர்.

கார்த்திகை மாதத்துக் கார்த்திகை தினத்தில் சந்நிதி வதனாரம்ப தீர்த்தத்திலே ஸ்நானம் செய்து சிவகுமரனை வழி படுவோர்கள் தாம் பிறந்த நாள் முதல் அந்திய நாள் வரை பிரயாகையில் திரிவேணி கங்கையில் ஸ்நானம் செய்கிற புண்ணியத்தைப் பெறுகிறார்கள் என காசியப முனிவர் கூறினர்.

ஒரு தரம் செயந்தீபுரம் சென்று ஸ்ரீ குமரக்கடவுளுடைய திருவடியைத் தரிசித்துப் பணிந்து போற்றுபவர்கள் நூறு வருஷ காலம் மணி கர்ணிகா கட்டத்தில் ஸ்நானம் செய்த பலனை பெறுகிறார்கள். இது உண்மை என மார்க்கண்டேய முனிவர் நாத்தழும்பு படக் கூறினர்.

கொடிய பஞ்சத்தை யுடைய ஆயிரம் யுகங்களில் வரையின்றி அன்ன தான தருமம் செய்வதால் வரும் நற்பயனை இச்செயந்தீ புரத்தில் ஒரு நாள் தங்கி மன நிலையுற்று ஸ்ரீ முருகக் கடவுளைத்

தியானித்து தரிசிப்பவர்கள் அந்த க்ஷேத்திலேயே பெறுகிறார்கள். இது சத்யம் என்று கௌதம முனிவர் விரித்துக் கூறினர்.

செய்யுள் 46.

தருப்பை நுனி கோலிய நீர் தனைதருந்திக் காமாதி தணந்து மோன
விருப்பினோடு பருவமொன்று நனிபுரியு மத்தவத்தின் மேன்மையேமப்
பொருப்பரசி மகன்செயந்தி புரத்திருப்பார் தங்கள் வயிற் புகலுங்கோடி
திருப்புகமுண் டாகுமென முறகாலமா முனிவரனுஞ் செப்பினனல்.

தருப்பைப் புல்லின் நுனியாற் கொண்ட ஜலத்தை சாப்பிட்டு காம முதலான வகைகளை ஒழித்து மௌனத்துடனிருந்து ஒரு வருஷம் செய்யும் தவத்தின் பலனைக் காட்டிலும் பிரம்ஹ ஜோதியாய் விளங்குகின்ற குமரக் கடவுள் எழுந்தருளி யிருக்கும் இத் திருச்செயந்திபுரத்திலே ஒரு நாள் வசித்து ஸ்ரீ முருகக் கடவுளைத் திருப்புகழால் துதி செய்கிறவர்கள் மேலான தவப்பலனைப் பெறுகிறார்கள் இது உண்மை யென முற்கல முனிவன் கூறினன்.

அஸ்வமேத யாகம் நூறையும் வாஜபேய யாகம் நூறையும் பிறந்தது முதல் அந்திய காலம் வரை செய்ததினல் உண்டாகும் பலனை இச்செயந்திபுரத்தில் நிலையாக வாழ்பவர்கள் பெறுகிறார்கள். இதை பிரம்மா சனகாதி முனிவருக்கு என் முன்னல் கூறினர் இது சத்யம் என கௌசிக முனிவன் கூறினன்.

சுகமுனிவனே இன்னும் கேள்.

ஹரித்வாரத்திலே காயாம்பு வண்ணனாகிய மாதவன் சந்நதி கங்கையில் ஒரு மாதம் ஸ்நானம் செய்வதினல் பெறும் பலனை இச் செயந்திபுரத்தில் வேலாற் றுளைத்து எழுந்த கந்த புஷ்கரணியில் ஒரு நாள் ஸ்நானம் செய்பவர்கள் பெறுகிறார்கள்.

பஞ்சமகாபாதகங்களைச் செய்தவர் களாயிருந்தாலும் அவர்கள் இச்செயந்திபுரத்தில் ஒருநாள் தங்கி முருகக் கடவுளைத் தரிசித்து

துதித்தால் அப் பாவங்கள் அறவே நீங்கப் பெற்று புனிதராகி வரும் பிறப்பிலும் இத்யாதி பாவங்களை மனத்திலும் நினையாத பேற்றையும் பெற்று முருகனடிக்கு அருகர் ஆவர்.

சுகமுனியே

செய்யுள் 51.

அற்பினுடன் கார்த்திகையிற் கார்த்திகைநாட் செயந்தீபுரத்
தமரர்போற்றப்
பொற்புநிறை திருமுகங்க ளோராறுங் களிசிறப்பப் புகழ்ந்து
போற்றாக்
கற்பினர்க ளெவரேனுஞ் சந்திர சூரியருலவுங் காறு மாறா
மற்புரைவே சரியாவர் நிச்சயமீ தெனநூல்கள் வகுக்கு மாதோ.

கார்த்திகை மாதத்துக் கார்த்திகை தினத்திலே செயந்தீ புரத்தில் நவமணி முடிதரித்த தேவர்கள் பணிந்து போற்ற விளங்கும் ஸ்ரீ முருகக் கடவுளை வாயாரப் புகழ்ந்து துதியாத கல்விமான்கள் யாராக இருந்தாலும் அவர்கள் சந்திர சூரியர் உள்ளளவும் கழுதையாகப் பிறந்து உழலுவார்கள் இது சர்வ நிச்சயம் என நூல்கள் முறையிடுகின்றன.

புழுத்த கருமலம் தின்னும் கழுதையாகப் பிறந்தாலும் அது இச் செயந்தீபுரத்திலே அச் சடலத்தை விட்டால் மறு பிறப்பின்றி முக்தியைப் பெறுகிறது.

சுகமுனியே. வேதங்களில் பொதிந்த சரித்திரங்களை இன்னும் கூறுகிறேன் கேள்.

நான் இப்பொழுது சொல்லும் சரித்திரம் சந்தானப்பிரதம் என்னும் பெயரை உடையது. இது ஒரு மஹாவிரதம். இது தேவர்களுக்கும் மற்றும் யாவர்களுக்கும் முருகக் கடவுள் செய்யும் அனுக்ரஹம் போன்றது. இதை உள்ளங்கை நெல்லிக் கனி போல அதன் சிரமத்தை வழுவாது உலகினர் அறியச் சொல்லுகிறேன்.

அரியதவங்களைச் செய்யும் காசிபரின் உத்தம மனைவியாகிய அதிதி நற்புத்திர சந்தானங்களைப்பெற விரும்பி பிரம்ஹபுத்திரரில் வேதமறிந்த நாரத பகவானது திருவடிகளை வணங்கித் துதித்து சுவாமீ புத்திரப் பேற்றையும் தூயவாழ்வையும் தரும், விரதம் ஒன்று எனக்கு உபதேசிக்க வேண்டுமெனப், பிரார்த்திக்க நாரதரும், மனமுவந்து, அதிதியை நோக்கி அதிதியே, தேவர்கள் சிறையை மீட்டித் திருச்செயந்தீபுரத்தமர்ந்த வேலாயுதக் கடவுளுக்குறிய, விரதம் ஒன்றை உபதேசிக்கிறேன், மனம் பதராமல், பெண்மணியே தெரிந்து கொள். நான் சொல்லப்போகும் விரதத்தின் பெயர் சந்தான விரதம் என்பது.

கார்த்திகை மாதத்துப் பௌர்ணமையில் திருச்செந்திலம் பதிக்கு ஆசையுடன் சென்று கந்தபுஷ்க்கரணி முதலான இருபத்திரண்டு தீர்த்தங்களிலும் முறையே ஸ்நானம் செய்து அதாவது விண்ணவர்க்கு அரசரைக் கொடுத்தருளிய உமா சுதரே உமது பங்கய பாதப்ரீதிக்காக நான் அனுஷ்டிக்கப் போகும் இந்த சந்தானப்பிரத விரதத்தை ஒரு வருஷம் தவராது அனுஷ்டிக்கும் படி அனுக்ரஹம் செய்தருள வேண்டும் என மந்திரங்களால் சொல்லிக் கொண்டு இருபத்திரண்டு தீர்த்தங்களிலும் மூழ்கி பன்னிரெண்டு தடவை திருக்கோயிலை வலஞ்செய்து பன்னிரெண்டு தடவை பணிந்து வணங்கி எழுந்து ஆண்டவன் சந்நதி சென்று பன்னிரு தடவை நமஸ்கரித்து எழுந்து மௌனத்துடன் மாப்பாடு சென்று வடக்கு முகமாக இருந்து ஆறுமுகப் பெருமானுடைய திருவடிகளை தியானித்து மனத்துள் இருத்தி மோதிர விரலால் மேல் பக்கத்தில் சக்கரமும் கீழ்ப் பக்கத்தில் முத்தலைச் சூலமும் மத்தியில் வேலாயுதத்தையும் முறையே மூன்று புரத்திலும் தரையில் வரைந்து சோடச விதிப்படி பன்னிரு தடவை பூஜை செய்து முருகக் கடவுளின் திருக் கோயிலைப் பார்த்து கருணாநிதே சுப்பிரமணியம் என்று மும்முறைஜெபித்து அவ்விதமே கண்டத்தினால் எத்தனை உரக்க சொல்ல முடியுமோ அத்தனை உரக்கச் சொல்லி சூரன் கதியடைந்த அவ்விடத்திலுள்ள சமுத்திரத்தில் ஸ்நானம் செய்து மௌனத்துடன் ஒளிவீசுகின்ற வேற்படையைத் திருக் கரத்திலே தரித்திருக்கின்ற முருகக் கடவு

ளுடைய திருக்கோயிலில் சென்று சன்னதி அடைந்து ஆசார்ய முகமாக ஒரு கும்பம் ஸ்தாபித்துத் துதித்து அந்த கும்பத்துக்கு சோடசோபசாரங்கள் அன்புடன் செய்து அந்தக் கும்பஜலத்தில் ஸ்நானம் செய்து அனைத்தினுக்கும் மூலகாரணமாக விளங்குகின்ற பன்னிரு புயாசலக் கடவுள் திருவடிகளை வணங்கி பன்னிரு திரி சுதந்திரத்தார்களுக்கு அன்னம் அளித்து சடாக்ஷரத்தையும் மன தில் தியானித்து உபவாசத்துடன் அந்நாள் கழித்து மறுநாள் பாரணை போஜனம் விதிப்படிச் செய்தும் மேற்சொல்லியபடி பன்னி ரெண்டு பௌர்ணமிகளிலும் பூர்ணமாக அனுஷ்டித்தும் அடுத்த கார்த்திகை மாதம் வரும் கார்த்திகையிலும் இவ்வாறே அனுஷ்ட டித்தும் வேதமறிந்த நல்ல வேதியர்களுக்கு அரியகோதான முத லிய மன முவக்கும் தானங்களை எல்லாம் பிரீதியோடு செய்ய வேண்டும். இவ்வாறு அனுஷ்டடித்தவர்கள் ஸ்ரீ குமரக் கடவுளது பெருங் கருணையினால் வேண்டியன வேண்டியவாங்கே ஒன்றொன்றாக எல்லாப் பேற்றினையும் பெற்று மகிழ்ந்து வாழ்வார்கள். இவ் விரதத்தை இவ்வாறு அந்தணர்கள் அனுஷ்டடித்தால் யார்க்கும் தெளிதல் கூடாத அரிய வித்தைகளைப் பெற்றும் நூல்களைப் படித்தறிந்தும் மிக்க சந்ததியோடு மகிழ்ந்து வாழ்வர்.

இந்நோம்பை அரசர்கள் அனுஷ்டடித்தால் தம் பகைவர்களை வென்று, கடல் சூழ்ந்த நிலங்கள் முழுவதினையும், ஒரு குடைக் கீழ் செல்வனே குடிகள் போற்றப் பல சந்ததிகளையும்பெற்று இனிது வாழ்வர்.

இந்நோன்பை இவ்வாறு வைசியர்கள் அனுஷ்டடிப்பின் குபேர செல்வத்தைப்பெற்று பல சந்ததிகளையும் பெற்று வாழ்ந்து களிப்புறுவர்.

---

*மாப்பாடு மணப்பாடு என்று வழங்குகிறது இது சூரன் மாமரமாக நின்று போர் செய்த சமயம் வேலாற் பிளந்து பட்ட காரணத்தால் மாப்பாடு என பெயர் பெற்று தற்சமயம் மணப்பாடு என வழங்கி வருகிறது இது.

இந்நோன்பை குற்றமிலா * வேளாளர்கள் அனுஷ்ட்டிப் பின் அளவற்ற செல்வத்துடனும் சந்ததி வாழ்க்கைச் சிறப்பையும் பெற்று இன்புற்றிருப்பர் என்று நாரதர் உபதேசிக்கவும் இவ்வுப தேச மதனைக் கேட்ட அதிதி நாரதரை குருவாகக் கொண்டு அடி பணிந்து வணங்கி விடைபெற்று உபதேசப்படியே ஒரு வருஷம் சந்தானப் பிரத விரதம் தவராது அனுஷ்ட்டித்து வேற்காப் பெரு மானுடைய திருவருளால் இந்திரனையும் உபேந்திரனையும் பெற்றெ டுத்து உளம் மகிழ்ந்து இன்று வரையும் வாழ்ந்து வருகிறார்கள்.

ஆகையால் சுகமுனியே இவ்விரதத்தை நம்பிக்கையில் துணிந்து அனுஷ்ட்டித்தவர்கள் மேற் சொல்லிய பலன்களைப் பெறுவதுடன் வேற் பெருமானுக்கு அடியவராய் அவர் திருவடி நிழலில் நித்ய ஜீவனாக விளங்குவார்கள்.

திருச் செந்தூருக்கு தெற்கில் 7-வது மைலில் உள்ளது.

சுகமுனியே இன்னுமொரு நற்சரித்திரத்தையும் கூறுகிறேன் கேள்.

முன் பிறப்பில் அரிய தவத்தைச் செய்கின்றவனும் முறை தவராதவனுமான வேதியன் ஒருவன் நான்கு வேதங்களையும் ஆறு சாஸ்த்திரங்களையும் நன்கு கற்றுணர்ந்து மெய்ப்பொருள்களை யெல் லாம் உள்ளத்தில் உள்ளவாறு தெரிந்து வேதியர்களுக் கெல்லாம் தானே அவரவர்கள் அறியும்படி அறிவித்து எல்லோரும் தன்னை வியந்து புகழும்படி கீர்த்தியைப் பெற்றும் வைதிகம் சைவம் வை ணவம் வாமம் சவுரம் காணுதபத்யம் எனும் மத நூல்களை எல்லாம் முற்றும் தெரிந்தும் இத்யாதிகளைப் பிறர்க்கு அறிவித்தும் மற் றொப்பிலார் யாருமின்றி தானே ஒப்பற்றுப் புகழுடன் இவ்வுலகத் தில் நெடு நாள் வாழ்ந்தும் முன் ஜன்மத்தில் செய்த பாவத்தின் பயனாய மேற் சொல்லிய புகழ் எல்லாம் காலக் கிரமத்தில் குறைந் து கொண்டு வரவும் புண்ணியங்கள் தேய்ந்து பாவங்கள் மேலிட பெற்றதாய் தகப்பன் குரு சிவபெருமான் விஷ்ணு வேதியர்கள்

* அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் எனத் தொல் காப்பியத்தில் முழங்குவதைக் காண்க.

கடவுளின் சுத்தமான மந்திரங்கள் மகா தீர்த்தங்கள் அரியதவம் தருமம் வேதம் சாத்திரம் உண்மையான வைதீக யாகங்கள் அருந்ததி போலுள்ள குற்ற மற்ற மங்கையர்க்கரசிகள் இவர்கள் எல்லோரையும் நிந்தனை செய்வதே தொழிலாகி கண்களால் காணப்படுபவைகள் தான் மெய் காணப்படாதவைகள் பொய் யெனவும் தவத்தினல் சொர்க்கத்தைச் சார்ந்தோம் என்னும் பாவத்தினல் நரகத்திலிருக்கிறோ மென்றும் யாராவது சொல்லுகிறார்களா இல்லையேயில்லையே ஆகையால் இவையெல்லாம் பொய் என மனதில் கொண்டு வைதீக நெறியின்னும் தவறி புண்ணியம் பாவம் நினையாது இந்த ஸ்த்தூலமாகிய சடலத்தைச் சுமந்து நெடு நாளும் கொடிய செய்கைளைச் செய்து உள்ளறிவு தளர உரைதடுமாற நரையொடு மூப்பு வந்து தடுமாறி இவ்வுலகத்தை நீத்தான். இவனுடைய ஆவியை எம படர்கள் கட்டிக் கொண்டு எமனது ஆஞ்ஞைப்படி இருபத் தெட்டுக் கோடி நரகத்திலும் ஆழ்த்தினர்கள். மேற்கூறிய நரகங்களில் அழுந்திய பின்னர் பாண்டிய நாட்டில் வந்து கழுதையாக ஜனித்தது எவரும் வெறுக்கக் கூடிய கழுதையாக இருந்த சமயம் அந்த ஜீவன் முற்பிறப்பில் செய்த பாவங்களுக்குரியதை அனுபவித்து மீதியில்லாத நிலைமையில் முன் ஜன்மாவிலே வேதமறிந்து பலர்க்கு குருமுகமாக விளங்கி உபதேசித்த உயர்வினலே இக்கழுதை ரூபத்துடன் திருச்செயந்தீ புரத்தைச் சேர்ந்து சிலநாளிருந்து சடலத்தை விட்டது. திருச் செயந்தீ புரத்தில் இறந்தபடியினல் கழுதை உடலை விட்ட அவ்வுயிர் ஞான நாயகராகிய வேற்படைக் கடவுளது கிருபையால் காமதேனு கார்ப்பக விருக்ஷம் தேவமாதர்கள் சூழ புஷ்ப்ப ரதமேறி சுவர்க்க லோகம் சென்று இன்றளவும் வாழ்ந்து வருகிறது.

அருந்தவத்துக் குறிய இடமாகிய திருச் செந்தூரிலிருந்து வேதங்களைச் சுருதியோடும் ஸ்வரத்தோடும் ஓதி சண்முகக் கடவுளது பாதாரவிந்தங்களையும் துதித்து இச் செயந்தீபுரமே நிலையெனக் கொண்டு வாழ்ந்து வருகிறவர்களுக்கு வேற்படைக் கடவுள் பசியாவண்ணம் அன்னமும் கொடுத்து இந்த உடம்புடன் பிறவித் துன்பத்தையும் நீக்கி பெரும் தவத்தால் பெறும் பாக்கியங்களை எல்லாம் அருளிகின்றார். இத் தகையோர் களின் பெருமையை என்

னல் எடுத்துரைப்பது எதுபோலென்றால் மின்மினிப் பூச்சி சூரியன் ஒளியைப்பற்றி உறைக்கமுற்படுவது போலாகும் எனவியாசர் சுகருக்கு கூறியருளினதைச் சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்கு கூறியருளினர்.

15-வது பல சரித்திரம் உரைத்தது
முற்றிற்று.

---

## 16-வது யமனுக்குச்
## சிந்துபுர வைபவம் உரைத்த அத்யாயம்

நைமி சாரண்யவாசிகளே

அரியதவக் கடலை வரையறுத்து அறிந்த வியாசமுனிவர் புத்தியிற் சிறந்த சுகமுனிவனைப் பார்த்து சுகமுனியே எழு உலகங்களிலும் சிறப்பினையடைந்து விளங்குகின்ற திருச் செந்தூரை முன்ஜன்மத்தில் செய்த நல்ல தவத்தின் பயனால் அடைந்தவர் பெரும் சிறப்பைக் கூறுகிறேன் கேள் சுகமுனியே.

கடல்மீது கப்பல்விட்டு வியாபாரம் செய்பவனும், இரவு, பகல், தூக்கமில்லாமல், கடலில் மரக்கலத்தில் சென்று மீன் முதலிய, ஜீவ ஜந்துக்களைப் பிடித்துத் தின்பவனும், கல்வியறிவு சற்றுமில்லாதவனுயுமுள்ள, மிலேச்சன் ஒருவன் தன்னைப் போலுள்ள, பலரை, ஒரு கூட்டமாகச் சேர்த்து, கடலில் மரக்கலத்தில் சென்று, தன்னெதிர்வரும், மரக்கலத்திலுள்ளவர்களை, அடித்துக் கொன்று, கடலில் தள்ளி, அவர் வணிகம்செய்து சம்பாதித்த பொருள்கள் எல்லாவற்றையும், கொள்ளையடித்தும் வைதீக மார்க்கத்திலே, ஹோமங்களை நடத்துகின்ற அந்தணர்களுக்குத் தீங்குகள் செய்து, அவர்களின் பசுக்களைக் கொன்றும், அப்பசுக்களின்

மாமிசத்தையே, தனக்கும், தன்னுடன் இருப்போர்களுக்கும், பகிர்ந்தளித்தும், இத்யாதி கொடுஞ் செய்கைகளே நல்ல செய்கைகள், என்று நிச்சயத்துடன் நல்ல பக்திமான்களின் சிரசுகளை வெட்டி வீழ்த்தி, மஹாபாதகம் முதலானதுகள் செய்து கொண்டிருக்கும் பொழுது, நல்வினை சேரவும், திருச்செயந்தீபுரத்தை அடைந்து, முனிவர்கள், வணங்குகின்ற திருக்கோயில் வாசலில் வந்து இந்த இடம் என்ன இடம், என்று மிகவும் கோபத்தோடு, ஆலயத்தினுள் நுழைந்து, அங்கு எதிர்ப்பட்ட, திரிசுதந்திரர்களைப் பார்த்துக் கோபக்கனல் வீச, இங்குள்ள உருவம் என்ன உருவம், எனக்கேழ்க்கவும், திரிசுதந்திரர்கள், மிலேச்சனைப் பார்த்து, இந்த தெய்வ வடிவு, சிவபெருமானது நெற்றிக்கண்ணிலே, ஜோதிப் பிழம்பாக வந்த ஷண்முகக்கடவுள். கயமுகாசுரனை வென்ற மாத்திரத்திலேயே, தேவர்களால், தேவசேனாதிபதி எனத் திருநாமம் சூட்டப் பெற்றவர். தன்னை வழிபடும் அடியவர்களுக்குத் துன்பத்தை நீக்கி, கருணையினால் ஞானத்தையும், சகல செல்வங்களையும், அருளும் பொருட்டு, சக்தி வேலாயுதத்துடன் விளங்குகிறார். என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே அந்த மிலேச்சன் இவர்கள் சொல்வதைத் தடுத்து, மிகச் சினந்து நீங்கள் சொல்லிய சிவன்யார் அவன் பால் வந்த முருகன்யார்! எனச் சொல்லி கையில் வாள் எடுத்துத் திருவுருவம் நோக்கி ஓடும் சமயம், அங்குள்ள படிகளில், கால் இடறி வெட்டிய பனைமரம் சாய்வது போல, விழுந்து அக்கணமே, உயிர் நீத்தான்.

அவன் விழுந்த தன்மையானது நமஸ்கரிக்கும் தன்மையாயிருந்தது. இறந்தமிலேச் சனுடைய உயிரை கட்டிக் கொண்டு போக எமபடர்கள் வந்தபொழுது அங்கு சிவ குமரனை வழிபடும் குமாரகணத் தலைவர்கள் அங்குவந்த யமபடர்களை அச்சுறுத்தி வெருட்டி எங்கள் குமரப் பெருமானுடைய திருச் சந்நிதியிலே நமஸ்க்கரித்து நீங்கிய இந்த ஆவியை நீங்கள் தொடக்கூடாது. இந்த ஜீவன் எங்களுடன் இருக்கத்தகுந்தது. நீங்கள் செல்லுங்கள் என உரைக்கக்கேட்ட யமபடர்கள் யமலோகம் சென்று தங்களின் இறைவனான யமனது திருவடியில் வீழ்ந்து வணங்கி சிவபெருமானது ஆணையைதவராது நடத்தியே வருகின்ற யமதர்ம ராஜ

னிடம் செயந்தீபுரத்தில் நடந்த விஷயங்களை விவரமாகச் சொல்ல வும் அது கேட்ட யமதருமன் நடுநடுங்கி காற்றில் பட்ட மூங்கில் போல் சிரசு அசையப் பதறி எழுந்து விரைந்து செயந்தீபுரம் வந்துசேர்ந்து திரிசுதந்திர முனிவர்கள் புகழ்ந்து துதிக்க அகத்தியர் சனகாதியோகிகள் வணங்கி நிற்க வல்லீ தேவசேனு சமேதராக காக்ஷியருளும் வேற்படைக் குமரனைத் தரிசித்துத் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி தேவர் குடிவாழவைத்த பெருமானே, பார்வதி குமரரே, மயில் வாகனக் கடவுளே தேவ சேனுதிபதியே, அகத்தி லுள்ள மாயஇருளை அனுக்ரஹத்தினுல் நீக்கி மெஞ்ஞானம் அருளும் இன்பசூரிய வடிவே, ஷண்முக நாதரே சரணம் சரணம் என்று பல பல துதித்தான்.

அருள் இல்லாத கொடிய அசுரரால் புண்பட்டு அருந்திய தேவர்களுக்கு அருமருந்தான கடவுளே எனப் பல பல துதித்து கை கட்டி வாய்புதைத்து நின்றயமதருமனை முருகக் கடவுள் நோக்கி எமனே உன் தோத்திரத்தால் நம் மனம் களித்தது. நீ இங்கு வந்த காரியத்தைச் சொல் எனவினவலும் எமன் கைகூப்பி நாக்குத் தடுமாறச் சொல்லு கின்ருன்.

எந்தையே சந்திரசேகருடைய பேரருளினுல் புண்ணியம் செய்தவரை சுவர்க்கலோகத்தும் பாவம் செய்தவரை நரகத்திலும் செலுத்தி வருகிறேன். உண்மையறிவினரும் ஆதிநூல் கல்வியை அறிகின்ற மனுச்சக்ரவர்த்தியும் என்பக்கத்திலே வீற்றிருக்க நான் சந்திரசேகருக்கஞ்சி அந்தந்த ஜீவர்களின் வினைச்செயல் அறிந்தே எனது கடைமையைச் செய்கிறேன் இவ்விதமாக நீதி நெறி தவ ராமல் நடத்தி வருகின்ற தமியேன் நல்வழி நில்லாத இந்த மிலேச் சன் செய்த பாவங்களைத் தெரிந்து இவன் துன்பப் படும்படி கட்டிவா வேண்டுமென எனது தூதர்களை யனுப்பினேன் என் னுடைய தூதர்கள் இம்மிலேச்சனது ஆவியைத் தீண்டு முன்னரே தங்களின் கணாதர்கள் எனது தூதர்களை விரட்டிவிட்டு இம் மிலேச்சனை உங்களது பொற்சரணு விந்தத்தில் சேர்ப்பது என்ன காரணமோ என்று யமன் சொல்லியதைக்கேட்ட குமரக்கடவுளான வர்.

எமனை நோக்கி எமதருமனே.

செய்யுள் 27.

ஞானமுள ராயிடினு ஞான மிலரேனு
மானின் விழி யார்மிசை, மயங்கினர்களேனு
மேனையவழுக் கின்முறை நாடினர்களேனு
மானத மியற் றெழி, லடைந்திலர்களேனும்.

செய்யுள் 28.

முந்துபவ மூழ்முறை முயன்றுளர்க ளேனுஞ்
சுந்தர் மறைத்திரி சுதந்திரர்கள் சூழ்ந்து
வந்துதொழு நம்முக மலர்ச்சியது நோக்கிற்
சிந்துபுரம் வந்தினி திருக்குமவர் செய்த.

செய்யுள் 29.

தீவினை யொழித்தினிய செம்மையின ராகி
யாவலொடு நந்தம தடிக்கமல நீழன்
மேவா விருப்பரிவன் மேயமுக மாறுந்
தாவற விழித்தவுடன் சாய்ந்துயிர் விடுத்தான்.

செய்யுள் 30.

விருதிரி சுதந்திரர்முன் வாயுரை புகன்றுன்
விரைவினுயர நம்முகம் விருப்பினேடு பார்த்தான்
பரிபவ மொழித்துமறை பண்பினி னிறைஞ்சு
மிருசரண தாமரை யிருங்கதி யடைந்தான்.

செய்யுள் 31.

ஆணைநம தாணையென வாறுமுக வேலோ
னேனுடைய கூற்றின்முக மின்னருளினேக்கித்
தானுவின் மகன்றகைய தண்ணளி சுரப்ப
வாணிதிக ரானமணி நாவினின் மடழ்ந்தே.

எப்படிபட்ட பாவங்களைச் செய்தவர்களா யிருந்தாலும் செயந் தீபுரம் வந்து வேதங்களைச் சுருதிதவராது ஓதும் திரிசுதந்திரருடன் நம் சந்நிதி வந்து நம்மைத் தரிசிப்பவர்கள் அவர் செய்த எல்லா பாவங்களும் நீங்கப் பெற்று புண்ணியராகி எமது கந்த லோகம் செல்வர். இம்மிலேச்சன் கொடுமையான பாவங்களையே செய்திருந்தாலும் திரிசுதந்திரருடன் வார்த்தைகள் பேசி நமது சந்நிதிவந்து எம்மைத் தரிசித்தமையால் எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டு எம்திருவடிக்களாகி எமது லோகத்தைச் சார்ந்தான்.

எமனே செயந்தீ புரமானது

செய்யுள் 32.

அந்தகனை நோக்கி முருகேசனறி விப்பான்
சிந்துபுர மானது சிறப்பினொரு மூவர்
முந்நூறு தவத்தரொரு நாமு முறையாக
விந்தையுடன் வாய்த்துதி விளம்புபதி யாமால்.

மூவர்களாலும், தேவர்களாலும், முனிவர்களாலும், நம்மாலும், புகழ்ந்து, துதித்து எத்தும் நன் நகரமாம்.

இந்த உண்மையை, நீ தெரிவதற்காகவே, கூறியருளினோம் எனக்கூறிய ஆஞ்ஞையைக்கேட்டு எமன் தன் இருகரம் கூப்பி உரோமம் சிலிர்ப்ப, ஆனந்தக் கண்ணீர் சொரிந்து, தரிசித்து, மகிழ்ந்து முருகனிடம் விடைபெற்று, தன் நகரம் சேர்ந்தான்.

ஆதலினால் தென்திசை அலைக்கும், இச்செயந்தீபுரம் சுப்பிரமணிய சாயுஜ்யத்தைத் தரும்பதியாம். இது சத்தியம், சத்தியம். இந்த உண்மையைத் தெரிந்துகொள். என வியாசன், சுகனுக்கு கூறியதை சூதர்நைமி சாரண்ய வாசிகளுக்குக் கூறி யருளினர்.

16-வது எமனுக்குச் சிந்திபுர வைபவம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

# 17-வது பிரமன் தேவர்களுக்கு உபதேசித்த அத்தியாயம்

நைமி சாரண்யவாசிகளே!

வேதம் நான்கென வகுத்த வியாசமுனிவர், அறிந்த ஆன்ரோர்களால், துதிக்கப்படும், சுகமுனியைப் பார்த்து அம்முனிவன் மனந்தேற, சுகமுனியே, அருந்தவப் பயனை அருளுகின்ற செயந்தீபுரத்தின் இன்னுமொரு சரித்திரம் சொல்லுகிறோம் கேள் எனச் சொல்லுகின்றார்.

சுகமுனியே

வைசியர் குலத்தில் பிறந்து பாவங்கள் செய்பவனாய் வியாபாரங்கள் செய்வதில் துணி வியாபாரத்தில், பொய்யளவு வைத்து, மெய்யளவு போல, வியாபாரம் செய்தும் தங்கத்தில் மற்ற லோகத்தினைக் கலந்து நிறம் மங்காமல் செய்து தங்க விலைக்கே விற்றும், கள்ளவியாபாரத்தில் தலை சிறந்தும், தானும் பிறருக்கு ஒன்றையும் கொடாமலும், கொடுப்பவர்களைத் தடுக்கும் மனத்துடனும், இம் மானிலத்தில், புண்ணிய பாவம் என்பதெல்லாம் பொய் என்று சொல்லியும், ஞானமாகிய அறிவு, தன்னிடத்தே வாராதிருக்கும்படி தீமையே கொண்டு ஒழுகுபவனும், நான்கு வருணத்திலும், வித்தியாசமே கிடையாது. கை, கால், மூக்கு, செவி, கண் முதலிய அவயவங்கள் யாவர்க்கும் ஒன்றாகவே விளங்குகின்றன. நான்கு வகையென வேஷத்தையுடையவர்கள் சமயம் பார்த்துக், கூத்தாடும் தன்மைதான். அவர்கள் பூணும் வேஷத்தின் உண்மை. நான்கு வருணங்களும் ஒன்றுதான் என்று இகழும், உணர்வினையடைந்தும், சிலாவிக்ரஹங்களையும், செம்பு விக்ரகங்களையும் அவைகள், மனிதர்களுடன் பேசுவதில்லையே ஆகையால் அவைகள், கடவுள் தன்மை யென்பது பொருத்தமில்லை யெனவும், இக் கடல் சூழ்ந்த மாநிலத்தில் எல்லாம் கடவுளின் செய்கை, யென்பது பெரும் பொய் எனவும், தாயார், தகப்பனார், பந்துக்கள், தவமுனிவர்கள், தேவர்கள் ஆவதும், சத்தரிஷிகள் ஆவதும், இவையெல்

லாம் பணத்தினுல் தான் என்றும், பணமே சுவர்க்கம், பணமே சகல போகம், என அதிகப்பிரசங்கம் செய்துகொண்டு, பூமிக்குப் பாரமாக, வாழ்ந்து வரும் நாளில், பணம்தேடும் ஆசையால் கப்பலேறி கடல்கடந்து, கடல்சூழ்ந்த தீவுகளில்போய், வணிகத் தொழிலில், அநேக பண்டங்களை விற்று அளவிறந்த செல்வத்தைச் சம்பாதித்து அதனைத் தன் ஊருக்குக் கொண்டுவரக் கருதி கப்பலேறி வரும் சமயத்தில், மழையும், சூருவளிக் காற்றும், ஒன்று சேர்ந்து பலமாக அடிக்கவும், வணிகன் வந்த கப்பலும் நடுச்சமுத்திரத்திலுள்ள பெரிய பாறையிற்மோதி உடைந்து கப்பலும் சிதறிக் கவிழ்ந்தது. கவிழ்ந்த உடன் வணிகனும் அவன் சம்பாதித்த செல்வங்களுடன், நடுச்சமுத்திரத்தில் வீழ்ந்து விட்டான். வணிகனும் சமுத்திரத்தில் வீழ்ந்த உடன் தான் சம்பர்தித்த பொருள்கள் எல்லாம் சமுத்திரத்திலே வீழ்ந்து நாசமுற்றதை நினைந்து, தன்னுயிராவது பிழைக்க வேண்டுமென எண்ணி சமுத்திர அலைகளின் உதவியால் கை சோரும்படி நீந்தி தேவர்கள் வணங்குகிற வதனூரம்ப தீர்த்தக்கரை சேரும்பொழுது, தான் நீந்தி வந்த களைப்பு மேலிட தன் ஆயுள் முடிந்து உயிர்விட்டான்.

அங்குள்ளவர்கள், அப்பிரேத சரீரத்தை எடுத்து அதுவணிகனது உடல் எனத் தெரிந்து, மயானத்தில் கொண்டுபோய், முறைப்படி தகனம் செய்து வைத்தார்கள்.

நன்னூற்பயன் தெரிந்த சுகமுனியே!

அவ்வணிகன், செயந்தீபுரத்து வதனூரம்பம் சேர்ந்து உயிர் நீத்தபடியால், தான் செய்த கொடும்பாவமெல்லாம், சிறுகுழியில் விட்ட நீர் சூரிய வெப்பத்தால் எப்படி வற்றி மறையுமோ அதுபோல, சுவாமியின் திருவருளால் ஒழிந்து தேவர்களால் கொண்டு வரப்பட்ட, புஷ்ப்ப ரதத்தில் இவ்வணிகனை ஏற்றி உபசாரத்துடன் கைலாசத்தில் கொண்டுவிடவும் அவ்வுயிர் கைலாசத்தில், சிவ சாயஜ்யத்தைப் பெற்று, இனிது இருந்தது.

சுகமுனியே!

அளவிலாது செய்த பாவத்தை தன்னிடத்தே கொண்ட வணிகன் செயந்தீபுரத்தில், தற்செயலாகச் சேர்ந்து வதனாரம்பத்தில், உயிர்விட்ட தன்மையால், தன் பாவங்களெல்லாம் நீங்கப் பெற்று தேவர்கள் கொண்டுவந்த ரதமேறி கைலையை அடைந்து சிவ சாயுஜ்யத்தைப் பெற்றான் என்றால் அரும்பெருந்தவத்தவர்கள் செயந்தீ சேர்ந்து இவ்வுலகத்தை நீத்தால் அவர்பெறும் நற்கதிகளை, யாராலும் துணிந்து சொல்லமுடியுமோ அது எவ்வளவு சிறப்புடையது.

சுகமுனியே!

செய்யுள் 16.

பகர்வ தற்கரி தாகிய செய்ந்தியம் பதிக்கு
நிகரெனப் பல தலங்களை யுவமித்து நிகழ்த்துந்
தகவிலோர்களுங் கொடும்பவச் சலதியிற்றாழ்ந்து
மிகைப டைத்தகூற் றுவன்புரந் தன்னின்மே வுவரால்.

செய்யுள் 17.

சடமெ டுத்துளோ ரியாரையும் பரகதி தன்னி
லுடனிருத்திய செயந்தியம் பதிக்குவ மானங்
கடலு லத்தில்வே றெண்ணினோர் காலனீள் கண்ணும்
வடவை பற்றிய புதுவிருந் தென்னவும் வதிவார்.

சொல்லுதற்கரிய, இச் செயந்தீபுரத்துக்கு ஒப்பிட்டு பல, தலங்களைச் சொல்லுகிறவர்கள் முடிவிலாப் பிறவிக்கடலில் சேர்ந்து கூற்றுவனது நகரிலுள்ள நரகத்துன்பத்தை எய்துவர். தன்னிடத்துப் பிறந்தவர் யாவரையும் முக்தியிற் சேர்க்கும் இச் செயந்தீபுரத்துக்கு பூமியிலுள்ள பிற தலங்களை ஒப்பாக நினைத்தவர்கள் யமனுடைய கோபத்துக்கு விருந்தாளாகியே யிருப்பார்கள்.

சதுர்முகப் பிரம்மா, சுவர்க்கத்திலுள்ள இந்திரன் முதலிய சகல தேவர்களையும் பார்த்து இந்திராதிதேவர்களே புண்ணிய தலங்கள் எல்லாவற்றினும் மிக்குயர்ந்த செயந்திபுரம் எண்ணுதற்கரிதாம் காசி, ஜகந்நாதம், பிரமாபுரம், துவாரகை, பஞ்சலிங்க தலங்கள், திருவரங்கம், திருக்குற்ருலம், நெல்வேலி, திருக்காளாவனய், தர்ப்பசயனம், இத்யாதி புண்ய தலங்களில் செயந்திபுரமே விசேஷ மகிமையை யுடையது. என்று பிரம்மா பலமுறை தேவர்களுக்குச் சொல்லியருளி பின்னும் சொல்கிருர்.

தேவர்களே!

யமனுலகம்தான் செல்வேன் நரகத்தில்தான் விழுவேன் எனும் பாவிகள் செயந்திபுரம் இன்னதென்று அறிய மாட்டார்கள்.

செய்யுள் 20.

பச்சை மாநதி சூழ்ந்தசோ ராடவிப் பகுவாய்
நச்சு மிழ்ந்திரு நாகணைச் சயனமா நகரா
மிச்சை கொண்டவந் நகர்க்கெலா மேலதா மினிய
முச்ச கந்தொழுஞ் செயந்தியம் பதியதே முதன்மை

திருச் செந்தூரானது திங்கள் அரவு நதி சூடிய ஸ்ரீசிவபெருமானது இதயகமலமாக விளங்குகிறது.

ஒவ்வொரு மாதத்தில் வருகிற கார்த்திகை தோறும் வெற்றிவேல் பெருமானைத் தரிசித்து போற்றுபவர்கள் பவக் கடலை நீந்தி சிவபாதாரவிந்தமெனும் முக்திக் கரைசேர்வது திண்ணம்.

செய்யுள் 23.

மாதமுப்பது மாகங் கருதிவே
லாதி முன்வத ஞரம்ப மாவொ
ரேதி லாப்புன லெத்தல மூழ்கினும்
போகா கற்கரி காம்பவம் போக்குவார்

செய்யுள் 24.

வேள்வி நூறும் விதிமர பாற்றிய
நீள்க திக்கெறி ராக நிகழ்த்திடின்
மூறுமாக முகாரம்பங் கோடியாச்
சூறு ரைக்கும் பலனைச் சுருதியே.

செய்யுள் 25.

சிறந்த கார்த்திகைக் கார்த்திகைத் தீபத்தா
னிறைந்த வாறு நிலாமுக மண்டலம்
பிறந்து சாமுன் னொருதரம் பெட்புற
வுறைந்து போற்றுநர்க் கோர்பிறப் பில்லையே.

மாசிமாதத்து முப்பது நாள்களிலும் வேற்படைக் கடவுளது சந்நிதி முகாரம்ப தீர்த்தத்தில் சங்கல்பத்துடன் ஸ்நானம் செய்கிறவர்கள் எந்த புண்ய தீர்த்தங்களினாலும் நீக்கமுடியாத பாவங்களை நீங்கினவராய் பெருவாழ்வு பெற்றுய்வார்.

மாசிமாதம் வதனாரம்பத்தில் ஸ்நானம் செய்த புண்யபலனையும் நூறு யாகங்களை விதிப்படி செய்தவர் பெறும் பலனையும் சீர்தூக்கிப்பார்த்தால் பின் சொன்னவற்றை விட முன் சொன்ன பலன் கோடிக் கணக்கான உயர்வைப் பெறுகின்றன என சுருதி நூல் முழங்குகிறது.

பிறந்தது முதல் அந்திய காலம் வரையில் ஒருதரமாவது திருச் செயந்திபுரத்துக்கு கார்த்திகை மாதக் கார்த்திகை நக்ஷத்திரத்தில் வந்து வதனாரம்ப தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து அன்று நாள் முழுவதும் உபவாசமிருந்து பசுவின் நெய்யினால் தீபங்கள் ஏற்றிவைத்து செந்திலாதிபனைத் தரிசித்துக் கோயில் தீபம் பார்ப்பவர்களுக்குப் பிறப்பே கிடையாது என்பது நிச்சயம்.

செய்யுள் 26.

சிந்துகன் னகர மல்லாற் சிறந்தவூ ரிருந்தா னெய்யாற்
கந்தன்முன் றீப மேற்றக் கற்பிக்கு முதியோர் தாமு
முந்துவான் பரியின் வேள்வி முற்றினோர் கதியை யன்னோர்
விந்தையாற் பெறுவ ரென்றே வேதமோ யாது சாற்றும்.

செயந்தீபுரமாகிய இப்புண்ணிய தலத்திலேயிருந்து மேற் சொல்லிய கார்த்திகை நக்ஷத்திரத்திலே முருகக் கடவுளுக்கு முன் னால் பசுவின் நெய்யால் தீபம் போடும்படி சொல்லுகின்றவர்களும் பிரசாரம் செய்பவர்களும் மிகவுயர்ந்த அஸ்வமேத யாகத்தைச் செய்த நற்பயனை யெல்லாம் பெறுவர் என வேதம்ஓயாது சாற்று கின்றன.

சுருதிகளும் பல இடங்களில் முழங்குகின்றன.

செய்யுள் 27.

அற்றைநாட் கந்தன்மேவு மாலய முழுதுஞ் சோதி
பெற்றவான் றீபம் பார்க்கும் பெட்பினோர் தங்கட் கெல்லா
மற்றுபோர் சன்ன மின்றால் வானுனீர் விரிப்பதென்னே
கற்றுளோ ரேனுங் கல்லாக் கடைநிலத் துற்றோரேனும்.

செய்யுள் 28.

சென்னியா னுடைய வையன் செயந்தியம் பதியினீங்கா
தன்னிலை பொருந்து மேலோ ரடங்கலுங் கயிலையீசன்
பொன்னடி பெறுவ ரீது புகன்றது வாய்மை யென்னப்
பன்னினன் கடவு ளோர்க்குப் பதுமப்பூந் தளிமக் கோமான்.

படித்தவராயினும் கல்லாத கசடர்களாயினும் அவர்கள் மேற் சொன்ன கிருத்திகை தினத்தில் செந்திலாதிபன் திருக்கோயில் தீபம் கண்டு தரிசிப்போர்களாயின் அவர்கள் தம்முடைய பிறப் பெனும் நோய்நீங்கி தேவர்கள் வியக்க வானுலகத்தில்வாழுவர்.

திருச்செந்திலில், நிலையாக இருந்து, சண்முகக் கடவுள் பொற்பதம் கண்டு வாழ்பவர்கள் கைலாசபதியின் திருவடிப்பேற்

றினைப் பெறுவர். இதுசத்யம் எனத் தேவர்களுக்குப் பிரமன் உப தேசித்தான்.

ஒரு நாள், இரண்டு நாள், மூன்று நாள், புண்ணிய நாள் இத்யாதி தினங்களில் எதிலும் செந்திலம்பதி சேர்ந்து தாம் அறியாமல் செய்த பாவங்களை நீக்கக்கருதி ஸ்ரீ முருகனைத் தரிசித்தவர்கள் தங்களின் பாவங்களினின்று விடுபட்டு புண்ணியப் பேறெய்துகிறார்கள்.

தேவர்களே!

செய்யுள் 30.

கருதரு மேலை வீட்டுக் கேறுதற்காக வைத்த
பொருவரு மேணி சிந்து புரமெனப் பிரமன் விண்ணோர்
தெரிதர நுட்ப மாகத் தேற்றின னென வியாதன்
பரிவுடன் சுகற்குத் தேறப் பகுத்தனன் றெருகுத்து மாதோ.

இச் செயந்தீபுரமானது மோக்ஷ வீட்டுக்கு எணிபோல விளங்குகிறது. இந்த உண்மைகளை நீங்கள் நன்கு தெரியும் வரைக்கும் உங்களுக்குச் சொன்னேம் என பிரமன் மொழிந்தான் என்று வியாசர் சுகருக்கு கூறியருளினதை சூதர் நைமி சாரண்யவாசிகளுக்கு உபதேசித்தருளினர்.

17-வது பிரமன் தேவர்களுக்கு உபதேசித்த அத்தியாயம் முற்றிற்று.

---

## 18-வது சுகப்ரம்ஹரிஷி பூஜை செய்த அத்[illegible]யம்.

தவத்துக்குச் சிகரமாகி விளங்கும் நைமிசாரண்யதில் இந்த முனிவர் கூட்டங்கள் கேட்க சுருதிவல்ல சூதமுனிவன் சந்திர சேகரக் கடவுளுடைய திருவடிகளைத் தியானிக்க ஸ்ரீ முருகக்

கடவுளுடைய திருவடிகளை மனதுள் வைத்துத் துதிக்கக் கூறியரு ளுகின்றார். நைமிசாரண்ய வாசிகளே.

வேதங்களில் முதிர்ந்து விஷ்ணு ரூபத்தையடைந்த ஒப்பற்ற வியாச பகவான் சுகமுனிவன் கேட்க செயந்திபுரத்திலுள்ள ஸ்ரீ குமரக்கடவுளின் சரித்திரங்களை யெல்லாம் ஒன்றாகசேர்த்து உப தேசமாக கூறியருளுகிறார்.

சுகமுனியே

இப்பரத கண்டத்திலே பதினெட்டு தீர்த்தங்கள் ஸ்ரீகுமரக் கடவுளது திருவருள் போல விளங்குகிறது. அந்த தலத்தின் பெயர்களை விடியற்காலையில் எழுந்து கை கால் சுத்தி செய்து, விபூதி தரித்து சொல்லுகின்ற யாவர்களும், ஸ்ரீமுருகனுடைய பேரருளைப் பெற்று, தன், பாவமூட்டைகளை அகற்றுவார்கள்.

எழு மேகங்களும், கூட்டமாகத் தவழ்கின்ற இமய மலையின், பக்கத்திலே அழகுக்கு அழகு செய்வது போல மாக்ஷிமைகொண்டு உயர்ந்து மும்மூர்த்திகளும் காவல்செய்யும் இந்திர நீலம் எனும் க்ஷேத்திரம் இருக்கின்றது. அந்த க்ஷேத்திரத்திலே தேவர்கள் எல் லோரும் ஒன்றாகத் திரண்டு அன்புமிக்க மனத்துடன், தேவ சேனாதிபதி என்னும், திருப்பெயருடன், அங்கு எழுந்தருளியிருக் கும் ஸ்ரீமுருகக் கடவுளுக்கு அழகிய ரத்தினங்களால், இழைக் கப்பட்ட, ரத்தின கிரீடத்தைச்சூட்டி பெருங்கருணை பொருந்திய அபிஷேக குமார சுவாமியெனப் பெயரிட்டு சுருதிஸ்வரம் தவறாது நான்கு வேத கோஷங்களினால் துதித்து வாசனை பொருந்திய சுகந்த மலர்களைச் சொரிந்து வழிபட தேவர்களுக்கும் வழிப்பட்டு விரும்புவோர்களுக்கும், அவரவர் விரும்பியவாறே அருள் செய்து சுருதிகள் துதிக்க வீற்றிருந்தருளுகிறார்.

கங்கைக்கரையில் கனகல தீர்த்தத்தில் மறைகளுக் கெட்டாத முருகவேள் இனிது அமர்ந்து தன்பிதாவாகிய சிவபெருமான் தனக்கு போதித்த நூற்பொருளை யெல்லாம் நன்குணர்ந்து சிவ மாணக்கர் எனும் பெயருடன் வீற்றிருந்து தருளுகிறார்.

பொதியமலையின் மேல்பக்கத்திலே குமாரதாரை ஆற்றில் கரைக்குப் பக்கத்திலே முக்தியை அருளும் அந்தரங்க ஸ்தானத்தில் கல்வி முழுதும் அறிந்த வேத முனிவர்களுக்கு ஆறுமா முகத்துடனிருந்து பாடம் சொல்லிக் கொண்டும் தலைமை பெற்றும் குமாரப்ரும்ஹசாரி எனும் நாமத்துடன் எழுந்தருளி விளங்குகிறார்.

குளிர்ந்த மேகக் கூட்டங்கள் நீங்காத பழநி மலையின் நடுவே திருக்கோயிலில் முதிர்ந்த தனது விருத்தரூபத்தைக் காட்டி நால் முனிவருக்கு மெய்ப் பொருளைப்போதித்து ஞானதேசிகர் எனும் நாமத்துடன் வீற்றிருந்து அருளுகிறார்.

விந்தைமலையின் ஓர் பக்கத்திலிருக்கிற விகாரபட்டணத்திலே தேவேந்திரன் முதலிய தேவர்கள் வணங்க கருணைகூர்ந்து தேவயானையம்மையாரை மணந்த கல்யாணக் கோலத்துடன் விளங்கி வருகிறார்.

சூர்யகுலத்தில் பிறந்த சித்ரசேனன்எனும் அரசன் திருப்பரங்குன்றத்திலே பெரும் தவத்துடனிருக்க அத் தவத்துக்கிரங்கி முருகவேள் அவ்வரசன் முன்தோன்றி சித்ரசேனனே நீ விரும்பியதுயாது என அரசனும் முருகவேளைக் கண்ணாரக்கண்டு தரிசித்து புளங்காங்கிதமுடன் பணிந்து எழுந்து எனையாண்ட வேற்படைக்கடவுளே மதுரையில் சிவபெருமான் விளையாடிய அறுபத்தி நான்கு திருவிளையாடல்களிலுள்ள பெருமைகளை எல்லாம் தமியேன் இனிது தரிசிக்கும்படி நாடக சுருதிநூல் பிரகாரம் நடித்துக் காட்டியருள வேண்டும் அதற்காகவே இத் தவத்தைச் செய்தேன் உய்ந்தேன் என அஞ்சலி செய்து நிற்கும் அவ்வரசன் முன்னால் தேனருவி ஊறுகின்ற திருப்பரங்குன்றிலே அறுபத்தி நான்கு திருவிளையாடலையும் கூத்து முறையால் தனித்தனியாக காட்டியருளி ஸ்ரீ நடன நாரதர் எனப் பெயர் பெற்று விளங்குகிறார்.

தேனருவி பாயும் தென்பொதிகை மலைச்சாரலிலே பதினொரு சிவஸ்தலங்களில் கீழ்பக்கத்திலே உள்ள மங்கலகிரியின் பொற்

சாரலிலே வீற்றிருந்து சிருஷ்ட்டி கர்த்தாவான பிரம தேவன் வணங்க அப்பிரம்மனுக்கு வேலாயுத கடவுள் உலகமனைத்தையும் படைக்கும் தன்மையையும் ஞானம் போதிக்கும் தன்மையையும் போதித்துத் திருவருள் சுரந்து போக மோக்ஷ தியாகி என பெயருடன் வீற்றிருந்து அருளுகிறார்.

தாம்பிரவருணி நதிச் சங்கமத்தா தென்பாகத்திலே யுள்ள கந்த மாதனச் சிகரத்துச்சிறந்து விளங்குகிற திருச்செயந்திபுரத்திலே வீரவாகு வேண்டித்துதிக்க அவ்வீரவாகுவுக்கு நினைப்பதற்கரிய பெரிய விஸ்வரூபத்தினையும் காட்டி என்னாளும்அருள் தரும் விஸ்வரூப மூர்த்தி எனத்திருநாமமும் பெற்று இனிது வீற்றிருந்தருளுகிறார்.

தண்டகாரண்யத்துக் கோதாவரி யாற்றின் தென்பக்த்திலே சீதையைப் பிரிந்த ராமன் மனம்தேறும் பொருட்டு குற்றமிலா நான்கு வாக்கியங்களை உபதேசித்து அங்கு அருளி ராமன்என்னும் நாமத்துடன் அமர்ந்திருக்கிறார்.

மகேந்திரகிரியில் குருங்கத்தின் தென்கிழக்கில் கூர்மக்கல் எனும் க்ஷேத்திரத்தில் வள்ளிதேவநாயகி சமேததேவர்கள் வணங்க வேள் என்னும் நாமத்துடன் வீற்றிருந்து அருளுகிறார்.

சிவசைல மலையிலே சித்தக்ஷேத்திரத்தில் சித்தர்களுக்கும் சனகாதி முனிவர்களுக்கும் குளிகா சித்தியையும் பாதுகாசித்தியையும் ப்ராணாயாம சித்தியையும் போதித்து அனந்தயோகி யோகசுந்தரர் யோகநாதர் சுத்தயோகீசர் யோகசித்தர் எனும் திருநாமங்களுடன் வைதீக மந்திரரூபியாகிய குமாரசுவாமி வீற்றிருந்து அருளுகிறார்.

திரி கூடா சலத்துக்கு வட கிழக்குத் திக்கிலே இலஞ்சியம் பதியில் கபிலர் முதலிய முனிவர்கள் துதிக்க அவர்களுக்கு ஸ்ரீ முருகக் கடவுள் முத்தொழில் முக்கடவுளும் நாமே யெனப் போதித்து வரதராஜன் எனும் நாமத்துடன் வீற்றிருந்து அருளுகிறார்.

விந்திய மலைக்கு மேற்கு உள்ள குமாரவனத்தின் நடுவே நந்த கோபால ரான இடையர்களுக்குள்ளே சீகரன் எனப் பெயர் கொண்ட யாதவர் தலைவன் ஸ்ரீ முருகக் கடவுளைப் பணிந்து சுவாமீ அன்னுள் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா அவதரித்தது முதல் வைகுண்டம் சென்றது வரையுள்ள சம்பவங்களைக்காண ஆசைப் படுகின்றேன். தேவரீர் முத்தொழிலையும் நடத்துகிற வராதலால் தமியேனுக்கிரங்கி அந்தக் காக்ஷிகளை நாட்டியருளவேண்டுமெனப் பிரார்த்தித்த சீகரனுக்கு ஸ்ரீ கிருஷ்ணரூபத்துடன் பலகாக்ஷிகளையும் காட்டியருளி சீகரக் கடவுள் எனும் திருநாமத்தையும் சூட்டிக்கொண்டு வீற்றிருந்தருளுகிருர்.

கங்கைக்கு வடக்கே சிங்கிபேரி நகரத்தில் கோதண்டராமனைத் துதித்து வாழும் குகன் எனும் படகோட்டிக்கு அவன் பிரார்த்தித்தவாறு கோதண்டராமன் திருவுருவங்காட்டி ஞானமுக்தியையும் கொடுத்து வேதமந்திர குக மூர்த்தி எனப் பெயர்பூண்டு அருளுகிருர்.

விருத்தாசலத்திலே சிவசந்நிதானத்திலே பொன்னன் பெற்ற மகனுகிய கசன் என்பவனுக்கு அவன் பிரார்த்தித்தபடி ஆகருஷணம் அதிர்சயம் அஞ்சனம் எனும் மூன்று மஹாவித்தைகளையும் வசியம் வாதம் வயத்தம்பம் என்கிற மந்திர வித்தைகளையும் முறையே போதித்து மாயாமய குமாரர் என்ற திருநாமத்துடன் வீற்றிருந்தருளுகிருர்.

மூகாம்புரியிலே யமனது ஆஞ்ஞையைக் கடக்க விரும்பிய கபிலமுனிக்கு மந்திரம் பதம்சிறந்த குமாரதந்திரம் முதலியவற்றை முறையாக உபதேசித்து சகல லோக குரு எனும் நாமத்துடன் விளங்கி அருளுகிருர்.

துங்கபத்திரை நதிக்கு வடக்கில் தவத்தில் சிறந்த கௌசிக முனிவனுக்கு சர்வஞானத்தையும் உபதேசித்து அருளி ஞான தேசிகன் எனும் நாமத்துடன் விளங்கி அருளுகிருர்.

நைமிசாரண்ய முனிவரர்களே!

வேற்படை குமரன் மேலே சொல்லிய பதினெட்டுத் திருப்பதி களிலும், விளங்குகின்ற வடிவங்களை யெல்லாம், ஜெயந்திபுரத்தில், வீரவாகு பிரார்த்திக்க வீரவாகுவுக்கு காட்டியருளினர். சூர சம்ஹார வேலாயுதப் பெருமான் வரும், பிரம கற்பத்திலே, தேவர் கள், தேவலோகத்து முனிவரர்கள், பிரார்த்திக்க, முன் சொல்லிய பதினெட்டு ஸ்தலங்களிலு முள்ள, ரூபங்களைக் காட்டி யருளுவார். என, வேதவியாசர் சுகருக்குக் கூறி, சுகனே, இச்செயந்திபுரத் தின், நற்சரித்திரங்களை விருப்பமுடன் உனக்கு உபதேசித்தேன். நீயும், மஹா பாக்யவானுகினை. நானும், மஹா புண்யத்தை அடைந்தேன். க்ஷேமமாக இரு, என்று ஆசிர்வதித்து, ஆசனம் விட்டு எழுந்து இமயம் நோக்கி, தவத்துக்குச் சென்றான்.

சுகமுனிவரும், வியாசர் சென்ற திக்கு நோக்கிப் பல முறை வணங்கி எழுந்து ஜெயந்திபுரம் நோக்கி, முருகக்கடவுளுடைய திரு வடிகளை, மனத்தாமரையிருத்தி, பிதாவான வியாச முனிவரது செந்தாமறை போன்ற திருமுகத்திலுள்ள, வாயினுல், ஜெயந்திபுர மஹாத்மியத்தைக் கேட்டு, உளம், மகிழ்ந்து, பேரானந்தப் பெரு வாழ்வுற்று, செயந்திபுரத்தைத் தரிசிப்பதற்கு பேராவல் கொண்டு, இமயமலைச் சாரல் விட்டு, நீங்கி, மேல் சொல்லிய ஹரித்வாரம் முதலிய பதினெட்டு க்ஷேத்திரங்களையும், மற்றுமுள்ள, சிவஸ்தலங் களையும், திருவரங்கம் முதலிய விஷ்ணு ஸ்தலங்களையும் தரிசித்துக் கொண்டு, ஜீவநதியான தாம்பரவருணி நதியை அடைந்து அதில், வேத முறைப்படி ஸ்நானம் செய்து திருச் செயந்திபுா எல்லையை அடைந்து, எல்லையிலே இருந்து, திருக்கோயிலின் திருக்கோபுரத் தைக் கண்ட மாத்திரத்திலே, அடிமுடிபட வணங்கி எழுந்து, திருச் செந்திலம்பதி எல்லையை வலம்வந்து, நகரினுள் பிரவேசிக்கவும் சுகமுனிவன், வரவு தெரிந்த மறையுணர் திரிசுதந்திரர் யாவர்க ளும் ஒன்ருகக் கூடி, அம்முனிவரை, வேத கோஷத்துடன் வர வேற்று, அர்க்ய முதலியன வற்றையும் கொடுத்து உபசரிக்கவும், சுகமுனிவர் அத்திரிசுதந்திரர்களை வணங்கி, அவர்களுடன் கந்த மாதனச் சிகரத்துற்ற திருக்கோயிலை உடலால் வலம் வந்து, கந்த

புஷ்கரணி தீர்த்த முதல் வதனரம்ப தீர்த்தம் மற்றுமுள்ள இருபத்தி நான்கு தீர்த்தங்களிலும், வேதகோஷத்துடனும், சங்கல்பத்துடனும் ஸ்நானம் செய்து திருக்கோயில் வந்து சண்முக விலாசத்தை வலம் வந்து நமஸ்கரித்து அங்குற்ற திரிசுதந்திரர்கள் வேதகோஷங் களை முழங்க, அவர்களுடன் திருக்கோயிலினுட் சென்று முதலில், ஸ்ரீ மஹா கணபதியை வணங்கித் தரிசித்து அர்ச்சித்துப் பின்னர், வீரவாகு முதலிய நவ, வீரர்களையும் அர்ச்சித்து வணங்கி, ஜகந் நாதர் முதலிய பஞ்ச லிங்கங்களையும் வணங்கி, அர்ச்சித்து வணங்கி வலமாக வந்து, வள்ளி, தேவநாயகி காந்தனை ஸ்ரீ முருகக்கடவுள் திருச்சன்னதி வந்து சர்வலோக நாயகனும் முருகக்கடவுளைக் கண் டதும் அடியற்ற மரம்போல வீழ்ந்து, நமஸ்கரித்து, பெருமானே உம்மைத் தரிசிக்க என்ன புண்ணியம் செய்தேன் என நாக்குழற பல பல, தோத்திரம் செய்து, அங்கு நின்ற திரிசுதந்திரர்களை வணங்கி, திரிசுதந்திரர்களே! சகல காரண மூர்த்தியாகிய, முருகக் கடவுளைப் பூஜிக்க ஆசைப்படுகிறேன் என்று சொல்லவும், திரி சுதந்திரர்கள் மகிழ்வுடன், நறுமலர்கள் கொண்டும், கந்தபுஷ்கரணி தீர்த்தம் கொண்டும், பூஜைக்குரிய எல்லாவற்றையும் கொண்டு வந்து கொடுக்க, முனிவர் சந்தோஷத்துடன் பெற்று, சர்வலோக நாதனை வேதவிதிப்படி பூஜித்து, வாசனை பொருந்திய மலர்களால் அர்ச்சித்து, மெய்மறந்து, துதிக்கின்றார்.

செய்யுள் 61.

பன்னிரு கரத்தாய் போற்றி பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணையாறு முகப்பரம் பொருளே போற்றி
கன்னிய ரிருவர் நீங்காக் கருணைவா ரிதியே போற்றி
யென்னிரு கண்ணே கண்ணு ளிருக்குமா மணியே போற்றி.

செய்யுள் 62.

கருணைமா ருதுள் ளூறுங் கண்கள்பன் னிரண்டி னாலே
யிருவினை களைந்த மேலோர்க் கினியவா னந்த மெல்லாம்
வரன்முறை பெருக்கி யன்னர் மனமெனும் கோயிற் றூண்டாத்
திருவிளக் கொளியாம் வைவேற் செயந்தியெம் பதியாய்போற்றி.

உலகநாயகரே, லெக்ஷிமியையும், சக்ரத்தையு முடைய, மஹாவிஷ்ணுவாலும், சதுர்முகப் பிரமனாலும், தோள்வலி, வீர வாகுவாலும், வெள்ளைத் தலைகளுடைய சமுத்திர அலைகளாலும், வணங்கக்கூடிய, உபய சரணாரவிந்தத்தை யுடையவரோ, மயில் வாஹனக்கடவுளே, பார்வதிதேவியின் சின்னக்குழந்தையே சகல, ஜீவாத்மாக்களுக்கும் குருவாக, விளங்கக் கூடியவரே, என்னைக் காக்கவேண்டும்.

ஒரு உடம்பாகியமரம், இருவினைகளாகிய, இரண்டு கப்புக் களுடன், மும்மலமாகிய, மூன்று வேர்களை வைத்து, தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம் எனப்படும், நான்கு தருமங்களாகிய, பழங்கள் பழுத்து பஞ்ச பூதங்களாகிய ஐந்து சிறு கொம்புகளுடை யதாய், காம, க்ரோத, லோப, மோக, மத, மாச்சர்யம் எனும் ஆறு, காமாதியாகிய, ஆறு தழைகளை வைத்து, சத்த தாதுக் கள் ஆகிய, ஏழுதோலுள்ளதாய், எட்டாகிய பூக்களைக் கொண்டு, ஒன்பது கணுக்கள் வைத்து, பத்து திசைகளிலும், நிழலைத் தரு கின்ற, பலமரங்களையுடைய ஜெயந்தீபுரத்தின் கடவுளே, எனை காக்கவேண்டும்.

கம் எனும் சூரியனாகி, ஒளியாகி, கம் எனும் இந்திரியங்களைக் கடந்து, ககர், எனும் தேவர்கள் சேனாதிபதியாய், மயிலை வாகன மாகக் கொண்டு கம், எனும் இன்ப, வடிவமாய், கம் எனும் ஆகா யத்துக்கும், முதல் இடை, கடைகளாய், தமியேனுக்கு, உபய பா தங்களாகிய உயர்ந்த கதியைக்காட்டி, தமியேனை ஆண்டருளிய சோதிவேற் கரத்துச் செயந்தீபுரச் சக்ரவர்த்திப் பெருமானே, எனைக் காக்கவேண்டும்.

மன வாக்குக்கு எட்டாத ஞானவடிவமே, சிவபெருமானது திருநெற்றிக் கண்ணிலிருந்து, ஆறு பொறிவடிவாக, எழுந்தருளி, குருமுகூர்த்தமாக, அமைந்தவரே, ஆனந்தவடிவே, இருவினை களை ஒழித்தும், மதிநுட்பம் அழியாத இளமைவடிவுள்ள, ஞானி களின், தியானத்தில் அமர்ந்தவரே, சரவணப் பொய்கையில்,

அண்டங்களை, உண்டாக்கி, அதனுள், கோ, வெனும் பசுக்களுக்குப் பதியுமாகி, குகை, யெனும் அன்பர்களின் மனக்குகையே, வாசஸ்த்தானமாகி திருவாக்காகிய, கோவினுலும், திருக்கண்ணுகிய கோவினுலும், புவனங்களிலுள்ள சங்கம ஸ்த்தாவரங்களையெல்லாம் நாயகனுகக்காத்து, தமியேனுடைய இருதய தாமரையினுள்ளே வசிக்கின்ற, கடப்பமாலையை அணிந்த குமரக் கடவுளே, உமது திருவடிகள் என்னைக், காக்க வேண்டும்.

ஞானவடிவாகி, ஞானகாரணமான பார்வதிதேவியின், திருமுலைப்பாலுக்கு இனிய குழந்தையாகி, சிவஞான நூலெனும், பாற்கடலின் நடுச்சுழிய தாகி, பெரியோர்களுக்கு ஞானமெனும் நிழலைக்கொடுக்க, நல்ல இடமுமாகி, ஞானசூரியனுகி, ஞானிகளுக்கும் எட்டாத ஞானத்தையுடைய வள்ளி, தேவநாயகி ஆகிய இருசக்திகளோடும் இருந்து எல்லாவற்றையும் காத்து, ஞானம் போதிப்பதற்கு, கல்லாலின்கிழ் அமர்ந்து, சனகாதி முதலிய நால்வர்களுக்கு, மௌனத்துடன், சின்முத்திரை காட்டி விளங்கிய பரமேஸ்வரனுக்கும், ஞானத்தைப் போதித்த குருநாதனே உமது திருவடிகள், எனைக்காக்க வேண்டும்.

ஒளி வீசுகின்ற பாலசூரியன் போன்று, அச்சூரியனில் கலந்து விளங்குபவராகி, பிரகாசிக்கின்ற பால ஜோதியோடு பிரம்ஹ, விஷ்ணு, ருத்திர வடிவங்களுமாகி, அவ்வடிவங்களுக்குரிய படைத்தல், காத்தல், சங்கரித்தல் எனும் முத்தொழிலையும், செய்பவராகி, சிவபெருமானுடைய இருதயப் பேரிடத்திலே நிறைந்து, பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறுகுதல், நசித்தல், எனும் ஆறுவிகாரங்கள், நீங்கியும், நினைப்பவர்களின், உள்ளத்தே, கோயிலாகக் கொண்டு வீற்றிருந்தும், தமியேனுடைய, நாவிலும், தங்குகின்ற குமாரப் பெருமானே, உமது திருவடிகள் என்னைக் காக்கவேண்டும்.

காமம், க்ரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம், எனும், காமம் ஆறும், மேலே, சொல்லிய, பிறத்தல் இருத்தல்

வளர்தல் திரிதல், குறுகுதல், நசித்தல் முதலிய பருவங்கள் ஆறும், அன்னமயம், ப்ராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்த மயம், அதீதம் எனும் கோசங்கள் ஆறும் தித்திப்பு, புளிப்பு, உப்பு, உறப்பு, துவர்ப்பு, கைப்பு, எனும் சுவைகள் ஆறும், சாங் கியம் வைசேடிகம், யோகம், ஞாயம், மீமாம்சை, வேதாந்தம், ஆகிய சூத்திரங்கள் ஆறும், இத்யாதிகளை, ஒரே உருவத்தில் கொண்ட ஆறுமுகக் கடவுளே, உமது பாத தாமரைகள் எனைக் காக்கவேண்டும்.

கிருஷ்ணபக்ஷம், சுக்லபக்ஷம், எனும், இருபக்ஷங்களை, கருப்பு நூல், வெள்ளை நூல், கலந்த சரடாக்கி, அதனிலே, முன்னூற்று, அறுபத்தி ஐந்து தினங்களை முன்னூற்று, அறுபத்தி ஐந்து மணி களாகக்கோத்து மாலைபோல, பல மாலைகளையும், யுகங்கள்தோ றும் அணிந்து, இருசக்திகளை, இருபக்கத்திலும் உடையவராகி, சூரன்உருவமாகிய மாமரத்துடன், தாரகன், கிரவுஞ்சன், முதலி யன, அழியும்படி, கூரிய, வேற்படையைக் கொண்ட குமாரக் கடவுளின், திருவடிவங்கள், என்னைக் காக்கவேண்டும்.

சொல்லுதற் கரிதான, முற்றறிவு, வரம்பில்இன்பம் இயற் கை உணர்வு, சுவதந்தரமுடைமை அழிவிலாற்றல், வரம்பிலாற் றல், எனும் ஆறு குணங்களோடு, ஐஸ்வரியம், வீர்யம், திரு ஞானம், புகழ், சத்வ, ரஜோ, தமோ, எனும் முக்குணங்களையும், கடந்து, தமது ஆக்ஞையைக், கொண்ட, மூத்தேவர்களால், பூமி யை ஆள்வித்து திரிசுதந்திரர்கள், சிறப்புடன் பூஜிக்க, வள்ளியம் மையை, ஒருபாங்கில்வைத்த, கருணையங்கடலே, உமது பாதமலர் கள் எனைக்காக்க வேண்டும்.

வேதியர்கள் செய்யும் யாகங்களில் சேகரித்த ஆகுதிகளைப் பெற அழைக்கும் மந்திரத்தின் ஸ்வரூபமே அவ்வேதியர்களுக்கு, வேள்வியின், பலனை அளித்து அருள்புரியும் ஆறுமுகக் கடவுளே வாசனைமலர்களால் அர்ச்சிக்கப்படுகிற உமது பாததாமரைகளை நம்பினேன், எனைக்காத்தருள வேண்டும்.

குகை எனும், இருதய வீட்டில் குகம் எனும் ரகசியப் பொருளாகி மலைகளில் உறைபவ ராயும், யோகியரது, உள்ளக் குகையில், மனமகிழ்ந்து கருணையோடமரும், சண்முகக் கடவுளே உம்மை நமஸ்க்கரிக்கிறேன், காக்கவேண்டும்.

† பரம பதியே சிகையாகவும் எமன் சிரசாகவும், பிரம்மா மேல் வாயாகவும், யாகபுருஷன் கீழ்வாயாகவும், மஹாவிஷ்ணு மனமாகவும், அறுபது வருஷங்கள் கோசமாகவும், அஸ்வனி தேவர்கள், முன்கால் ஆகவும், அத்திரியும், மித்திரனும் வயறும், நடுவுமாகவும், வருணன் பின்கால் ஆகவும், அக்னி வாலிலுள்ள முதற்கணுவாகவும், இந்திரன் இரண்டாவது கணுவாகவும், தசப் பிரமர்கள் மூன்ருவது கணுவாகவும், அபயத்தெய்வம் நாலாவது கணுவாகவும் ஆகி, உலகத்தை காத்து விளங்குகின்ற சிசுகுமாரனெனப்படும், சின்னக்குழந்தையான, முருகக் கடவுளே, உமது திருவடிகள் என்னைக்காக்க வேண்டும்.

வள்ளியம்மை, தேவநாயகி எனும் இரு சக்திகளுடன் கையில் வேற்படையாகிற சக்தியையும் தரித்து மந்த்ரசக்தி, உற்சாகசக்தி, பிரபு சக்தி எனும் இம்மூன்று சக்திகளில் சிறந்து, அரசன் தன்மையாய், ஜீவர்களுக்கு, தர்மார்த்த காமங்களை, செவ்வனே உதவி அருளி, அச்சிவர்களை இன்புறச் செய்து கருணையிற் சிறந்து தம்மை வழிபடுவோர்க்கு மாதா, பிதா, குருவாகி விளங்கி, அவர்களுக்கு பேரின்ப வீட்டினை காட்டியருளுகின்ற கடப்பமாலையணிந்த சுவாமி நாதனுடைய உபய சரணரவிந்தங்கள் ஏன்னைக் காக்கவேண்டும்.

சரீரம், மனம், வாக்கு என்னும் இம்மூன்றும், மாறுபடும் தீவினைகளை நீக்கி, பத்தியுடனே திரிகரணங்களும் ஒரு நெறியில் நின்று வழிபடுவோருக்கு திருக்கருணை காட்டி, மல மாயைகளை நீக்கி, தன்னுடைய பாததாமரைக் கோயிலிலே, அரசாக விளங்

---

† சிசுமாரன் / சிசுகுமாரன் } என்கிறவாக்யம், யஜுர்வேத ஆருணத்தில் இரண்டாவது ப்ரஸ்னம் 21. பஞ்சாசதியில் இந்த வாக்யம் கண்டுகொள்க.

கும்படி அருள்செய்து என்னையும் ஆண்டருளி மயில் வாகனத் தேறிய கதிர்வேலாயுதக் கடவுளின் உபய சரணாரவிந்தங்கள் என்னைக் காக்கவேண்டும்.

மனிதரில் நான்கு வருணங்கள் வகுத்து ஒவ்வொரு வருணங் களிலும், நான்கு செய்கைகள் வகுத்து முதற்சொல்லிய வருணங் களில் வழுவாது நெறியுடன் நின்று வணங்குபவர்களின் சீர்த்தி யை, நான்கு திக்குகளிலும் பரவச்செய்து அன்னவர்க்கு தருமம் ஆதி, நான்கு வகை பயன்களையும் அருளி, காத்துவருகின்ற குமர மூர்த்தியின் உபய சரணாரவிந்தங்கள் எனைக் காக்கவேண்டும்.

யாகங்களில் ஓதுகின்ற நான்கு மந்திரங்களில், நான்கு அக்ஷரங்களால் விளங்குகின்ற இரண்டு மந்திரங்களும், இரண்டு அக்ஷரங்களால் விளங்குகிற ஒரு மந்திரமும், ஐந்து அக்ஷரங்களால் விளங்குகின்ற ஒரு மந்திரமும் தானே ஆகி, ·ஹோமங்களின் உட் பொருளாய் மந்திரங்களுமாகி, எல்லா ஆகுதிகளையும் கொடுத்து, ஏனைய கிரியைகளையும் செய்கின்ற கர்த்தாக்களுக்கு, அவர்கள் மேலே சொல்லிய யாக கிரியைகளைச் செவ்வனே செய்த பின்னர், அவர்களுக்கு அழியாக்கதியை நேரே காட்டும் கடப்பமாலையைத் தரித்தவரே, உமது திருவடி என்னைக் காக்கவேண்டும்,

பெரியோர்கள், பிரம்மலோகம் முதற்கொண்டு சகல உலக வாழ்க்கைகளை, அவைகள் சத்தில்லாதது கண்டு, அவைகளை அறவே வெறுத்து உமது அருள்கடலில் மூழ்கியிருக்க அவ்வா றில்லாத பாவியேனாகிய என்னிடத்தும் மேலான அனுக்ரஹம் செய்து என்னுள்ளத்தில் அன்பு பெருகச்செய்த குமார மூர்த்தியே உமது இணையில்லா திருவடிகளைப் பணிகின்றேன், என்னைக் காக்கவேண்டும்.

நடுச்சமுத்திரத்திலே அமுக்கப்பட்ட குடத்தில் உள்ளும் புற மும், எப்படி அச்சமுத்திரத்தின் நீர் சூழ்ந்திருக்கிறதோ அதுபோல வும், தரையில் வைக்கப்பட்டிருக்கிற குடத்தில், அக்குடம் உருவா யிருக்கும்பொழுது ஆகாயம் அதனுள் இருந்து அக்குடம் அழிந்த பின்னும், ஆகாயம் அப்படியே இருப்பது போலவும், சமுத்திரத்

தின் மேலும் கீழும் நிறைந்த ஜலம் போலவும் எங்கும் வியாபித்து சூரனது மாமரவடிவைப் பிளந்து வெற்றிவேற் படையைத் தாங்கிய குமார சுவாமியே என்னைக் காக்கவேண்டும்.

தத்துவங்கள் இருபத்தைந்து எனச் சொல்வோர்களுக்கும், தத்துவங்கள் இருபத்தாறு எனச் சொல்வோர்களுக்கும், தத்துவங்கள் இருபத்தேழு எனச் சொல்வோர்களுக்கும் அந்தந்த, தத்துவ ஸ்வரூபமாக நின்ற சண்முகக் கடவுளே என்னைக் காக்கவேண்டும்.

துவம் என்னும் சொல்லிற்கு வாச்சியமான சிஷ்யனுக்கு, திருந்திய பரத்வமுடைய சுத்தமான, தத் எனும் சொல்லிற்கு லக்ஷியமான கடவுளை தொடர்பினேடு உணர்த்திப் பின், அசி எனும் சொல்லால் ஒன்ருக்குகிற சத்திய ஞான குருவாகிய கதிர் வேற் குமரரே என்னைக் காக்கவேண்டும்.

முன் சொல்லிய பதினெட்டுப் பதியில் எழுந்தருளியிருக்கின்ற ரூபங்கள் அனைத்தும் ஒருங்கு சேர்ந்து, ஒரே வடிவமாக இச்செயந்தியம்பதியில் எழுந்தருளி யிருப்பவரே, விராட் ஸ்வரூபமாகி மன மகிழ அனைத்துமாகி ஒன்ருகி நின்று மாயாமலத்தை அறுத்தவரது மனத்தாமரையிலமரும் வண்டே, வேதங்களால் அளவிடப்படாத வேற்படைக் குமரேச ன, என்னைக் காக்கவேண்டும்.

சொல்லுதற் கரிதான ஞான முக்தியின் ஜோதி விளக்கே, பூதேவியின் திலகமே, மேலான இன்பத் தெளிவே, துன்பம் நீக்கி என்னை அடிமை கொண்ட அற்புத ஸ்வரூபமே, இன்று உமது மிருதுவான பாதமலர்களை எனது சிரசின்மேல் கொள்வதற்கு ஆசை கொண்டு வந்தேன். எனப் பிரார்த்தித்து, சிலம்பும், தண்டையும் ஒலிக்கும் குமரவேள் திருவடியில் புஷ்பாஞ்சலி செய்து மனம் நெகிழ அடி முடி பட வீழ்ந்து வணங்கினர்.

அவ்வாறு வணங்கிக் கிடந்த குறைவில்லாத சுகமுனிவனை, குமரக்கடவுள் தனது திருக்கரம் நீட்டி எடுத்து கடப்பமாலையைத் தரித்திருக்கின்ற தமது திருமார்பிலே இறுகத் தழுவி, தவத்தின் மேம்பட்ட சுகமுனிவனே, நீ மெய்யன்பினுல் துதித்த, வேத, சார

தோத்திரங்களே யெல்லாம் சந்தோஷத்துடன் அங்கீகரித்தோம். என்று, வையமனைத்தும் ஈன்றெடுத்த பார்வதி தேவியின் திருக் குமாரர் சொல்லியருளி பின்னும் கூறுகிறூர்.

நூல்கள் சொல்லுகின்ற தவத்தின் மேலாய சுகனே நீ இங்கே சொல்லிய தோத்திரங்களே யெல்லாம், படித்து மகிழ்ந்து, துதிப் பவர்களுக்கு நமது வீரவாகுவே அவர்களின் உள்ளக் கருத்தில் உற்றவைகளே யெல்லாம் கொடுத்தருளுவான் என பூரண ஞானி களுக்கும் எட்டாத குமரவேள் ஆக்ஞை செய்தார்.

நம்மிடம் வந்து, நம்மை தோத்திரம் செய்த சுகமுனியே உலகத்தவர்க்கு உனது காக்ஷியாலும், பேச்சினுலும், நினைப்பினு லும், ஸ்பரிசத்தினுலும் தருமம் முதலிய நாற்பயனையும் சிறப்பாக அருளி, உயர்ந்த ஜீவன் முக்தனுகி இருக்கக்கடவாய் என, முருகக் கடவுள் அனுக்கிரஹித்து விடை கொடுக்க, இசை பொருந்திய வேத முணர்ந்த சுகமுனிவன் இரு கரங்கள் கூப்பி துதித்து, ஆண்டவன் கொடுத்த விடையைப் பிரியாத விடை யென மனதில் கொண்டு தவத்துக்கு ஏகினுன்.

முக்குற்றங்களேயும் ஒழித்த நைமிசாரண்ய முனிவரர்களே, பூரண தவத்தையுடைய சுகமுனிவனுக்கு விடைகொடுத்து அனுப் பிய பின்னர், முருகக்கடவுள், தமது ஜெயநதிபுரத்திலே வழிபட்ட வர்களுக்கெல்லாம் அருள் செய்து அமர்ந்திருக்கின்றூர். சிவ குமாரரான முருகக்கடவுளேப் பூஜை செய்யும் கீர்த்திகளேப் பேசு கின்ற உங்களிடத்து, உற்றுரைத்த சரித்திரமே கதியுண்டாக்கும். சத்யம். சத்யம். எனச் சூதமுனிவர் கூறி, மேலும் கூறு கின்றூர்.

நைமிசாரண்ய முனிவரர்களே,

வியாச முனிவர் சுகமுனிவனுக்குச் சொல்லிய இச்சரித் திரத்தை கருத்துடன் கேழ்க்கிறவர்களுக்கு அறம் முதலிய நான் கும் முறையே வந்தெய்தும். இத்தல புராணத்தை எழுதி தான மாகக் கொடுப்பவர்களும் இப்பரத கண்டத்தை தானம் கொடுத்

தவர் பெறும் பலனைப் பெறுவர். இத்தானத்தை வாங்கியவரும் கொடுத்தவர் பெறும் பலனைப் பெறுவர்.

இச்செயந்திபுரத்துத் தலபுராணத்தை குமரனது வடிவமாக எண்ணி பாவித்து பூஜிக்கும பெரியோர்களுக்கு வேலாயுதப் பெருமான் அருள் நோக்குடனிருந்து, அவர்களுக்கு நான்குவித தர்மங்களையும் அருளுவர். இத்தலபுராணமிருக்கும் வீடுகள் தோறும், ஸ்ரீதேவியானவள் தாமரையிலும், சங்கு, சக்கரம் தரித்த மஹாவிஷ்ணுவினது மார்பிலும் வாழ்ந்து வருவதுபோல் மகிழ்ந்து, வாழ்ந்து வருகிறாள்.

ஜெயந்திபுர மான்மியத்தை தினம், தினம் பாராயணம் செய்பவர்கள் நிறைந்த செல்வத்துடனும், நற்புத்ரசந்தானங்களுடனும், நெடுநாள் வாழ்வார்கள். சுவாமி சன்னிதானத்திலே குருமுகமாக இச்செயந்திபுர மான்மியத்தில், ஒரு அத்யாயமேனும், ஆரம்ப முதல் முடிவுவரை கேழ்ப்பவர்கள், மேலான அஸ்வமேத யாகம் செய்வதினாலுண்டாகும் பயனை அடைவர். சுத்தமான இப்புராணத்தை சந்நிதிமுன் மூன்று தடவை கேட்பவர்கள் எப்படிப்பட்ட மலடாயினும், புத்ரசந்தானத்தை அடைந்து குபேர சம்பத்துடன் வாழ்வார்கள்.

நைமிசாரண்ய முனிவர்களே,

இருபத்திநான்கு தீர்த்தங்களையும், ஜகந்நாதரையும் விஷ்ணுவையும், குமரக்கடவுளையும், வீரவாகு முதலிய வீரர்களையும், வல்லீ, தேவநாயகியாரையும், மயிலையும், வேலாயுதத்தையும், திருக்கோயிலையும், கந்தமாதன மலையையும், திரிசுதந்திரர்களையும், நீங்கள் வருஷந்தோறும் சென்று வழிபடுங்கள் எனச் சூத முனிவர் நைமிசாரண்ய வாசிகளுக்கு அன்புடன் உபதேசித்து, இந்நற்சரித்திரத்தை பூர்த்தியாகக் கூறி முடித்து, நைமிசாரண்ய வாசிகளால் வணங்கித் துதிக்கப்பட்ட சூதர், அம்முனிவர்ளிடம் விடைபெற்று தவத்தைச் சார்ந்தார்.

வேல் வாழி. மயில் வாழி.

---

### வாழ்த்து.

மயில்வாழி தகர்வாழி சேவல்வாழி
மனுவணைய திரிசுதந்தி ரத்தர்வாழி
குயில்வாழு மொழித்தெய்வ யானைவாழி
குறவர்குலக் கொடிவாழி கொடுஞ்சூர்மாய்த்த
அயில்வாழி செயந்திபுரத் துற்றோர்வாழி
ஆறுமுகப் பெருமான்றன் கருணைவாழி
பயில்வான்மை முகில்வாழி புராணங்கேட்போர்
படிப்போர்கள் கிளைகளெல்லாம் வாழிமாதோ.

---

18-வது சுகப்ரம்ஹரிஷி பூஜித்த அத்யாயம் முற்றிற்று.

சுபம். சுபம். சுபம்.



# திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலயத்தில் நடைபெறும் விசேஷ தரிசன தினங்கள்.

---

1. ஒவ்வொரு மாதமும் வருகிற கிருத்திகை 1, விசாகம் 1, பிரதோஷங்கள் 2, கடைசிச் சுக்ரவாரம் 1 ஆகிய இந்த ஐந்து தினங்களிலும் ஸ்ரீ விநாயகர், மூலஸ்தானம் (சுப்பிரமணியர்), சண்முகர், வீரபாகு, வீரமஹேந்திரர், மேலவாசல் முக்குருணி விநாயகர், அருணகிரிநாதர், வெங்கடேசப் பெருமாள் இந்த சன்னிதிகளில் கவசங்களாலும், ஆபரணங்களாலும் அலங்காரம் செய்த விசேஷ தரிசனக் காக்ஷிகள் நடைபெறும். ஸ்ரீ சண்முகருக்கு வைரவேல், வைரக்கை மற்றும் வைர ஆபரணங்களும் சாத்தப்படும். பிரதி வெள்ளிக்கிழமை தோறும் வள்ளி, தேவசேனை சன்னிதிகளில் சொர்ண கவசங்கள் சாத்தப்படும்.

## சித்திரை மாதம்.

2. சித்திரை மாதம் 1-ம் தேதி (சித்திரை விஷு) காலை ஸ்ரீ ஷண்முகக் கடவுளுக்கு அன்னாபிஷேகம் நடைபெறும். இரவு எல்லா சன்னிதிகளிலும் கவசங்கள் ஆபரணங்கள் சாத்தப்படும்.

சுக்ல பக்ஷ ஷஷ்டி அன்று சைத்ர உத்ஸவம் ஆரம்பித்து பௌர்ணமி முடிய 10 தினங்கள் நடைபெறும். பௌர்ணமி இரவு எல்லா சன்னிதியிலும் கவசங்கள் ஆபரணங்கள சாத்தப்படும்.

## வைகாசி மாதம்

3. வைகாசிமாதம் சுக்ல பக்ஷ ஷஷ்டியில் வசந்தோத்ஸவம் ஆரம்பித்து வைகாசி விசாகம் வரை 10 தினங்கள் நடைபெறும். வைகாசி விசாக தினத்தன்று லக்ஷக்கணக்கான ஜனங்கள் சமுத்திர ஸ்னானம் செய்து ஆண்டவனை தரிசித்து அனுக்கிரஹம் பெறுவார்கள்.

## ஆனி மாதம்

4. உத்திர நக்ஷத்திரத்தில் ஸ்ரீ நடராஜப் பெருமானுக்கு விசேஷ அபிஷேக அலங்காரங்கள் நடைபெறும்.

பூச நக்ஷத்திரத்தன்று வருஷாபிஷேகம் நடைபெறும்; அன்றிரவு எல்லா சன்னிதிகளிலும் கவசங்கள் ஆபரணங்கள் சாத்தப்படும். அத்துடன் ஸ்ரீ குமரவிடங்கப் பெருமாள் வள்ளிநாயகியுடன் தங்கமயில்மீது ஆரோகணித்து வீதி வலம் வந்து காக்ஷியளிப்பார்.

**குறிப்பு :—இது 1116-ஆம் விஷு வருஷம் ஆனி மாதம் நடந்த ஜடிபந்தன வருஷாபிஷேகம்**

## ஆடி மாதம்

5. பூர நக்ஷத்திரத்தில் பார்வதி அம்மன் முளைக்கொட்டு ஊஞ்சல். சுவாதி நக்ஷத்திரத்தில் சுந்தரமூர்த்தி நாயனர் சேரமான் பெருமாளுடன் வெள்ளை யானையின்மீது கைலாசம் செல்லுதல். ஆடி அமாவாஸ்யை அன்று காலை தீர்த்தவாரியும், இரவு எல்லா சன்னிதிகளிலும் கவசம், ஆபரண அலங்கார காக்ஷியும் உண்டு.

## ஆவணி மாதம்.

6. அஸ்வதி நக்ஷத்திரத்தில் காலை ஆவணி மஹோத்ஸவ துவஜாரோஹணம். எல்லா சன்னிதிகளிலும் கவசம், ஆபரணங்கள் சாத்தப்படும். அன்றிரவு சுவாமி தந்தப் பல்லக்கில் ஆரோகணித்து பிரம்ம இந்திராதி திக்பாலகர் (9) சந்திகளில் அமர்ந்து காக்ஷியளித்து ஈசான்ய 9-வது சந்தியில் அமர்ந்ததும் கட்டியக் கைங்கர்ய திரிசுதந்திரர் மூலமாக, பிரம்ம, விஷ்ணு, ருத்ர, இந்திராதி தேவர்களை உத்ஸவ சம்பூர்ண தினம் வரை, இச்செயந்திபுரத்திலேயே இருக்கப் பணித்தருளல்.

| திருநாள் | | சுவாமி வாஹனம் | அம்பாள் வாஹனம் |
|---|---|---|---|
| 2 | காலை | சிங்கக் கேடயம் | பல்லக்கு |
| | இரவு | புஷ்பக் கேடயம் | புஷ்பக் கேடயம் |
| 3 | காலை | பூங்கோவில் | சித்திரக் கேடயம் |
| | இரவு | தங்கமுத்துக்கடா வாஹனம் | வெள்ளி அன்னவாஹன[ம் |
| 4 | காலை | ஷை | ஷை |
| | இரவு | வெள்ளி யானை வாஹனம் | வெள்யானை விராஞ்சி |
| 5 | காலை | ஷை | ஷை |
| | இரவு | தங்க மயில் வாஹன சேவை | தங்க மயில் |
| 6 | காலை | கோ ரதம் | — |
| | இரவு | இந்திர விமானம் | வெள்ளி கூர்ம வாஹ[னம் |
| 7 | காலை | கனக தண்டிகை | பல்லக்கு |

சர்வலோக நாயகன் ஸ்ரீ ஷண்முகக் கடவுள் திருக்கோவில் பொற் பீடத்திலிருந்து உருகுசட்டத்தில் எழுந்தருளி கேடயத்தி லமர்ந்து சர்வாலங்கார பூஷிதராய் இந்திரன் வெள்ளி பூச்சக்கிரவாள குடை தாங்க ஸ்ரீ பலி மண்டபம் வலம் வந்து ஷண்முக விலாசத்தில் அமர்ந்து திவ்யாபரண பூஷிதராய் வெற்றிவேர் புஷ்பக்கேடயத்தில் ஆரோகணித்து பிள்ளையன் மண்டகப் படிக்கு எழுந்தருளுதல்.

7 இரவு ஸ்ரீ ஷண்முகக் கடவுள் தங்க கேடயத்தில் எழுந்தருளி பிரம்மாம்ச தரிசனக்காக்ஷி யளித்தல். பின்புரம் நடனக்காக்ஷி.

விடியற்காலை ஸ்ரீ ஷண்முகக் கடவுள் வெள்ளிக் கேடயத்தில் எழுந்தருளி ருத்ராம்ச தரிசன காக்ஷியளித்தல்

| திருநாள் | சுவாமி வாஹனம் | அம்பாள் வாஹனம் |
|---|---|---|
| 8 காலை | ஸ்ரீ ஷண்முகர் பச்சை சாத்துக் கேடயத்தில் எழுந்தருளி விஷ்ணு அம்ச காக்ஷியளித்து திருக்கோவில் சேர்ந்து பொற்பீடத் தமர்ந்தருளல். | |
| இரவு | வெள்ளிக் குதிரை | வெள்ளிக் குதிரை |
| 9 காலை | நங்கை, நம்பிராஜன் சிர்பாத பல்லக்கு | — |
| இரவு | தங்க கைலாச பர்வதம் | வெள்ளி கூர்மம் |
| 10 காலை | திருத்தேர் | திருத்தேர் |
| இரவு | சப்தாவர்ண பல்லக்கு துவஜ அவரோஹணம். | பல்லக்கு |
| 11 இரவு | தெப்பம் ஆரோஹண காக்ஷி | |
| 12 மாலை | புஷ்பக் கேடயம் | புஷ்பக் கேடயம் |
| இரவு | புஷ்ப கேடயத்தில் ஆரோஹணித்து உத்ஸவ மூர்த்தி வீதி வலமாகத் திருக்கோவில் பிரவேசித்து பொற்பீடத்திலமர்ந்து, பிரம்ம, விஷ்ணு, ருத்ர, இந்திராதி தேவர்களுக்கு அநுக்கிரஹம் செய்து விடை கொடுத்தும் பக்தகோடிகளுக்கு அநுக்கிரஹித்து மங்களாக்ஷதை கொடுத்தருளல். | |

**குறிப்பு:**—உத்ஸவம் 2-வது திருநாள் முதல் 10-ம் திருநாள் வரை ஸ்ரீ ஜெயந்தி நாதர் காலை வெள்ளி கேடயத்திலும், இரவு தங்கக் கேடயத்திலும் எழுந்தருளி காக்ஷியளிப்பார்.

ஷை ஒவ்வொரு நாளும் ஸ்ரீ விநாயகர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர், சண்டிகேஸ்வரர் எழுந்தருளுதலும் உண்டு.

## புரட்டாசி மாதம்

7. நவராத்திரி உத்ஸவம்.

## ஐப்பசி மாதம்

8. ஐப்பசி மாதம் 1-தேதி (விஷு), ஸ்ரீ ஷண்முகர் அன்னாபிஷேகம். அன்றிரவு எல்லா சன்னிதிகளிலும் கவசங்கள், ஆபரணங்கள் சாத்தப்படும்.

சுக்ல பக்ஷத்துப் பிரதமையில் ஸ்கந்த சஷ்டி உத்ஸவம் ஆரம்பித்து 6 நாள் (சஷ்டி வரை) நடைபெறும். ஒவ்வொரு நாளும், சன்னிதிகளில் கவசங்களும் ஆபரணங்களும் சாத்தப்படும். பிரதி தினமும், உச்சிக்காலத்துக்குப் பின்னர் ஸ்ரீ ஜெயந்தீ நாதர் தங்கக் கேடயத்தில் ஆரோகணித்து திருவகுப்புப் பாடல்களும், மேளவாத்யங்களும் முழங்க, ஷண்முக விலாசத்துக் கெழுந்தருளி அடியார்களுக்கு அனுக்ரஹித்தல்.

ஸ்கந்த சஷ்டியன்று, ஸ்ரீ ஜெயந்தீநாதர் சமுத்திரக்கரைக்கு எழுந்தருளி தாரகன், சிங்கமுகன், சூரபதுமன் முதலியவர்களை சங்கரித்து, மயிலை வாஹனமாகக் கொண்டும், கோழியைக் கொடியாகக் கொண்டும் அடியார்களுக்கு காக்ஷி கொடுத்தருளல். மறுநாள் தேவநாயகி திருக்கல்யாணம்.

## கார்த்திகை மாதம்

9. திருக்கார்த்திகை நக்ஷத்திரத்தில் ஜோதி தரிசனம்.

## மார்கழி மாதம்

10. திருவாதிரையன்று ஸ்ரீ நடராஜர் தரிசன காக்ஷி காலையில் நடைபெறும். எல்லா சன்னிதிகளிலும் கவசங்கள் ஆபரணங்கள் சாத்துவார்கள்.

## தை மாதம்

11. தைப்பூச நக்ஷத்திரத்தில் எல்லா சன்னிதிகளிலும் கவசங்கள் ஆபரணங்கள் சாத்தப்படும். இரவு, அலைவாயுகந்த பெரு

மாள் தங்க மயில்மேலமர்ந்து வீதி வலம் வந்து திருக்கோயில் சேர்தல்.

தை உத்திர நக்ஷத்திரத்தில் வருஷாபிஷேகம். (இது கொல்லம் 1084-ஞ தைமீ நடந்த பிரதிஷ்டா அஷ்டபந்தனத்துக் குரியது.) இரவு எல்லா சன்னிதிகளிலும் கவசங்கள் ஆபரணங்கள் சாத்தப் படும். உத்ஸவர் தங்க மயில்மேலமர்ந்து வீதிவலம் வருதல்.

## மாசி மாதம்

12. மாசி மஹோத்ஸவம் (12 நாள்) மாசி மாதம் அஸ்வதி நக்ஷத்திரத்தில் உத்ஸவ துவஜாரோஹணம். இந்த உத்ஸவம் ஆவணி உத்ஸவத்தைப் போலவே, வாஹன காக்ஷிகளுடனும், தரிசனக் காக்ஷிகளுடனும் நடைபெறும். மக நக்ஷத்திரத்தில், பெரிய ரதம் வடம் பிடித்து, நிலையத்துக்கு வரும். ஆவணி உத்ஸவ விஷயங்களைப் பார்த்து விபரம் தெரிந்துகொள்ளவும்.

## பங்குனி மாதம்.

13. பங்குனி உத்திர நக்ஷத்திரத்தில் ஸ்ரீ வள்ளிநாயகி திருக் கல்யாணம் நடைபெறும். இரவு எல்லா சன்னிதிகளிலும் கவசங் களும், ஆபரணங்களும் சாத்தப்படும்.

---

திருச்செந்தூர்த் தலபுராணம் அருளிச் செய்த
ஸ்ரீ வென்றிமாலைக் கவிராயர் அவர்களின்
வழித்தோன்றல்,

**ஸ்ரீ குஞ்சு பாரதிகள் இயற்றிய பாடல்கள்.**

---

## திருவுந்தியார்.

1. வேலையின் மீதொரு வேலைவிட்டான் மாவின்
மூலமுறிந்ததென் றுந்தீபற
முச்சகமுய்ந்ததென் றுந்தீபற.

2. தாயறுவர்க்குத் தனித்தனி யாயிளஞ்
சேயாயினனென வுந்தீபற
திருவுருவொன்றென வுந்தீபற.

3. ஊடேறுமூர்த்தி யொழியா திருக்கவும்
ஆடேறினனென வுந்தீபற
அமரரைக் காக்கவென் றுந்தீபற.

4. மான் புதல்விக்காய் மயங்கிப் புனந்தனில்
கூன்கிழ வானான் என்றுந்தீபற
குமர னென்றைக்கும் என்றுந்தீபற.

5. துங்கமாம் கோழி, துவசமீதிருக்க கிளி
செங்கரங் கொண்டானென் றுந்தீபற
திருப்புகழ்க் கேழ்க்கவென் றுந்தீபற.

6. பன்னிரு கண்ணாலும் பார்த்தென் வினைதீர்த்து
இன்னருள் தந்தானென் றுந்தீபற
இனிக்குறை யில்லையென் றுந்தீபற.

7. பேயிற் கடையாய் பிதற்றும் புலையேனைத்
தாய்போலுங் காப்பான் என்றுந்தீபற
தாரகம் வேறார் என்றுந்தீபற.

8. எவ்வுருவாக, எவர் எண்ணிப் பார்க்கினும்
அவ்வுரு வாவானென் றுந்தீபற
அவனன்றி வேறார் என்றுந்தீபற.

9. மட்டார்கடம்பின் மலர்மார்பன் நான்மறைக்
கெட்டா தவனென வுந்தீபற
எட்டுவன் அன்பர்க்கென் றுந்தீபற.

10. மாமறைமூல மரபின் பொருள்தனை
தாமுரைத் தானென வுந்தீபற
சம்புவுக்குமென வுந்தீபற.

11. நற்கீரனுக்காய் நவை வரை தூள்படப்
புக்கீர்வேல் விட்டானென் றுந்தீபற
புகழ்த்தமிழ்ப் பாடவென் றுந்தீபற.

12. எல்லாம் நாமென எனது கனவினில்
சொல்லாமற் சொன்னானென் றுந்தீபற
துவைத மொழிந்ததென் றுந்தீபற.

---

# திருக்குணலை.

1. எண்ணில் ஜனனத் திந்தஜனனம்
 எதிலும் பெரிது குணலை
இதிலடைகுவ தடைந்திடா ரெனில்
 ஏது வருமோ குணலை.

2. ஐந்து முகமே ஆறு முகமாய்
 ஆளவந்தது குணலை
அதுவல்லாற்பொருள் பிறிதொன் றுண்டெனி[ல்
 அதுவு மதுவே குணலை.

3. சாத்திரத்தொடு மறை புராணங்கள்
 சாற்று மெய்ப்பொருள் குணலை
சர்வம் பிரம மயமிது வென்று
 தானாய் நின்றது குணலை.

4. எங்கும் நிறைந்த வெளியா யொளியாய்
 ஏகமானது குணலை
இரங்கி உயிர்கள் தமைப் புரந்திட
 இங்கு வந்தது குணலை.

5. போதனைக் குட்டிச் சிறையில் வைத்திந்தப்
 புவி படைத்தது குணலை
பொதிகை முனிக்கு மறையின் மரபின்
 பொருள் உரைத்தது குணலை.

6. அறிவினை லெட்டிப் பார்க்குந் தொறுந்தொறும்
 அகல நின்றது குணலை
அறிவை யறிய அறிவல்லாயல் வே
 றன்றி ஒன்றிலை குணலை.

7. எக்கடவுளும் எச்சமயமும்
யாது மானது குணலே
இதுவது வென எவரவர் சொலும்
இயல்பு மானது குணலே.

8. ஆறுமுகத் தோடிங் குதித்தருள்
ஐயன் சேவடி குணலே
அகங்கொண் டமைந்த அடியார்க் கடிமை
யாகித் தொண்டுசெய் குணலே.

---

## திருப்பல்லி.

1. செந்திநகர் வாழுகின்ற செம்மல் வருமாகில்
தேவர்கள் சிறைவிடுத்த தேவன் வருமாகில்
தந்திமுக னுக்கிளைய தம்பிவரு மாகில்
தாமதமில் லாமலினிச் சொல்லு சிறு பல்லி.

2. கோலமயி லேறிய குமரன் வருமாகில்
குஞ்சரி வள்ளிமகிழ் கொழுநன் வருமாகில்
நாலுமறை தேடரிய நாதன் வருமாகில்
நாடி ஒருக்கால் வரவு சொல்லு சிறு பல்லி.

3. உருவும் அருவும் ஒருவும் ஒருவன் வருமாகில்
ஓமெனும் பொருளுரைத்த உண்மை வருமாகில்
இருவினை யகற்றியருள் இன்பன் வருமாகில்
இன்னும் ஒருக்கால் வரவு சொல்லு சிறு பல்லி.

4. பூமனைச் சிறையிலிட்ட போதன் வருமாகில்
பூனைக்குயிரைக் கொடுத்த புண்யன் வருமாகில்
ஊமனையும் பாடஅருள் ஒருவன் வருமாகில்
உண்மை யுடனே வரவு சொல்லு சிறு பல்லி.

5. பாவி யெனைப் பாடஅருள் பட்சன் வருமாகில்
பக்தியின் எனைப்பணிகொள் பகவன் வருமாகில்
ஆவிதொரு மாய்நிறைந்த ஐயன் வருமாகில்
ஆவலுடனே வரவு சொல்லு சிறு பல்லி.

6. கனவினிடை வந்தருங் காட்சி வருமாகில் [கில்
காண்பவர்க் கெல்லாம் அருளும் கருணைவருமா
நனவினிடை காண இன்பம் நண்ண வருமாகில்
நன்மையுடனே வரவு சொல்லு சிறு பல்லி.

7. கடல் சுவற வேல்விடுத்த கர்த்தன் வருமாகில்
கண்புலவ னுக்கருள்செய் கந்தன் வருமாகில்
அடலுறுங் கயவனையும் ஆள்வோன் வருமாகில்
அன்புடன் அவர்வரவு சொல்லு சிறு பல்லி.

8. அன்பர்கட் கெல்லாப்பொருளும் ஆவோன் வருமாகில்
அருள்குட முனிக்கருளும் அண்ணல் வருமாகில்
என்பவந் தொலைத்தருள்செய் ஏந்தல்வருமாகில்
இன்புடனே நீ வரவு சொல்லு சிறு பல்லி.

---

## திருப்பேறு.

1. அடியார் தமைக் காத்தருள் புரியும்
அலையார் திருநகரில் வீற்றிருக்கும்
வடிவேலன் சந்நதி தனிற் றூங்கும்
மணியாக வேணும் நான் பெற்றிலேனே.

2. செவ்வேல் விடுத்தொரு மாவறுத்து
தேவருலகத் தினைப் பரிந்து
செவ்வே ளன்பாக எழுந்தருளும்
தெரு வீதியாகவும் நான் பெற்றிலேனே.

3. பண்ணிய பாவம் பறி கொடுத்து
பக்குவ மாகிப் பருவ முடன்
புண்ணியன் றன்மேனி தனிற் பொருந்தும்
பூமாலை யாகவும் நான் பெற்றிலேனே.

4. விண்ணவர் மண்ணவர் வந்து தொழ
வேலைக்கரை நகரில் வேலை யேந்தும்
பண்ணவன் றன்றிருக் கோயில் வாசல்
படியாக வேனும் நான் பெற்றிலேனே.

5. இதாவஹித மின்றி யென்னை யாண்ட
ஏழைபங் காளனை ஏத்துதற்கு
சதா வேளையும் அடியார் நடக்கும்
தள வரிசையாய் நான் பெற்றிலேனே.

6. சந்ததம் தேவர் முனி வரர்கள்
சிந்தனை செய்து தினம் பணியும்
கந்தன் முருகன் கடம்பனுக்கு
காணிக்கைக் குடமாகப் பெற்றிலேனே.

7. பொய்யுளத் தென்றும் புகவரியார்
போக்கு வரவற்ற புண்ணியனார்
அய்யன் கொலுவாய் அமர்ந்தருளும்
ஆலய மாகவும் நான் பெற்றிலேனே.

---

# பிழை திருத்தம்.

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 1 | பூக்துப் | பூக்துப் |
| 3 | ஓழுக்கச் | ஒழுக்கச் |
| | போற் | போற்றுஞ் |
| 4 | துனை | துணை |
| 6 | வேத் | வேத |
| 7 | கூப்பியகயினராய் | கூப்பிய கையினராய் |
| | சிந்துதிர்மும் | சிந்துதிரமும் |
| | இரண்டாயிரத்தாரெப்படும் | இரண்டாயிரத்தாரெனப்ப[டும் |
| 9 | பணிவார | பணிவார் |
| | பாங்களினின்றும் | பாபங்களினின்றும் |
| 10 | சேய்வதினைல் | செய்வதினைல் |
| 13 | ஸ்கத்த | ஸ்கந்த |
| | கந்தளேந்திர | கந்தளேந்திரர் |
| | நாகர்ச் | நர்கார்ச் |
| | சசத்வம் | ஈசத்வம் |
| | இச் | இத் |
| 14 | சஞ்சீதம் | சஞ்சிதம் |
| 15 | பாடங்கள் | பாபங்கள் |
| | மார்க்கங்க் | மார்க்கங்க |
| | லியாவருங் | ரியாவருங் |
| | ளிருந்தாண் | ளிருதாண் |
| | தெனறனன் | தென்றனன். |
| 16 | பூாவ | பூர்வ |
| | ஐந் து | ஐந்து |
| | னின்ப | னின்பு |
| | அம்படிச் | அப்படிச் |
| 17 | கொடுத்து | கொடுக்க |
| | முககி | முக்தி |

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 18 | ஸர்வணத் | ஸ்ரவணத் |
| 21 | எனம்படும் | எனப்படும் |
| 22 | முனிவரர்களுஇ | முனிவரர்களுக் |
| 23 | உட்னேயே | உடனேயே |
| 24 | மாஹா | மஹா |
| 25 | தலங்களேயும் | தவங்களேயும் |
| | ஆஞ்ஞை | ஆக்ஞை |
| | ம்னக்கவலே | மனக்கவலே |
| 26 | விய்ர்த்து | வியர்த்து |
| | குரிய | கரிய |
| | ஸ்கத்த | ஸ்கந்த |
| 27 | புளகாங்கிர்தம் | புளகாங்கிதம் |
| 28 | ூதன | தென |
| | யுடையதாம | யுடையதாம் |
| 30 | பேறறிளே | பேற்றினேயுடைய |
| | மேன்கை | மேனகை |
| 31 | முழககமாம் | முழக்கமாம் |
| 32 | மானங்கொண்டு | தானங்கொண்டு |
| | அம்பர | அம்பரம் |
| | பொருணே | பொருனே |
| | பொருணே | பொருனே |
| 33 | இன்னமுர | இன்னமுத |
| 34 | அல்வில்ல | அல்லிமல |
| | சரவ | சர்வ |
| 35 | கறபக | கற்பக |
| | ஸ்வருதம் | ஸ்வரிதம் |
| | வருனி | வருணி |
| | கொறியும் | சொரியும் |
| 36 | ஸ்நானங் | ஸ்தானங் |
| 37 | ஓலிக்கும் | ஒலிக்கும் |
| 38 | அவ்வுததர | அவ்வுத்தர |
| | வீனே | வீணே |

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 39 | ஆஞ் | ஆக் |
| | முன்னிந்து | முன்னீந்து |
| 40 | மீக்கிய | நீக்கிய |
| | கோண் | கோன் |
| | நெசிழ | நெகிழ |
| 41 | வசை | வரை |
| 42 | எகினன் | ஏகினன் |
| 44 | பிறைச | பிறைச்ச |
| 45 | வன்றனே | வன்றளை |
| | தினைந்புன | தினைப்புன |
| 47 | வகசி | வாசி |
| 48 | கொள்ளி | கொன்னி |
| 53 | தேள | தேவ |
| 54 | வழிப்பட | வழிபட |
| | வானர் | வானவர் |
| | திரு | தரு |
| 55 | நுங்கனை | நுங்களை |
| 56 | மருந்த | மருத்க |
| 57 | தமர்ந்து | தமர்ந்தது |
| 58 | சேக்ர்க்கும் | சேர்க்கும் |
| 60 | மாமராகிய | மாமரமாகிய |
| 61 | தியன | தியான |
| 62 | வைத்தா | வைத்து |
| | னையும் நீங்கிய | னையும் உயிர்நீங்கிய |
| | கருனே | கருணை |
| 63 | மாத்திரதல் | மாத்திரத்தில் |
| 65 | உன்மையை | உண்மையை |
| 67 | மக்ளுக்கு | மகளுக்கு |
| 68 | பினவற்றை | பிறவற்றை |
| | துன்மை | துண்மை |
| 70 | ஒண்ணிக்கை | எண்ணிக்கை |

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 70 | யற்ருரம் | யாற்ருரம் |
| 71 | செபந்தி | செயந்தி |
| | பழுவாது | வழுவாது |
| | மரை | மறை |
| | ஆயிரம் | ஆருயிரம் |
| 72 | மாஹவிஷ்ணு | மஹாவிஷ்ணு |
| 73 | பிரு | பிரரு |
| | பக | பகை |
| | வேளாறெத்து | வேளாறெழுத்து |
| | முற்றுணர் | முற்றுணரும் |
| 74 | பிரப்பு | பிறப்பு |
| 75 | நவையனு | நவையறு |
| | காட்சு | காட்சி |
| | கவன | கவுள |
| | சததனம் | சததளம் |
| | மான்பினேர் | மாண்பினேர் |
| 76 | தாமாரை | தாமரை |
| | சேனும் | சேறும் |
| | அருந்துவர் | அழுந்துவர் |
| 77 | வெற்கர | வேற்கர |
| 78 | அதமாம் | அதமமாம் |
| 79 | பூருக | முருக |
| | தரிசணம் | தரிசனம் |
| | பெரும் | பெறும் |
| 82 | செந்திபுரம் | செயந்திபுரம் |
| | மான | மான் |
| | வியாழனும் | வியாழனும் நான் |
| | தேவர்களுக்குள்ளே | தேர்களுக்குள்ளே |
| | பொற்றெரும் | பொற்றேரும் |
| | மனத்தரல் | மணத்தால் |

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 83 | பரியல் | பரியில் |
| | வலினம் | வலிமை |
| | சாபமும் | சரபமும் |
| | வியக்கப்டும் | வியக்கப்படும் |
| 85 | பதிமூனவது | 13-வது |
| | வேறய | வேருய |
| | கருது கற் | கருதுதற் |
| 87 | யோகிகளின் | யோகிகளில் |
| | திருமேணி | திருமேனி |
| | அனேகோடி | அனேககோடி |
| | உள்ளத்தையும் | உள்ளதையும் |
| | கொடியப்படை | கொடிய படை |
| 88 | மணம் | மனம் |
| | பயப்டுகின்றேன் | பயப்படுகின்றேன் |
| | ஸ்ரூபமாக | ஸ்வரூபமாக |
| | அரம்மையர்கள் | அரம்பையர்கள் |
| | நடுக்கி | நடுங்கி |
| | திருக | திருக் |
| 89 | முற்றிரவு | முற்றரிவு |
| 90 | னெழுதி | னெழுத் |
| | ரூற்றிளோர் | ரூற்றுளோர் |
| | தம்தமக் | தம்மைக் |
| | நமாத்தை | நாமத்தை |
| | அக. யோகத்தமர்ந்து | அகம்கிழ்ந்து யோகத்தமாங் [து |
| | பெறறும் | பெற்றும் |
| 91 | கூறுயருளினதை | கூறியருளினதை |
| | சூகமுனி | சுகமுனி |
| 91 | அமரகளிர் | அமரர்களில் |
| | காகதே | காகவே |
| | காவசீ | காகசீ |

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 91 | பரித்த | பாலித்த |
| | ைமருவிற் | ைருமச் |
| | சுறவெதிரு | சுறவெதிரி |
| | மொரி | மொரு |
| | கொள்ளவடிவு | கொண்டுள்ள வடிவு |
| 93 | குமாரான | குமரரான |
| | நரநாராயணர்கள் | நரநாராயணர்கள் |
| | ருத்ர, | ருத்ரர் |
| | மும்மூக்ஷமக்களுக்கு | முமூக்ஷ ுக்களுக்கு |
| 94 | மங்தப | மங்தப் |
| | விற்ல்கெங் | விறல்கொ |
| | ஏன் | என் |
| 95 | வேறரல்லர் | வேறல்லர் |
| | சொல்லும்பெயர் | சொலும் பெயர் |
| | சேர்த்துக்காட்டி | சேர்ந்து காட்டி |
| | மணியைனகைச் | மணியனகைச் |
| | சேர்ந்துத்தான் | சேர்ந்துதான் |
| 96 | [illegible]ழுத்திலா | வழுத்திலா |
| | ஞனேப் | ஞானப் |
| | ரகத்தின் | ரகரத்தின் |
| 97 | சாதசிவ | சதாசிவ |
| | மகரம், உகரம் | உகரம், மகரம் |
| | தெரிந்துக்கொள் | தெரிந்துகொள் |
| | நரரதன் | நாரதன் |
| | காருடறப் | காருடப் |
| | முருகனை | முருகனை |
| | கெயந்திபுரம் | செயந்திபுரம் |
| 98 | வரைச்சுக | வரைச்சக |
| | வுளை | வுள் |
| | வீற்றிருந்தனர் | வீற்றிருந்தருளுகிறார். |
| | தேற்கை | வேற்கை |
| | சனைமளாற்ற | சனைகளாற்ற |
| 100 | மத்தகதில் | மத்தகத்தில் |
| | இழைந்த | இழைத்த |
| | வேற்படை கடவுளது, | வேற்படைக் கடவுளது |

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 101 | சமுச்ச | சமுச்சய |
| 103 | கையிலே | கைலே |
| | வடிவும் | வடிவம் |
| 104 | யஜபர் | யஜுர் |
| | விடைப்பெற்று. | விடைபெற்று |
| | கொண்டிருந்தது | கொண்டிருந்தார். |
| 105 | தீத்தத்திலும் | தீர்த்தத்திலும் |
| 106 | பெுற்ற | பெற்ற |
| 107 | வாருபேய | வாஜபேய |
| 109 | மும்முமை | மும்முறை |
| | உரக்க | உரக்கச் |
| 110 | மகிழ்து | மகிழ்ந்து |
| | வித்ததைகளைப் | வித்தைகளைப் |
| | செல்வனே | செவ்வனே |
| 11 | ொரிய | பெரிய |
| | ொருள் | பொருள் |
| | கீர்ந்தி | கீர்த்தி |
| | எனக் தொல்காப்பியத்தில் | எனத் தொல்காப்பியத்தில் |
| | செய்கைளே | செய்கைகளே |
| ௪ | சே ர்:து | சேர்ந்து |
| | சுருதியேடும் | சுருதியோடும் |
| | சூட்டத் | சூட்டப் |
| | களாகி | காளாகி |
| 11 | ாரதித்த | பாதித்த |
| 124 | ரண்யதில் | ரண்யத்தில் |
| | ஆற்றில் | ஆற்றின் |
| | புளங்கா | புளகா |
| | சிவஸ்த்த | சிவஸ்த |
| | பகத்திலே | பக்கத்திலே |

# தமிழில் பாணி சீரீஸ் புத்தகங்கள்.

1 யஜுர்வேத ஸந்தியாவந்தனம் தர்ப்பணம்
2 ருக்வேத ௸ ௸
3 ஸ்யாமளா தண்டகம்
4 முகுந்த மாலை நாமாவளியுடன்
5 ஸாமவேத ஸந்தியாவந்தனம் தர்ப்பணம்
6 ஸ்தோத்ரமாலா அல்லது ஸ்துதி மஞ்சரி
7 கல்பத்ரயம் கணபதி - ஸரஸ்வதி - வரலக்ஷ்மி பூஜை
8 விஷ்ணு ஸகஸ்ரநாமம்
9 சுப்ரமண்ய புஜங்க ஸ்தோத்ரம்
10 லக்ஷ்மி ஸகஸ்ரநாமம்
11 லலிதா ஸகஸ்ரநாமம்
12 சுப்ரமண்ய பூஜாவிதி
12 புருஷ சூக்தம் - ஸ்ரீ சூக்தம் முதலிய
14 இந்திராக்ஷி சிவகவசம்
15 ஆதித்ய ஹிருதயம் அர்த்தத்துடன்
16 ஸௌந்தர்யலஹரி
17 பஜகோவிந்தம் கோபிகாகீதை
18 சுப்ரமண்ய ஸகஸ்ரநாமம்
19 லக்ஷ்மி அஷ்டோத்ரம் அர்த்தத்துடன்
20 சிவாநந்தலஹரி
21 யஜுர் உபாகர்மம்
22 நவக்ரஹ ஸ்தோத்ரம்
23 பூஜாராமாயணம் நாமராமாயணம்
24 அகிலாண்டேச்வரி அக்ஷரமாலிகா
25 யஜுஸ்ஸந்தியா பாஷ்யம்
26 சங்கராந்திபூஜை - கோபூஜை
27 மார்க்கபந்து ஸ்தோத்ரம்
28 நித்யான்னிகம்
29 ஸதாசிவகீர்த்தனங்கள்
30 அஷ்டபதி கீதகோவிந்தம்
31 விஷ்ணுபாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்
32 தேவி நித்யபாராயணம்
33 தேவி கட்கமாலா
34 அஷ்டோத்ர கதம்பம்
35 மகிஷாசுரமர்த்தனி ஸ்தோத்ரம்
36 லலிதா த்ரிசதி
37 பில்வாஷ்டோத்திரம்
38 தேவி மகாத்மியம்.
39 நீதிசாஸ்திரம் உரையுடன்
40 சிவ ஸகஸ்ரநாமம்
41 கணபதி ஸகஸ்ரநாமம்
42 துர்க்காஸகஸ்ரநாமம்